# மீனாட்சியம்மன் திருப்புகழ்

## ( MEENAKSHI AMMAN THIRUPPUGAZH )

*பதிப்பாசிரியர்*

வே. இரா. மாதவன்

Editor

V. R. MADHAVAN




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி. டி. டி. ஐ. தரமணி,

சென்னை - 600 113

International Institute of Tamil Studies

T. T. T. I. Taramani

MADRAS - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | ... | Meenakshi Amman Thiruppugazh |
| Editor | ... | V. R. MADHAVAN, B.Sc., M.A., B.Ed., Diploma in Manuscriptology, Research Assistant, International Institute of Tamil Studies, TTTI Post, Madras-600 113. |
| Publisher | ... | International Institute of Tamil Studies, TTTI Post, Madras-600 113 |
| Publication Number | ... | 62 |
| Language | ... | Tamil |
| Date of Publication | ... | 2nd, February, 1983 |
| Edition | ... | First |
| Paper used | ... | 16 kg. D/Demy |
| Size of the book | ... | 21 × 14 cms. |
| Printing types used | ... | 10, 12, 18 points |
| No. of Copies | ... | 1200 |
| No. of Pages | ... | vi+224=230 |
| Price | ... | Rs. 10/- (Rupees Ten) |
| Printers | ... | Arulmani Printers, 8, 59th Street, Ashok Nagar, Madras-600 083 |
| Binding | ... | Section, Cardboard |
| Artist | ... | V. R. Madhavan |
| Subjeet | ... | Thiruppugazh verses on Goddess Meenakshi of Madurai. Edited and Published from a palm leaf Manuscript. |

# முன்னுரை

டாக்டர் ச.வே. சுப்பிரமணியன்
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி. ஐ., அஞ்சல், சென்னை-600 113.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அச்சில் வராத பல நூல்களை வெளியிட்டு வருகின்றது. ஓலைச் சுவடிகளைப் படிக்கவும் பதிப்பிக்கவும் நிறுவனம் கற்பித்து வருகின்றது. அந்தக் கல்வியில் முதல் வகுப்பில் முதலாவதாக வெற்றி பெற்ற திரு. வே. இரா. மாதவன் அவர்களின் ஆய்வேடாக மீனாட்சி அம்மன் திருப்புகழ் அமைந்துள்ளது. அது சிறந்த நூலாக அமைந்துள்ளதால் அதை வெளியிடலாம் என்று கருதினோம். இப்போது அந்த நூலை வெளியிடுகிறோம்.

ஏற்கனவே திரு. வே. இரா. மாதவன் அவர்கள் 'கண் மருத்துவம்' என்ற நூலைத் தமிழ் உலகிற்குத் தந்துள்ளார். அதனைத் தொடர்ந்து இந்த நூல் வெளிவருகின்றது. திரு. மாதவன் அவர்களின் உழைப்பைப் பாராட்டுகிறேன். தமிழ் உலகிற்கு இந்த நூல் பயன்படும் என்று நான் கருதுகிறேன்.

நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும், ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் செ, அரங்கநாயகம் அவர்களுக்கு மிக்க நன்றி.

குறுகிய காலத்தில் மிகச்சிறப்பாக அச்சிட்டுத் தந்த அருள்மணி பிரிண்டர்ஸ் உரிமையாளர் திருமதி அருள்மணி குணசேகரன் அவர்களுக்கு எங்கள் நன்றி.

அன்புள்ள,

ச. வே. சுப்பிரமணியன்

# நன்றியுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்திவரும் சுவடியியல் கல்வித் தேர்வின் ஒரு பகுதியாக, இதுவரை பதிப்பில் வராத ஒரு நூலினை அறிமுகப்படுத்தும் நோக்கில் பதிப்பாய்வேடு அளிக்கப் படுகிறது. இவ்வகையில் அமைந்த 'மீனாட்சியம்மன் திருப்புகழ்' என்னும் தலைப்பிலான ஆய்வேடு அச்சு நூலாக மலர்வதில் மகிழ்ச்சியடைகிறேன்,

ஆய்வுக்கு நாயகமாய் நின்று நாள்தோறும் பல இளமறிவுக் களஞ்சியங்களை உருவாக்கி வரும் நிறுவன இயக்குநர் பேராசிரியர் டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், எம். ஏ., பி எச். டி., அவர்களின் சீரிய முயற்சியே இந்நூல் மலர்ச்சிக்குக் காரணம். அவர்தம் தமிழ்ப்பணிக்கு என் பணிவான வணக்கத்தையும் நன்றி யையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சுவடியியல் பயிற்சியிலும், இந்நூல் பதிப்பிலும் அவ்வப்போது ஊக்கமூட்டி உதவிய டாக்டர் க. த. திருநாவுக்கரசு, எம்.ஏ., பி எச்.டி., திரு பூ. சுப்பிரமணியன், எம். ஏ., பி. லிட்., பி.டி., திரு மு. கோ. ராமன் ஆகியோருக்கும் பெரிதும் நன்றியுடையேன்.

இந்நூலினை ஏட்டிலிருந்து படியெடுக்க உதவிய சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாட்சியர் அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக அச்சிட்டளித்த அருள்மணி அச்சகத்தார்க்கும் என் நன்றி உரித்தாகிறது.

வே. இரா. மாதவன்

# உள்ளே

# பதிப்புரை

தமிழரின் பெருமைகளை விளக்கும் பழந்தமிழ் ஓலைச் சுவடி களைப் படித்தாய்வது என்பது ஒரு நுண்ணிய கலை. இத்துறை யில் தமிழகத்தில் டாக்டர் உ. வே. சாமிநாதையர், திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை, திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை போன்ற பெரியோர்கள் செயற்கரிய செயல்களைப் புரிந்துள்ளனர். இவர்களது அடிச்சுவட்டைப் பின்பற்றி பலரும் இத்துறையில் ஈடுபட்டுள்ளனர். ஆயினும் தற்போது வெளிவரும் பதிப்புகளில் சுவடி பதிப்புகள் மிகவும் குறைவே. பல நூல்கள் இன்னும் அச்சில் வரவில்லை. வெவ்வேறு துறைகளில் காணப்படும் பல்வேறு நூல் களும் பதிப்பில் கொண்டுவர வேண்டியுள்ளன.

தமிழில் சிறு பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு வகை என்பது ஒரு மரபு. ஆயின், எண்ணற்ற புதுவகை இலங்கியங்களும் காலந் தோறும் வளர்ந்து வந்துள்ளன. 'திருப்புகழ்' என்னும் சிறந்த இலக்கிய வகை அருணகிரிநாதரால் தோற்றுவிக்கப்பட்டது. இவர் பாடியதாகக் கூறப்படும் 16,000 பாடல்கள் முழுதுமாக இன்று கிடைக்கவில்லை. சுவடிகள் கிடைக்காமையும் பாதுகாப்பின்மை யும் இதற்குக் காரணமாகலாம். இவரைத் தொடர்ந்து மேலும் பல 'திருப்புகழ்' பாடல்கள் எழுந்துள்ளன. அவற்றுள் பதிப்பில் வந்துள்ளவை ஒரு சில. வராதவை பல.

'மீனாட்சியம்மன் திருப்புகழ்' என்னும் இந்நூல் இதுவரை பதிப்பிக்கப்படாமல் சுவடி வடிவிலேயே உள்ளது. மதுரை மீனாட்சியம்மனின் திருப்புகழைப் பாடும் ஒப்பற்ற இந்நூல், முத்தமிழுலகம் பயனுறும் வகையில் முதன்முறையாகப் பதிப்பிக் கப்படுகிறது.

### ஓலைச் சுவடியைப் பற்றிய செய்திகள்

மீனாட்சியம்மன் திருப்புகழ் என்னும் இந்நூல் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. ஆர். நெ. 4454 எண்ணுள்ள இந்நூல் பனை ஓலை ஏடுகளில் எழுதப்பட்டு பாது காக்கப்பட்டுள்ளது.

### ஓலையின் காலம்

இந்நூலில் இறுதி ஏட்டில் "1879 ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 11 ஆம் நாள் வெகுதானிய வருஷம் தை மாதம் 30 ஆம் நாள் காருக்குரிச்சியிலிருக்கும் வெங்கடாசலமய்யன் மீனாட்சியம்மன் திருப்புகழ் தனதுக்கு எழுதிக் கொண்டேன்" என்ற தொடர் காணப்படுகிறது, எனவே, இந்நூல் 100 ஆண்டுகளுக்கு முன்பு ஏட்டில் பிரதி செய்யப்பட்டது என அறிய முடிகிறது.

### ஓலை அமைப்பு

இந்நூலில் 1 முதல் 40 வரையான ஏடுகள் தொடர்ச்சியாக உள்ளன. ஒவ்வொரு ஏடும் 35 செ. மீ. நீளமும் 2½ செ. மீ. அகல மும் கொண்டதாகும். ஓலை பழமையானது. ஆயினும் நன்கு பாதுகாக்கப்பட்டிருத்தலின் சுவடியில் ஒடிவும் பொடிவும் துளை யும் இல்லை,

### பாடல் அடி அமைப்பு

இந்நூலில் 104 பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு ஏட்டின் இரு பக்கங்கள் முழுவதும் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு பக்கத்திலும் 9 அல்லது 10 வரிகள் உள்ளன. பாடல் அடிகள் அடிவரையறை யில்லாமல் உரைநடை போலத் தொடர்ந்து எழுதப்பட்டுள்ளன.

### எழுத்து அமைப்பு

கையெழுத்து ஒரே மாதிரியாக உள்ளது. ஒற்றெழுத்துக் களுக்குப் புள்ளி இல்லாமலும். இரட்டைக்கொம்பெழுத்து அரிதாக வும் எழுதப்பட்டுள்ளது. 'ா'–'ர' இவற்றிற்கும் வேறுபாடு இல்லா மல் எழுதப்பட்டுள்ளது. வடமொழி எழுத்துக்கள் சில காணப் படுகின்றன.

பாடல்களின் இறுதியில் பாடல் எண்ணும், ஏடுகளின் இடப்புற ஓரத்தில் ஏட்டு வரிசை எண்ணும் தமிழ் எண்களால் எழுதப் பட்டுள்ளன.

### படி எடுத்தலும் ஒப்பிடலும்:-

இது மூலச்சுவடி அன்று. காருக்குரிச்சியிலிருக்கும் வெங்கடா சலமய்யன் என்பவரால் படியெடுக்கப்பட்ட தென்பது நூலின் இறுதியில் காணப்படும் குறிப்பின் மூலம் அறிய முடிகிறது.

ஏட்டில் பிரதி செய்யப்பட்ட பிறகு விடுபட்ட எழுத்துக்களும் சொற்களும் இருவரிகளுக்கு இடையே உள்ள இடத்தில் எழுதப் பட்டுள்ளன. தவறாக எழுதப்பட்டிருந்த வரிகளும் எழுத்துக் களும் அடிக்கப்பட்டுள்ளன. இத் திருத்தங்கள் யாவும் வேறொரு வரால் ஒப்பிடப்பட்டு எழுதப்பட்டவை என்பது கையெழுத்து வேறு பாட்டால் புலனாகிறது.

### பதிப்பாய்வின்போது நிகழ்ந்தவை:-

பாடல் அடிகள் தொடர்ச்சியாக எழுதப்பட்டுள்ளதால் அடி வரையறை செய்வது கடினமாயிருந்தது. ஓரிரு அடிகள், மிகுதி யான சொற்களைப் பெற்றும், சில அடிகளில் சில சொற்கள் குறைந்தும், சில பாடல்களில் சில அடிகளே விடப்பட்டும் உள்ளன. ஒவ்வொரு பாடலிலும் இவ்வாறு நுணுகி ஆராயும் போது சில இடங்களில் தடுமாற நேர்ந்தது. கையெழுத்து விளங் காத இடங்களிலும் எழுத்துப் பிழைகள் நேர்ந்துள்ள இடங்களிலும் இது தான் சரியான பாடம் என உறுதி செய்து கொள்ளத் தயங்க நேர்ந்தது.

அக்கால எழுத்து முறையை அறிவதுடன் சந்தவேறுபாடு, எதுகை, மோனை, குறில், நெடில் இவற்றை நினைவில் கொண்டே பாடல் அடிகளைப் பிரித்தும், மடக்கியும் அமைக்க வேண்டியிருந்தது.

### சுவடிகளில் பிழை ஏற்படக் காரணங்கள்

"நூல் போற்றும் முறையில் சுவடிகளில் எழுதியே கற்கும் நிலைமைதான் அந்நாளில் இருந்தது. ஆதலால், கற்பார் நூல்

களையும் அவசியம் எழுதியாக வேண்டும். அவ்வாறு எழுதும் பொழுது, ஒருவர் சொல்லக் கேட்டுப் பிறர் படி எழுதுதலும், ஒரு படியை நோக்கி வேறுபடி எடுத்தலும் வழக்கமாயிருந்தது.''

''ஒருவர் சொல்லக் கேட்டு எழுதும்பொழுதும் அல்லது தாமே பார்த்து எழுதும் பொழுதும் ஒலி ஒப்புமையுடைய எழுத்துக் களையும் உருவ உப்புமையுடைய எழுத்துக்களையும் தவறுதலாக ஒன்றற்குப் பதிலாகப் பிறிதொன்றை எழுதி விடுதல் இயல்பே. சொல்வார் எழுப்பும் ஒலி வேற்றுமையாலும், அவரிடம் தோன்றும் அயர்ச்சியாலும் ஒன்று பிறிதாக உணரவும், மூலப்படியில் சில விடு படவும் நேரலாம். ஒத்த ஓசையும் பொருளுமுடைய சொற்களைச் சொல்லுவார் ஒன்றற் கொன்றாகக் கூறவும் இடமுண்டு, சந்தி சேர்ந்தும் பிரிந்தும் வரும் சொற்றொடர்களை மூலப் படியிற் போலவன்றிச் சொல்லுவார் எழுதுவார் தத்தம் விருப்பம் போலப் பிரித்தும் சேர்த்தும் எழுதும் நிலை ஏற்படும். அன்றியும் நன்கு ஊன்றிக் கவனியாமல் சந்தி வேண்டுமிடங்களில் விடுத்தும் வேண்டா இடங்களில் பெய்தும் பிழை மலியவும் ஏதுவாகும்.''

''கேட்டு எழுதுவதிலும் பார்த்து எழுதுவதிலும் கண்ணயர்வு மிகுதியும் நேரும். முந்திய மூலப்படி செவ்வையான எழுத்துருவம் பெறாதிருந்தால், ஓர் எழுத்தை அதனையொத்த வடிவுடைய பிறி தோர் எழுத்தாக மயங்கி எழுதவும் கூடும். எழுதும்பொழுது எழுதுபவர் தாம் படித்த ஒத்த சொற்பொருள்களும் நினைவுக்கு வர மூலப்படியில் உள்ளவாறு எழுதாது, தமக்கு அப்போது நினை வில் தோன்றிய புத்துருவங்களை இடைமடுத்தலும் இயலும். மேலும், எழுதுவார் தமது சொந்த விருப்பு வெறுப்புக்களைப் பொறுத்தும் எழுதுவதில் சில மாறுபாடுகள் செய்துவிடலாம். விரைந்து எழுதுவாராயின். சிலசமயம் மூலப்படியில் உள்ள சிற்சில பகுதிகள் அங்கங்கே விடுபடவும் நேரலாம்.''1 என்பர்.

எனவே, சுவடி பதிப்பித்தலில் இவற்றைக் கருத்தில் கொண்டே பதிப்பிக்க வேண்டியுள்ளது.

---

1. திரு. மு. சண்முகம் பிள்ளை—திருக்குறள் ஆராய்ச்சி–1 திருக்குறள் யாப்பு அமைதியும் பாடவேறுபாடும். பக்கம்–101, 102.

## பதிப்பாய்வின் போது செய்யப்பட்ட ஒழுங்குகள்

### 1) பிழை நீக்கல்:—

இந் நூலில் காணப்படும் கீழ்க்கண்ட எழுத்து மாற்றங்களைப் பாடலின் பொருள், சந்தம், பொருத்தம் தோன்ற திருத்தி அமைத்துள்ளேன்.

குறிப்பாக இந்நூலில் ழகர ளகரங்கள், ககர சகரங்கள், தந் நகர றன்னகரங்கள், லகர வகரங்கள், ரகர றகரங்கள் என்பவை ஒன்றுக்கொன்று மாறாக எழுதப்பட்டுள்ளன.

ஒற்றெழுத்துக்களுக்குப் புள்ளி கிடையாது.

கொம்பெழுத்தைக் கொண்டு குறில், நெடில் வேறுபாடு அறிய முடிவதில்லை,

'ற்ற' என வருமிடங்களில் 'த்த' என்றும், இவை மாற்றம் பெற்றும் பல இடங்களில் உள்ளன.

'ா' வும் 'ர' வும் வேறுபாடு இன்றி 'ா' எனவே எழுதப் பட்டுள்ளன.

ெ, ே, ரு, டீ, கு. சு, ளு—இவை ஒன்று போல எழுதப் பட்டுள்ளன. ண, ன—ை, ந இவையும் இவ்வாறே எழுதப் பட்டுள்ளன.

இது போலவே ப, ம. ல, ய போன்ற எழுத்துக்களும் ஒன்றற் கொன்று மயக்கந் தருபவையாக எழுதப்பட்டுள்ளன.

'கள்' என்னும் விகுதி 'யள்' என்றே எழுதப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பாடலிலும் காணப்படும் இத்தகைய பிழைகளைத் திருத்தி அமைத்துள்ளேன்.

சான்று:-சமைதத-சமைத்த (66), தெவி-தேவி (12), தண டையள—தண்டைகள் (18), தமிள—தமிழ் (1).

இவ்வாறு திருத்தம் பெற்ற சொற்களில் சிலவற்றைப் பின்னிணைப்பு 1இல் அமைத்துள்ளேன்.

2. அடிவவரயறை:—

திருப்புகழ் பாடல் அமைப்பிற்கு ஏற்பப் பாடல் அடிகளைப் பிரித்து அமைத்துள்ளேன்.

3. தலைப்பு:—

பாடல்கள் ஒவ்வொன்றிற்கும் தலைப்பு கொடுத்துள்ளேன்.

4. சந்தக்குறிப்புகள்:—

பாடலின் சரியான சந்தக் குறிப்பினை அறியாது அடிவரையறைச் செய்வது மிகவும் கடினமாகும். சந்தக் குறிப்புகள் சுவடியில் கொடுக்கப்படவில்லை. எனவே, ஒவ்வொரு பாடலுக்கும் உரிய சந்தக் குறிப்புகளைத் தெளிந்தறிந்து ஒவ்வொரு பாடலின் தொடக்கத்திலும் அடைப்புக் குறிக்குள் கொடுத்துள்ளேன்.

5. சில இடங்களில் மட்டுமே சந்தி பிரித்து எழுத முடிந்தது சந்தப் பாடல்கள் ஆதலால் அடிகளை மடக்கி எழுதும்போது பல இடங்களில் சந்தி பிரிக்காமலே எழுதப்பட்டுள்ளன.

6. பாடல்களில் விடுபட்டுள்ள சில எழுத்துக்களையும், சொற்களையும் நிரப்பி அடைப்புக் குறிக்குள் அமைத்துள்ளேன்.

7. விடுபட்டுள்ள வரிகளையும், சொற்களையும் குறிக்க ஆங்காங்கே புள்ளிகளையிட்டுள்ளேன்.

8. சில பாடல்களில் யோகம் பற்றியும், சாத்திரங்கள், மந்திரங்கள் பற்றியும் செய்திகள் கூறப்படுகின்றன. விரிவுக்கு அஞ்சிய காரணத்தால் அவை பற்றி விரிவான குறிப்புக்களைக் கொடுக்கவில்லை.

9. ஒவ்வொரு பாடலுக்கும் குறிப்பாகச் சில சொற்களுக்கு மட்டும் அடிக் குறிப்புக்களை அங்கங்கே அமைத்துள்ளேன்.

10. வட சொற்கள், எழுத்துக்கள் வருமிடங்களில் அவற்றை ஓலைச் சுவடியிலுள்ளவாறே அமைத்துள்ளேன்.

11. பாடல் வரிசையினையும் சுவடியிலுள்ளவாறே கொடுத்துள்ளேன்.

12. தற்கால முறைப்படி பாடலிலுள்ள எழுத்துக்களைச் சீர்த் திருத்த எழுத்துக்களில் மாற்றி அமைத்துள்ளேன்.

(ஸ்ல–லை; ஸ்ன–னை, போன்றவை.)

சுவடியில் பாடல்கள் தொடர்ச்சியாக உரை நடைபோல எழு தப்பட்டுள்ளதாலும், ஒரே விதமான சந்த அமைப்பு, எதுகை மோனை மயக்கங்களாலும் அடிவரையறை செய்வதும், விடு பட்டுள்ள இடங்களை அறிவதும் கடினமாக இருந்தது. பாடல் அடிகளைப் பலமுறை படித்துப் பார்த்தே இத்திருத்தங்களை அறிய முடிந்தது. இவ்வாறே பாடல்களின் சந்தக் குறிப்புக்களைத் தெளிந் தறிந்ததின் மூலமாக பல பாடல்களுக்கும் அடிவரையறை செய் வதும் எளிதாயிற்று.

சுவடியிலுள்ள இத்திருப்புகழ் பாடல்களை இசையோடு பாடி யறிந்தே பதிப்பிக்கவேண்டியிருந்தது. எனவே, பக்திச்சுவை மிக்க இப்பாடல்கள் இசை நுணுக்கங்களோடு கூடியவை என்பதும் புலனாகின்றது.

வே. இரா. மாதவன்.

# நூல் ஆய்வு

## திருப்புகழ்-சொல்லாய்வு

'புகழ்' என்ற சொல் இசை, ஊற்றம், ஏற்றம், ஒளி, கியாதம் சீர், சுலோகம், சொல், சொன்மாலை, தோற்றம், மீக்கூற்று, மேம் பாடு, வன்மை போன்ற பொருள்களில் வழங்கப்பெறும்.[1]

'புகழ்' என்ற சொல் கீர்த்தி, துதி, பெருமை என்ற பொருள் களைக் கொண்டுள்ளது.[2]

புகல் — புகல்தல், புகலுதல், புகலல் போன்ற சொற்களை அடி யாகக் கொண்டு புகழ் அல்லது புகழ்ச்சி என்ற சொல் அமைகிறது

புகழ்ந்தோதல் அல்லது புகழ்தல் என்ற சொல் துதித்தல், பாராட்டுதல் என்ற பொருளில் அமையும். இஃது புண்ணிய மொன்பதினொன்று என்பர்.[3]

'புகழ் கூறல்' என்பது கீர்த்தி யெடுத்துச் சொல்லல் ஆகும். இஃது மும்மொழியினொன்று.[4]

'சீர்த்தி' — மிகு புகழ் என்பது தொல்காப்பியம்.[5]

கீர்த்தியுடையோன் — புகழாளன் என அழைக்கப்படுவான்.

---

1. தமிழ்ப் பேரகராதி
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி
3. புண்ணியம் ஒன்பது — (எதிர்கொளல், பணிதல், ஆசனத் திருத்தல், தாள் கழுவல், அருச்சித்தல், தூபங் கொடுத் தல், தீபங்காட்டல், புகழ்தல், அமுதமேந்தல் — இவை துறந்தோர்க்குச் செய்வனவாம்.)
4. தமிழ்ப் பேரகராதி
5. தொல், சொல், 312

இயவுளன், தெய்வம், தலைவன் — இவர்களையும் புகழாளன் என்பர்,[1]

'புகழ் என்ற இச்சொல்லைத் தொல்காப்பியர் பெருமைப் பொருளிலேயே வழங்குகிறார்'[2]

சங்க இலக்கியங்களிலும் இச்சொல் பெருமைப் பொருளிலேயே வழங்கப்படுகிறது. புறநானூற்றில் மட்டும் 4 க்கும் மேற்பட்ட இடங்களில் 'புகழ்' என்னும் சொல் கீர்த்தி, பெருமை என்னும் பொருளிலேயே வழங்குகிறது.[3]

திருக்குறளில் அறத்துப்பாலின் இல்லற வியலின் இறுதி அதி காரமாகிய 'புகழ்' என்னும் அதிகாரத் தலைப்பினை விளக்கும் உரையாசிரியர் இச்சொல் கீர்த்தி பற்றி வருவதாகவும் பெரும் பான்மையும் ஈதல் பற்றி வரும் என்றும் கூறுவர்.[4]

---

1. தமிழ்ப் பேரகராதி.- (மும்மொழி-மெய்கூறல், புகழ்கூறல் பழி கூறல்)
2. ''கல்வி தறுகண் புகழ்மை கொடையெனச் சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே.'' (தொல். மெய்ப் 8)
   ''பாட்டுரை நூலே............வண்புகழ் மூவர்
   (தொல். செய். 75)
   ''புகழொடும் பொருளொடும் புணர்த்தன்றாயின்
   செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர்.''
   (தொல். செய்யு 1 2 4)
3. ''ஈத்தநின் புகழ் ஏத்தித் தொக்க என்...''
   (புறம். 159-வரி. 20)
   ''புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை''
   (புறம். 228. வரி 7)
   ''ஆனாது புகழும் அன்னை'' (புறம் 254 வரி 10)
   ''ஈண்டு நீடு விளங்கும் நீ எய்திய புகழே''
   (புறம் 359 வரி 15)
   ''நின்னோர் அனையை நின் புகழொடும் பொலிந்தே
   நின்னொக்கும் புகழ் நிழலவை'' (பரிபாடல் திருமால்
   வாழ்த்து 1, 56–57)
4. திருக்குறள் – பரிமேலழகர் உரை
   ''ஈதல் இசைபட வாழ்தல், அதுவல்லது
   ஊதியம் இல்லை உயிர்க்கு'' (குறள்–231)
   ''ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
   பொன்றாது நிற்பதொன்று இல்'' (குறள்-233)

'புகழ்' என்ற சொல் நறுமணம், தூய்மை போன்ற பொருளிலும் வழங்கப்பெறும்.[1]

'திரு' என்ற சொல் 'அழகு, இலக்குமி, செல்வம், மங்கலம், மேன்மை, சிறப்பு, சாந்தி, பொலிவு. பாக்கியம், தெய்வத்தன்மை, நல்வினை, மாங்கலியம், போகபாக்கியம், விரும்பும் தன்மை, கவர்ச்சி போன்ற பல பொருள்களிலும் வழங்கப்பெறும்.[2]

காலத்தால் மிகவும் முற்பட்டதாக அறிஞர்களால் உணரப்படும் சிந்துவெளிப் பகுதிக் கல்வெட்டுக்களில் காணப்படும் சொற்களில் 'திர்' என்ற சொல்–உயர்வைக் குறிக்கும் 'திரு' என்ற சொல்லே என்பர் தந்தை ஈராசு.[3]

பழந்தமிழ் இலக்கியங்களிலும் இச்சொல் சிறப்புப் பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது.[4]

திருப்புகழ் என்பது திரு + புகழ் என்னும் இரண்டு சொற்களாலாகிய ஒரு தொடர் மொழி. திரு என்றால் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம் என்பர் பேராசிரியர். புகழ் என்பது புகழினாலாகிய நூலைக் குறிக்கும், ஆதலின் திருப்புகழ் என்பது அடையடுத்த ஆகு பெயராகும். இது சிறப்பாகக் கடவுளர்க்கே உரியது. கடவுளர் செயல்களைக் குறித்து வழங்கும்போது சேர்த்துச் சொல்லப்படும், மக்களது புகழ் போலன்றி கடவுளரது புகழ் என்றும் நிலை பெறுவதாதலின் 'திரு' என்ற அடைமொழி சிறப்புப் பொருளில் புணர்க்கப்பட்டது.[5]

---

1. தமிழ்ப்பேரகராதி
   புகழ் வீசு சந்திரன்-பச்சைக் கருப்பூரம்
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி,
3. டாக்டர், சி. இலக்குவனார்–பழந்தமிழ். பக்கம். 31.
4. 'திருவுடைத் திருமனை......(புறம். 375. வரி. 16)
   'இனிது தஞ்சும் திரு வரைப்பில் (புறம். 377. வரி. 3)
   திரு ஞெமர்ந்து அமர்ந்த மார்பினை (பரிபாடல் திருமால் வாழ்த்து 1. 8.)
5. திரு. பொன். சுப்பிரமணிய பிள்ளை–திருப்புகழ் பொழிப்புரை, முன்னுரை.

திருவாசகம், திருக்கோவையார் போன்ற பல தொடர்கள் இவ்வாறே சிறப்புப் பொருளில் வழங்கப்படுவதையும் அறிய முடிகிறது.

## தமிழ் இலக்கிய வகைகளின் வளர்ச்சி

தமிழ் இலக்கிய வரலாற்றில் தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர் இலக்கிய வகைகள் மேலும் மேலும் வளர்ச்சியுற்றிருக் கின்றன. பிற்காலத்துத் தோன்றிய பல இலக்கியங்களுக்கும் தொல்காப்பியர் முன்னரே 'விருந்து' என்று இடம் வகுத்து இலக்கிய நெறிக்குப் பெருவழி செய்துள்ளார்.[1] இவற்றுள் சிற்றி லக்கியங்களும் அடங்கும்.

'புற அமைப்பையும் (சில குறிப்பிட்ட யாப்பும் அமைப்பும்) அக அமைப்பும் (இலக்கிய போக்கு, குறிப்பு, நோக்கு, பொருள்) கொள் கையளவில் அடிப்படையாகக் கொண்டு இலக்கியப் படைப்புக்களை வகைமை செய்கிறோம். [2] என்பர்'

'வடிவத்தாலும் உணர்வாலும் தமக்குள் குறிப்பிடத்தக்க சாயல் ஒற்றுமைகளை வெளிப்படுத்தும் இலக்கிய நூல்களைத் தொகுத்துக் காட்டிப் பலராலும் ஏற்றுக் கொள்ளப்படுவனவற்றை நாம் ஓர் இலக்கிய வகை எனக் கொள்கிறோம் என்று ஆல்பர்ட்டு ஜெரார்டு கூறுகிறார்.'

தமிழ் இலக்கிய வகைகள் ஒவ்வொன்றன் உள்வகைகள் பல. இவற்றிடையே ஒற்றுமைகள், ஒருங்கிணைவுகள், வேறுபாடுகள், மாறுபாடுகள் பல. 96 வகைப் பிரபந்தங்கள் என்ற தொரு வழக் காறு தமிழில் உண்டு. தமிழ் இலக்கியத்தை இவ்வகைமை ஆய்வு அடிப்படையில் பட்டியலிட்டால் அது தொண்ணூற்றாறாக மட்டும் அடங்காது; பல நூறாக விரியும். அவை பற்றிய ஆய்வும் கணக் கின்றிப் பெருகும் என்பர்.[3]

---

1. 'விருந்தே தானும்
   புதுவது புனைந்த யாப்பின் மேற்றே' (தொல். செய். 131)
2. ரெனிவெல்லாக்கு & ஆஸ்டின் வாரன், குளோறியா
   சுந்தரமதி (மொழி பெயர்ப்பு) இலக்கியக் கொள்கை
3. டாக்டர் இராம. பெரிய கருப்பன்,
   சங்க இலக்கிய ஒப்பீடு. பக்கம் 7, 8.

ஆயினும் சிற்றிலக்கியங்கள் என்பவை காலத்தால் மாறுபட்ட அமைப்புகளைப் பெற்றிருப்பினும் பழந்தமிழ் மரபுகளை உள்ளடக்கியே அமைந்துள்ளன என்பது தெளிவு.

## தமிழில் கடவுளைப் புகழ்ந்து பாடும் வழக்கு

கடவுளை வழிபட்டு உய்தி பெறுதல் மக்களது தலையாய கடமை என்பதையும், தமக்குரிய வழிபடு தெய்வத்தின் திருவருளால் குற்றமற்ற செல்வச் சிறப்புடன் இன்புற்று வாழலாம் என்பதையும் பழந்தமிழர் உணர்ந்திருந்தனர் என்பதற்குப் பழந்தமிழ் நூல்களே சான்றாகும்.[1]

தொல்காப்பியர் குறிப்பிடும் புறநிலை வாழ்த்து — தெய்வம் அஞ்சல் — தெய்வம் வாழ்த்தல் — போன்ற குறிப்புக்களால் அக்காலத் தமிழரது வாழ்வில் தெய்வ வழிபாட்டிற்கு அமைந்திருந்த சிறப்புரிமை நன்கு புலனாகும்.[2]

---

1. 'ஐந்திருள் அறநீங்கி, நான்கினுள் துடைத்துத் தம்
ஒன்றாற்றுப் படுத்தநின் ஆர்வலர் தொழுதேத்தி
நின் புகழ் விரித்தனர்......' (பரிபாடல்: திருமால்: 4:1-3)

'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' (குறள்:5)

'திருப்புகழ் விருப்பாற், பன்னலந் தமிழாற்
பாடுவோற்கருளாய் பாசுபதா பரஞ்சுடரே'
(சுந்தரர் விண்ணப்பம்)

2. 'ஏழுறு கடவுள் ஏத்திய மருங்கினும்......(தொல். கற். 5)
'தெய்வம் அஞ்சல்...' (தொல். மெய்ப். 24)
'கிழவோற் சுட்டிய தெய்வக் கடத்தினும்' (தொல். கற்.9)
'அணங்கே விலங்கே கள்வர் தம் இறை யெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே' (தொல். மெய்ப். 8)
'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப' (தொல். செய். 106)

## புகழ்தற்குரிய புறத்துறைகள் மூன்று:-

கடவுள் வாழ்த்தை இயற்றுதற்குரிய துறைகள் மூன்றைத் தொல்காப்பியர் கூறுவர்.[1] இதன் வழி தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே கடவுளைப் புகழ்ந்து பாடும் இலக்கிய வகைகள் இருந்ததையும் நாம் உணர முடிகிறது.

## பக்தி இலக்கியங்களும் புதுமையும்

தமிழில் புதுவது புனைந்த பெருமை பக்தி இலக்கிய காலப் புலவர்களுக்குரியது என்பர். இவர்கள் காலத்திலேயே சிற்றிலக்கிய வகைகள் பல தோன்றின. முதலில் தலைவன் அல்லது மன்னவன் மீது பாடப்பட்ட இலக்கிய முறைமையை மாற்றித் தாம் வணங்கும் தெய்வங்களின் மீது பல பாக்களைப் பாடி தமிழிலக்கியத்திற்குப் புதுமையும் பெருமையும் சேர்த்தவர்கள் இவர்களே. இதற்குச் சான்றாக பிள்ளைத் தமிழ், அந்தாதி, கலம்பகம் போன்ற சிற்றிலக்கிய வகைகளைக் கூறுவர்.

## சிற்றிலக்கியங்களுள் திருப்புகழ் பெறுமிடம்

கி.பி. 15ஆம் நூற்றாண்டாகிய காலப்பகுதியில் பேராசிரியர் சிலர் வாழ்ந்த போதிலும் பேரிலக்கியம் எதுவும் தோன்றவில்லை. ஆயினும் அருணகிரிநாதர் போன்ற பெரும் புலவர்கள் வாழ்ந்ததும் இக்காலத்தேயாகும்.[2] என்பர்.

'திருப்புகழ்' என்னும் ஒரு புதிய இலக்கிய வகையைத் தோற்றுவித்த பெருமை அருணகிரிநாதரையேச் சாரும்.

'தமிழிலக்கிய வரலாற்றில் அருணகிரியாரின் பாடல்கள் தனிக் கொள்கையை ஏற்படுத்தின. சந்தக் குழிப்பின் உச்சநிலையை எட்டிக் கவிதையின் புறநிலையமைப்பில் ஒரு திருப்புமையத்தைத் தோற்றுவித்தன. இறைவன், இலக்கியம், இன்தமிழ் மூன்றும்

---

1. 'கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே' (தொல். புறத்.27)
2. மு. அருணாசலம்–தமிழ் இலக்கிய வரலாறு (பதினைந்தாம் நூற்றாண்டு) பக்கம் 5-18.

இணைந்த கோட்பாடே அவர் இலக்கியக் கொள்கையாக உருப் பெற்றது.' என்பர் அறிஞர்.[1]

## திருப்புகழ் அமைப்பும் அழகும்:

'அருணகிரிநாதர் தம்மை ஆட்கொண்டு பிணி தீர்த்தருளிய அறுமுகப் பெருமானுடைய அருட் செயல்களை இசைத் தமிழ் மாலைகளாற் புகழ்ந்து போற்ற விரும்பி அப்பெருமானது பொருள் சேர் புகழை விரித்துரைத்தற்கேற்ற புதிய சந்தங்களை வகுத்துக் கொண்டார். இச்சந்தங்கள் யாவும் திருப்புகழ் சந்தங்கள் என வழங்கப் பெறுவனவாயின. இத்தகைய வண்ணச் சந்தங்களை முதன் முதலமைத்துப் பாடியவர் பதினொராம் திருமுறையாசிரியர் களுள் ஒருவராகிய பட்டினத்தடிகளாவார். இவராற் பாடப் பெற்ற கோயில் நான்மணிமாலையிலுள்ள சந்தச் செய்யுட்கள் அருணகிரிநாதர் பாடியுள்ள திருப்புகழ் யாப்பிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன. இப்பாடல்களின் யாப்பமைதியினைப் பின்பற்றி அடிதோறும் ஈற்றில் தொங்கல் என வழங்கும் தனிச் சொற்களைய மைத்துப் பாடிய நிலையில் தோன்றிய செய்யுள் வகைகளே திருப் புகழ் சந்தங்களாம். இத் திருப்புகழ் யாப்பு முதன் முதல் பட்டினத் தடிகளால் தொடங்கப் பெற்று அருணகிரிநாதரால் விரிவு பெற்று நிறைவேறியதாகும்.'[2] என்பர்.

ஒலி நயமும், இசை நயமும் ஒருங்கே பெற்று அமைவது திருப் புகழ்ப் பாடல். சந்தக்கவி என்னும் புதிய அமைப்பில் இது அமை யும். தொல்காப்பியர் கூறும் வண்ணம் என்னும் செய்யுள் அடிப் படையைக் கொண்டு இது அமைந்துள்ளதைக் காணலாம்.

---

1. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அருணகிரிநாதர்-கட்டுரை
தமிழ் இலக்கியக் கொள்கை–தொகுதி 2
பக்கம் 292.

2. திரு. க. வெள்ளைவாரணன் — அருணகிரிநாதர்.
வரலாறு (கட்டுரை) பக்கம் – 23.
தமிழசைப் பாடல்கள் (19ஆம் தொகுதி) அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1952.

**வண்ணம்:-** "ஓரடியின் ஒரு சீரின் ஓரசை என்ன எழுத்தான் வருகிறதோ, அவ்வாறே, அடுத்த அடியின் அதே சீரின் அவ்வசை அந்த எழுத்தாகவே வருவது வண்ணம் எனப்படும். வண்ணம் — சந்தம்.

அதாவது, ஓரடியின் முதற்சீரின் முதலசை, குறில், நெடில், வலி, மெலி, இடை இவற்றில் ஒன்றாக வரின் அடுத்த அடியின் முதற்சீரின் முதலசையும் அவ்வெழுத்தே வருதல். முதலடியும் மூன்றாமடியும் ஒரு மோனையாக வரவேண்டும். பல அடிகள் வருதலும் உண்டு."[1]

சான்று:

"முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண"
முக்கட்பக வற்குச் சுருதியின் - முடிவாகி [2]

## சந்தக் குழிப்புக்கள்:

தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என எட்டு.

இவ்வெட்டும், தத்தா, தாத்தா, தந்தா, தனா, தானா. தன்னா தய்யா என வரும் எட்டுடன் கூடிப் பதினாறாகும்.

சந்தங்களில் சில பல சேர்ந்தது ஒரு துள்ளலாம், துள்ளல் மூன்று கொண்டது ஒரு குழிப்பாகும். ஒரு குழிப்பும் ஒரு சிறு தொங்கல் துள்ளல் சேர்ந்தது அரை அடியாகும்.

இவ்வாறே ஒரு அடியின் மற்றொரு பாதியும் அமையும்.

**விளக்கம் :**

தத்தன தனதன—என்பது சந்தங்களிற் சில சேர்ந்த துள்ளல் தத்தன, தனதன, தத்தன, தனதன, தத்தன தனதன எனஇவை மூன்றும் சேர்ந்து வருவது ஒரு குழிப்பு என்பர். இவை மூன்றுடன் தன தான' என ஒரு சிறு தொங்கல் (அ) தனிச்சொல் அமையும். இத்தகைய அமைப்பு இரண்டாக அமைந்தது ஒரு

1. புலவர் குழந்தை - யாப்பதிகாரம்.
2. அருணகிரிநாதர்–திருப்புகழ்–6.

அடியாகும். இவ்வாறு நான்கு அடிகள் கொண்டது ஒரு பாடலாகும்.

இவ்வாறு வெவ்வேறு சந்த அமைப்புக்களைக் கொண்டு திருப்புகழ்ப் பாடல்கள் அமைகின்றன.

## அருணகிரிநாதரின் திருப்புகழும் அவருக்குப் பின்பும்

'திருப்புகழ்' தோன்றிய காலம் முதலே தமிழ் மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டன. இவ்வுருடைய தமிழ் வளம், சொல் வன்மை, தொடை நயம், சந்தப்பொலிவு, கற்பனைத் திறன் இதயக்கனிவு, பக்திப் பெருக்கு முதலிய கவிதைப் பண்புகளைப் பாராட்டதவர் இல்லை.[1]

'தமிழ் மக்கள் ஏனைய தமிழ் இலக்கியங்களைப் படித்துச் சுவைப்பது போன்று சுவைக்காது, படித்தும் பாடியும் சுவைக்கின்ற நிலை, அதைவிடப் பாடியே சுவைக்கின்ற நிலையை அருணகிரியாரின் திருப்புகழ்ப் பாடல்களிலே காண்கிறோம். தொல்காப்பியம் கூறியுள்ள வண்ணங்கள் பலவும் இவர் பாடலில் இருப்பதாகத் தெரிகின்றது. இவரைப் பின்பற்றி வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் பல சந்தப்பா பாடியதையும் நாம் அறிவோம்.'[2]

'நாற்கவியரசான இவரின் நயமிக்க பாடற் செல்வாக்குக் காரணமாகப் பிற்காலத்தும் வண்ண விருத்தங்கள் எழுந்துள்ளன. அகப்பொருள் அமைப்புடைய சிற்றம்பலவாணர் வண்ணம், அண்ணாமலையார் வண்ணம் போன்றனவும், முகமதியப் புலவர் காஸிம் அவர்களின் ஞானத் திருப்புகழ்ப் பாடலும் இங்கு நினைக்கத் தக்கன. பட்டினத்தார், தாயுமானார் அருளிய உடற் கூற்று வண்ணங்கள், திருப்புகழின் 'அறுகு நுனி பனியனைய'(862),

---

1. மு. அருணாசலம் — தமிழ் இலக்கிய வரலாறு. (பதினைந்தாம் நூற்றாண்டு) பக்கம். 5–18'
2. பை. கி. இராஜகோபாலாய்யர் – அருணகிரிநாதர் பாடல்களில் சந்த அமைப்பும் தாள அழகுகளும், — அருணகிரிநாதர் சிறப்பு மலர், [பக்கம் – 104.

சங்க இலக்கியங்களில் தாய்த் தெய்வம் காட்டில் உறைப வளாகவே கூறப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும். [1]

பதிற்றுப் பத்தில் 'கடவுட் பெயரிய கானம்' என்ற வரிக்கு கடவுளாகிய கொற்றவை விந்திய மலையிலுறையும் துர்க்கை என்ற பொருள் கூறப்பட்டுள்ளது. ஆதலின் விந்தியமலைத் தாய்த் தெய்வம் தமிழரும் போற்றிய தெய்வமென்பது தெரிகின்றது. [2]

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களிலும் அன்னை வழிபாடு கூறப்படுகிறது. சிலப்பதிகாரத்திற் கூறப்படும் கொற்றவை வழிபாடு பிற்கால ஆழ்வார்களிடமும் நாயன்மார்களிடமும் பக்திப் பாடல்கள் தோன்றுவதற்கு ஊன்று கோலாக அமைந்தன என்பர், [3]

பரணி நூல்களிலும், பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கியங்களிலும் சத்த மாதர்கள் மற்றும் தேவி வழிபாட்டினைக் காண முடிகிறது. [4]

## மூவேந்தரும் அன்னை வழிபாடும்:-

பதிற்றுப் பத்தில் கொற்றவை சேரர்க்குரிய குல தெய்வமாகப் போற்றப்படுகிறாள். [5]

---

1. "கடல்செழு செல்வி கரைநின் றாங்கு
நீயே கானம் ஒழிய யானே..." (அகம். 370)
"......... ஓங்குபுகழ்
கானமர் செல்வி அருளலின்......" (அகம். 345)
2. திரு. பி. எல். சாமி– தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு.
3. டாக்டர். ரா. சீனிவாசன்- சக்தி வழிபாடு. பக்கம். 226.
4. பன்னிரு பாட்டியல்–மூலமும் உரையும்–கழக வெளியீடு. பக்கம்-51.
5. "நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்ளா வஞ்சு வருமரபிற்
கடவுளயிரை நிலைஇக்" — பதிற்றுப்பத்து. 79:16–18.

"அபயன் குலத்து முதல் திருமதி' என்று செயங்கொண்டா ரால் கலிங்கத்துப் பரணியில் தேவி போற்றப்படுகிறாள், இவள் இராசராசேசுவரி என்றும் அழைக்கப் பட்டாள். இராசராச சோழன் இவ்வன்னையின் பெயரைப் பெற்றவன் எனலாம்.

பாண்டிய மன்னர்கள் தங்களுடைய மீனாட்சியைத் தாய்த் தெய்வமாக மதித்தனர். அவளே பாண்டிய அரசைத் தோற்றின தலைவி என்றும், பாண்டிய குலமே மீனாட்சியிலிருந்து துவங்கிய தாகவும் கருதினர்.

## பிற்காலம்

நாயக்க மன்னர்கள் காலத்தில் அன்னை வழிபாடு வெகு சிறப்பாக நடைபெற்றதை வரலாறு கூறும். இவர்கள் காலத்தி லேயே மதுரை மீனாட்சி அம்மன் கோயில் பல சிறப்புக்களைப் பெற்றதென்பர்.

காளிதாசர், ஒட்டக்கூத்தர், காளமேகம் போன்ற காளி பக்தர் களும் பல இலக்கியங்களை அன்னை வழிபாட்டின் அடிப்படையாக அமைத்தனர் என்பது அறியத் தக்கது.

இராமகிருஷ்ணர், அபிராமி பட்டர், பாரதியார், பாரதிதாசன் ச. து. சு. யோகி போன்றோரும் சக்தி உபாசகர்களாக இருந்தனர் என்பது இவண் உணரத் தக்கது.

## தமிழ்த் தாய்

அனைத்திலும் நீக்கமற நிறைந்திருக்கும் அன்னையைப் போன்றே மொழியாகிய தமிழும் 'தமிழ்த்தாய்' 'கன்னித்தாய்' என்னும் திருப் பெயர்களோடு அழைக்கப்படுகிறது. மும்மைத் தமிழின் முழுமையிலும் அன்னையின் எழிற்கோலத்தைக் காண்பர்.[1]

---

1. அன்னையின் அருள்நிலை — இயற்றமிழ்
அன்னைக் கலைவாணியின் திருக்கரத்து வீணை—இசைத் தமிழ்
அன்னைக் காளியின் திருநடனம்—நாடகத் தமிழ்
—புலவர் முத்துப் பிள்ளை—அருள் சுரக்கும் சக்தி ஆலயங் கள், பக். 15.16.

## அன்னை வழிபாட்டின் முதிர்ச்சி நிலை

பத்தி வழிகளில் தாயாக பாவித்து வழிபடுதல், தோழனாக. குழந்தையாக, அடிமையாக (தாசன்), நாயகனாக வழிபடுதல் என்ற ஐந்து வகையான நிலைகள் அமைகின்றன. எல்லா வழிகளும் முடிவில்லாத பரம்பொருளை அடைய வழியே ஆனாலும் தாயாக வழிபடுவதில் எளிதாக இறைவனை நெருக்கத்துடன் உரிமையுடன் கொண்டாட முடிகின்றது என்பர்.[1] இதன் பொருட்டே அன்னை வழிபாடு அனைத்து மக்களிடமும் இன, மொழி வேறுபாடுகளின்றி நிறைந்திருக்கக் காண்கிறோம்.

தமிழகத்தில் மட்டும் 2500க்கும் மேற்பட்ட கோயில்கள் அன்னைக்கெனவே அமைக்கப்பட்டுள்ளன.[2]

இதன் மூலம் அன்னை வழிபாடு அன்று முதல் இன்று வரை எவ்வாறு வளர்ந்து மூதிர்ச்சி பெற்றுள்ளது என்பதை அறிகிறோம்.

## அன்னை வழிபாட்டு முறைகளும் தலங்களும்

இயற்கையாகிய அன்னை பல சக்திகளாகத் தோன்றி மனிதனை வாழ வைக்கின்றாள். உலகில் ஏற்படும் தீமைகளைப் போக்கும் பொருட்டுச் சக்தியானவள் பல உருவங்கள் எடுத்துச் செயல்படுகிறாள். சக்திகளைத் தனக்கு நல்வாழ்வு மலருவதன் பொருட்டு மனிதன் வணங்கி வழிபட்டான். அவ்வாறு வழிபடுவதற்காகச் சக்தியினைப் பல்வேறு உருவங்களில் அமைத்து அவற்றிக்குக் கோயில் எழுப்பி நாள்தோறும் வணங்கினான்.[3]

'மகாசண்டியம்' என்னும் நூல் சக்தியைப் படைப்பு, காப்பு, அழிவு என்னும் முத்தொழில்களைப் பெற்றுப் பழமை தொட்டு இயக்கும் ஆற்றலுடையவள் என்றும் நீரின் மென்சாயலால் என்றும் போற்றுகின்றது.[4]

---

1. செந்தில் துறவி, — சாக்தம். பக். 1
2. டாக்டர் ரா. சீனிவாசன் — சக்தி வழிபாடு.
3. டாக்டர் ரா. சீனிவாசன், — சக்தி வழிபாடு. பக்கம்–45
4. செந்தில் துறவி — சாக்தம், பக்கம் — 1–16

தொல்காப்பியர் காலம் தொடங்கி இன்று வரையில் சத்தியாகிய அன்னை பல்வேறு கோலங்களில் பல இடங்களில் காட்சியளிக்கிறாள், குறிப்பாக சீனாவில் நீல சரசுவதியும் கோலாப்பூரில் மகா இலக்குமியும், கன்னடத்தில் சந்தரலாவும், ஸ்ரீநகரில் ஜாம்புநாதேஸ்வரியும், நேபாளத்தில் குஹ்ய காளியும், வேதாரண்யத்தில் சுந்தரியும், புவனேசுவரத்தில் பராசக்தியும், காஞ்சிபுரத்தில் காமாட்சியும், மதுரையில் மீனாட்சியும் உறைகின்றனர்.[1]

## மீனாட்சி பெயர் ஆய்வு

அன்னையின் 'மீனாட்சி' என்னும் திருப் பெயர், மீன் போன்ற கண்களையுடையவள் என்ற பொருளைக் குறிப்பது. மீனம் - மீன் அட்சம்-கண். அட்சி-கண்ணையுடையவள். மீன+அட்சி=மீனாட்சி

மீன் தன் கண் பார்வையின் ஆற்றலினால் நீரில் கிடக்கும் தன் முட்டைகளின்று குஞ்சுகளைத் தோன்றச் செய்து காப்பாற்றும் இயல்புடையது. அவ்வாறே அன்னை மீனாட்சியும் உலகத்துயிர்களை தன் அருள் கனிந்த கடைக்கண் பார்வைத் திறத்தால் பாதுகாக்கின்றாள் என்று கூறுவர்.[2]

---

1 டாக்டர் ரா. சீனிவாசன் — சக்தி வழிபாடு. பக்கம்–61
2. புலவர் முத்துப்பிள்ளை–அருள் சுரக்கும் சக்தி ஆலயங்கள் பக்கம் 49.

This appelation, Minaksi. probably indicates that she has got beautifully large and long eyes. The goddess *Minaksi* - like *Parvati*, is the embodiment of the worlds kinetic energy and its supreme force. She transends all other gods, including the trinity of the puranas. With her power she also combines a great maternal tenderness and is mostly called the Mother by the devotees.

The goddess *Minaksi*, great mother, all merciful and all mighty keeps her eyes open like a fish, because only then does the world exist and the creatures over whom she watches with a blend of infinite power and pity continue to live (Saundarya

'பனியின் விந்துளி போலவே' (241) ஆகிய பாடல் தாக்கத்தால் ஏற்பட்டனவோ எனும் எண்ணம் ஏற்படுகின்றது' என்பர்.[1].

## திருப்புகழ்ப் பாடல் தொகை வகை

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் 16 ஆயிரம் என்பது பண்டையாசிரியர் குறிப்பிடும் வரலாறு. திரு. வ.சு. செங்கல்வராய பிள்ளை உரைப்பதிப்பில் 1304 பாடல்களே உள்ளன. சமாஜப் பதிப்பில் 1361 பாடல்கள் உள்ளன. (ஏடுகளில் இன்னும் அச்சிடப்படாத பாடல்கள் கிடைக்கின்றன) மேலும், சில போலிப் பாடல்களும் ஏடுகளில் புகுந்து விட்டன என்பர்.[2]

திருப்புகழ் என்ற பெயரைச் சூட்டிக் கொண்ட பக்தர்கள் எண்ணிறந்தோர். திருப்புகழ்ச் சாமி என்னும் தண்டபாணி சுவாமி, வள்ளி மலைச் சுவாமி சச்சிதானந்தா, திருப்புகழ் மணி கிருஷ்ண சாமி ஐயர் என்ற நீதிபதி முதலியோர் குறிப்பிடத்தக்கவராவர்.

## பிற திருப்புகழ் நூல்கள்

அருணகிரிநாதர் திருப்புகழின்பின் திருமால் நூற்றெட்டுத் திருப்புகழ், இராமசெயத்திருப்புகழ், காமாட்சி திருப்புகழ், திருமலை முருகன் திருப்புகழ் முதலிய பல நூல்கள் 'திருப்புகழ்' என்ற பெயரோடு உள்ளன. பஞ்சரத்தினத் திருப்புகழ் ஐந்தும் திருவையாறு வைத்திய நாத தேசிகர் பாடியனவென்று நாகலிங்க முனிவர் ஒரு பதிப்பு அச்சிட்டிருக்கிறார்

தற்காலப் புலவர் அருட்கவி சேதுராமன் அவர்கள் பல தெய்வங்களின் மீதும் திருப்புகழ்ப்பாடல்களைப் பாடி வருகிறார்.[3]

---

1. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்—
   தமிழ் இலக்கியக் கொள்கை—தொகுதி–2. பக்கம். 287
2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு
   பக்கம் 5-23:
3. அருட்புகழ், இருடியர்பட்டி அருட்புகழ், மாயூரம் அருட்புகழ், வள்ளிமலை அருட்புகழ்,

## மீனாட்சியம்மன் திருப்புகழ்

மீனாட்சியம்மன் திருப்புகழ் என்னும் இந்நூல் 'திருப்புகழ்' அமைப்பில் மதுரை மீனாட்சி அம்மன் மீது பாடப்பட்ட முதல் நூலாக உள்ளது. இந்நூல் இதுவரை அச்சிடப் படவில்லை.

## அம்மை வழிபாட்டின் தொன்மை

'அம்மன்' என்ற சொல் 'தாய், மாதா, அன்னை, தேவதை, ஆகிய பொருள்களைக் கொண்டதாகும்.[1]

'அம்மா, என்ற வடமொழிச் சொல்லும் அம்மை, தாய், இறைவி என்ற பொருளையே கொண்டதாகும்.[2]

'அம்மா' என்ற சொல்லின் இடை குறைந்து 'அமா' எனசிந்து வெளிக் கல்வெட்டுக்களில் காணப்படுவதாக தந்தை ஈராசு கூறுவர்.[3]

'அம்' என்பது ஒரு சாரியை. 'அம்' என்ற சொல் அழகு என்ற பொருளையும்உடையது. அம்பகம் (கண்), அம்பணத்தி(துர்க்கை)' அம்பாலிகை (உமையவள்), அம்பாள் (துர்க்கை),அம்பிகை (தாய்–பார்வதி), அம்பை (தாய்-பார்வதி), அம்மனை (தாய்), அம்மை (தாய்–பார்வதி, அமைதி, அழகு), அன்னை (தாய், தமக்கை, பார்வதி) என்றும் அறிகிறோம்.[4]

அன்னை வழிபாடு உலகு எங்கும் பரவி நின்றதொரு வழி பாட்டு முறை. இந்தியாவில் மிகமிகப் பழைய நாகரிகமாகக் கருதப் படும் சிந்துவெளி நாகரிகத்திலும் அன்னை வழிபாடு இருந்தது. மொஹஞ்சதாரோ-ஹரப்பா என்ற இடங்களில் அகழ்ந்தபோது, பெண் தெய்வ வடிவங்கள் பல கிடைத்தன. எனவே இது வேத வழிபாட்டிற்கும் முந்திய திராவிடர்களின் நிலை என்பர் அறிஞர்.[5]

---

1. மதுரைத் தமிழ்ப் பேரகராதி.
2. வடசொற்றமிழ் அகர வரிசை—கழக வெளியீடு
3. டாக்டர் சி. இலக்குவனார் — பழந்தமிழ். பக்கம் – 31
4. கழகத் தமிழ் அகராதி
5. டாக்டர் க. த. திருநாவுக்கரசு—சிந்துவெளி தரும் ஒளி.

சுமேரியர்கள் தாய்த் தெய்வமான உம்மாவும் தமிழில் வரும் அம்மாவும் ஒன்றேதான் என்று கருதலாம். பாபிலோனில் இப் பெயர் உம்மா என்றும், ஆர்க்கேடியாவில் உம்மி என்றும் வழங்கி னதாக டாக்டர் ஹஸ்ரா முதலியவர்கள் காட்டியுள்ளனர்.[1]

## வேதகால அன்னை வழிபாடு

யஜுர் வேதத்தில் 'அம்பிகை' பற்றிய குறிப்புக்கள் காணப்படு கின்றன. தைத்திரிய ஆரணியகத்தில் முதன் முதலாகஉருத்திரன், உமை எனப்படும் அம்பிகையின் கணவராகக்குறிப்பிடப்படுகிறார்.[2]

தைத்திரிய ஆரணியகம், கேன உபநிடதங்களில் உமை, பார்வதி முதலிய பெயர்கள் காணப்படுகின்றன. வட இந்தியா வில் குவிச்சு அரசன் காலத்தில் சிவனோடும் சிவன் இல்லாமலும் உமையின் வடிவம் பொறிக்கப்பட்ட நாணயங்களில் சிங்க வாகனத் திலிருக்கும் துர்க்கை வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது.[3] என்பர்.

'உமா' என்ற பெயரைப் பற்றி ஆராய்ந்த வடமொழி அறிஞர் கள் 'வித்தியா' என்னும் பொருளிலேயே அச்சொல் யஜுர் வேதத் திலும் உபநிடதங்களிலும் கையாளப்பட்டதாகக் கூறுகின்றனர். எனவே, 'அம்மா' என்னும் திராவிட மொழிச் சொல்லின் சமஸ் கிருத ஆக்கமாகவே 'உமா' என்னும் வடமொழிப் பெயர் அமைந்தி ருக்கக் கூடும் என எண்ணலும் தகும். [4]

கிருத்துவ மதத்தில் உள்ள 'கன்னி மாதா' வணக்கத்திலும் பண்டைத் தாய்த் தெய்வ வழிபாட்டின் கூறுகளைக் காணலாம்.

---

1. திரு. பி. எஸ். சாமி— தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு. பக்கம் - 62 - 63
2. டாக்டர் க. த. திருநாவுக்கரசு.
   'இந்திய நாகரிகத்தின் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள்:- கட்டுரை–உலகத் தமிழ் மாநாட்டு மலர். 1968
3. திரு. ந. சி. கந்தையா பிள்ளை — சைவ சமய வரலாறு. பக்கம். 91-93.
4. திரு. அ மு. பரமசிவானந்தம்–எல்லோரும் வாழவேண்டும். பக்கம் - 50.

தாய்த் தெய்வ வழிபாட்டின் வரலாறு மனித சமுதாயத்தின் நாகரிக வளர்ச்சியின் ஒரு முக்கிய கட்டத்தையே தெளிவுபடுத்து கிறது.

## தமிழ் இலக்கணம் கூறும் அன்னை வழிபாடு

தொல்காப்பியமும் புறப்பொருள் வெண்பா மாலையும் அன்னையின் கூறாகிய கொற்றவை பற்றிக் கூறுகின்றன.[1]

தொல்காப்பியர் வெட்சித் திணையை விளக்கும்போது கொற்றவையைக் குறிப்பிடுகின்றார். தொல் + து + அம் என்பதே கொற்றம் ஆகும். கொற்றத்திற்குக் கடவுள் கொற்றவை. கொற்று + அவை என்பது கொண்டால் அவை என்பது அவ்வை (அம்மை-தாய்) என்பதான் வடிவமே ஆம். வீரர்களுக்கு வெற்றி தந்து பகைவரை அழிக்கும் தாயே கொற்றவை எனலாம்.[2]

## சங்க காலம்

பழைய சங்க காலத்தியேயே 'காடுகிழாஅள்' 'பழையோள்' என்று பலவகை அம்மை வழிபாடுகள் நடைபெற்றன.[3]

'இயக்கி' என்ற பெயர் தமிழகத்தில் கிடைத்த தமிழ் பிரமிக் கல்வெட்டொன்றில் வருகின்றது. சங்க காலத்திலேயே இயக்கியை வணங்கும் வழக்கம் இருந்திருக்கலாம் என்பர்.[4]

---

1. "மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே."
(தொல். புறத். 14)
"ஒளியினீங்கா விறற் படையோள்
அளியினீங்கா அருளுரைத் தன்று"
(பு. வெ. மா. வெட்சிப்படலம்: 19)
2. டாக்டர். தெ. பொ. மீ.
காளி-தமிழ் நாட்டில் வேட்டுவ வரி- கட்டுரை மதுரை திருமிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிஷேக மலர்- 1963.
3. டாக்டர் ரா. சீனிவாசன்–சக்தி வழிபாடு.
4. திரு. பி. எல். சாமி–தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு. பக்கம்–156.

காமக்கோட்டி, அம்பிகை, கௌரி, ஆரியை, சக்தி, அமிராணி, பார்வதி, உமை, இமயவள்ளி எனத் திவாகர நிகண்டு எட்டுப் பெயர்களைக் கூறுகிறது.[1]

மலைமடந்தை, அரனிடத்தவள், காமக்கோட்டத்தி, அம்பிகை, மாதா, தருமத்தின் செல்வி, தேவி, சாம்பவி, பரை. சிவை, கௌரி, பார்ப்பதி, பவானிசத்தி, நாரி என்று பதினைந்து பெயர்களைக் கூறுகின்றது சூடாமணி நிகண்டு.[2]

உமை தக்கனின் புத்திரி எனப்பட்டமையால் தாட்சாயணி என்னும் பெயர் பெற்றாள். பிரமனின் கட்டளைக் கமைய தக்கன் தன் புதல்வியைச் சிவனுக்குத்தாரை வார்த்துக் கொடுத்தான். பின்னொருகால் தக்கன் சிவனை மதிக்காது தான் நிகழ்த்தும் வேள்வியில் சிவனுக்கு அவி கொடுக்க மறுத்தான். தந்தை கணவனை நிந்திக்கும் நிலையினைப்பொறுக்கும் ஆற்றலற்றவவாய்த் தாட்சாயணி யோகாக்கினியால் தன்னுடலைத் தகித்தழித்துப் பர்வத ராசன் புதல்வியாகத்திருஅவதாரஞ் செய்து "பார்வதி என்னும் பெயருடன் விளங்கினாள். சிறுபிராயம் முதலே கடுந்தவம் இயற்றி உரிய காலத்தில் சிவபெருமானைப் பதியாகப் பெற்றாள் என்றும் கூறுவர்.[3]

மக்களின் அறிவு பண்பட்ட காலத்தில் தாய்க்கடவுள் அன்புமயமான கடவுளாகக்கொள்ளப்பட்டுக் காடுகிழாள் உமாதேவியார் என்னும் தெய்வமாகக் கருதப்பட்டாள் என்பர்.[4]

### மதுரையில் மாண்பு

தண்டமிழ் நாட்டின் தனிப்பெரும் தலைநகராய்த் திகழும் பெருஞ் சிறப்பு. மாநகர் மதுரைக்கு உரியது. தித்திக்கும் முத்

---

1. திவாகரமுனிவர்-சேந்தன் திவாகரம் பக்கம் 6

2. ஆறுமுக நாவலர்–சூடாமணி நிகண்டு (மூலமும் உரையு )
பக்கம் 1–12.

3. கலாநிதி கா. கைலாசநாதக்குருக்கள்—சைவத்திருக் கோவிற் கிரியை நெறி பக்கம் 263.

4. ந. சி. கந்தையா பிள்ளை சைவ சமய வரலாறு–பக்கம் 13716.

தமிழை என்னும் பொழுதெல்லாம், மாட மதுரையின் மாண்பு களையும் எண்ணுதல் வேண்டும்! 'தென்னகத்தின் ஏதன்சு' என்று இருமாந்து பேசுமளவுக்கு வீறுகொண்டு நிற்பது இம்மாநகர் மதுரையாகும்.[1]

மதுரை, மதுராபுரி, மருதை, கூடல், நான்மாடக்கூடல், ஆலவாய் நெடுமாடக்கூடல் முதலிய பொருள் பொதிந்த பெயர்கள் மதுரைக்கு உண்டு. மதுரம் என்னும் சொல் இனிமையைக் குறிக்கும், மதுரமான தமிழ், இந்நகரில் எப்பொழுதும் சிறப்பாகச் செழித்து வாழ்வதால் இது மதுரை எனப் பெயர் பெற்றது. இறைவன் சடாமகுட அமிழ்து சிந்தி எங்கும் மதுரம் கமழ்ந்ததால் இந்நகர், மதுராபுரி என்னும் பெயர் பெற்றது. மருதவளம் மிகுந்து விளங்குவதால் இப்பேரூர்க்கு மருதை என்னும் பெயரும் தோன்றியது. தமிழ்ப் புலவர்கள் பலரும் இந்நகரில் கூடித் தமிழ் ஆய்ந்ததால் இந்நகர் கூடல் எனப் பெயர்பெற்றது.[2]

கூட்டுவிக்கும் தன்மையுடையது கூடல். தெற்கேயுள்ள பகுதிகளைக் கடல் கொண்ட போது, ஆங்கே வாழ்ந்த தமிழ்ப்புலவர்களும் பிறரும் கடல் கோளினால் பல்வேறு இடங்களுக்கும் சென்று இறுதியில் இம்மதுரையில் வந்து கூடி தமிழாராயத் தலைப்பட்டனர். அதனால் 'கூடல்' என்ற பெயர் ஏற்பட்டது. இவ்வழக்கினை பல தமிழ் இலக்கியங்களும் கூறும்.[3]

---

1. புலவர் ச. சாம்பசிவன், எம். எ. முன்னுரை. மாநகர் மதுரை 1974.
2. திரு. வ. பெருமாள், எம்.ஏ.பி.டி., மதுரையின் மாண்பு— கட்டுரை.
   மதுரைத் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டும் பெரும் விழா மலர்–1974.
3. 'மாடமலி மறுகிற்கூடல்' (திருமுருகாற்றுப்படை-71.)
   'தென்னவன் நான் மாடக்கூடல் நகர்' (பரிபாடல்).
   'தெளிதமிழ்க்கூடல்' (மது. கலம். 92).
   'முச்சங்கம் வளர்கூடல்' (மது. கலம். 80)
   'வடகலை தென்கலை பலகலையும் பொலி மதுரை' (மது. கலம். 100)
   'தெய்வத் தமிழ்கூடல்' (மதுரைக் கலம்பகம். 48).

### நகரச் சிறப்பு

இப்பெரிய நிலவுலகத்தை அழகிய மகளாக எண்ணினால், அவள் மார்பின் கண் இருந்து விளங்கும் ஒளியுடைய பதக்கமாகப் பாண்டி நாட்டையும், அப்பதக்கத்தின் பக்கங்களிற் பதித்த ஒளி மணிகளாகப் புற நகரங்களையும், அவ்வொளி மணிகளின் நடு விடத்தே திகழும் தலைமையான பெரிய மணியாக மதுரை நகரையும் கூறலாம். [1]

### தமிழ் மதுரை

பாண்டிய மன்னர்களின் தலைநகரமாக விளங்கிய மதுரை, தமிழ் வளர்த்தும் தமிழால் வளர்ந்தும் புகழ் பெற்றது.

இரண்டு சங்கங்கள் கடலால் கொள்ளப்பட்டும் மூன்றாம் சங்கம் தோன்றுவதற்கு நிலைக்களனாக இருந்தது இம்மதுரை மாநகரம் எனின் மிகையன்று! அழியவிருந்த எத்தனையோ தமிழ் ஏடுகளைக் காத்தும், மேலும் பல நூல்களை உண்டாக்கியும் தமிழுக்குப் புத்துயிர் கொடுத்த சிறப்பு இந்நகரத்திற்கு உண்டு. மதுரை நகர் தழைவதனால், தமிழ் நூல் பாழ்போதல் முதலியன நிகழவில்லையென்பதைக் குமரகுருபரர், 'முதுசொற்புலவர் தெளிந்த பசுந்தமிழ்நூல் பாழ்போகாமே' என்று கூறுவதால் அறியலாம்.' [2]

---

1. வடுவின் மாநில மடந்தைமார் பிடைக்கிடந் திமைக்கப்
படுவி லாரமே பாண்டிநா டாரமேற் பக்கத்
திடுவின் மாமணி யதன்புற நகரெலா மிவற்றுள்
நடுவி னாயக மாமணி மதுரைமா நகரம்''
(திருவிளை. புரா. திரு நகர. 3)

2. புலவர் ச. சாம்பசிவனார்–மாநகர் மதுரை, பக்கம். 60–61.

தமிழுக்கும் மதுரைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென் பதைப் பழந்தமிழ் நூல்கள் வழி நாம் அறிகிறோம்.[1]

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், மதுரை மருத ளிளநாகனாரி, மதுரை நல்வெள்ளியார் போன்ற பல தமிழ்ப் புலவர்களின் பெயர்கள் மதுரை என்னும் பெயரோடு கூட்டி உரைக் கப்படும் முறையைக் காணும் போது தமிழும் மதுரையும் கொண்ட உறவு எத்தகைய சிறப்புடையது என்பது புலப்படும்.

இரண்டாயிரம் ஆண்டு காலத்திற்கும் மேலாகச் சற்றும் இடை வெளி இல்லாத தொன்மையும் வரலாற்றுப் பெருமையும் கொண்டது மதுரை மாநகரம். பாண்டியர்களின் தலை நகராகப் பதினான்கு நூற்றாண்டு காலத்திற்கு மேலாக விளங்கியது. தமிழ் விழாக்கள் பல கண்ட மதுரை அவற்றிற்கு சிகரம் வைத்தாற்போல ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டையும் 1981 ஆம்ஆண்டு கொண் டாடியது என்பதையும் இங்குக் குறிப்பிடுவது சிறப்புடைய தாகும்.

## வரலாற்றுச் சிறப்பும் இலக்கியச் சிறப்பும்

கருணையே வடிவாகிய பார்வதி தேவியார் மதுரைப் பாண்டிய மன்னனுக்கு மகளாக மீனாட்சி என்ற திருப் பெயருடன் அவதரித்து, சோமசுந்தரப் பெருமானை நாயகனாகப் பெற்று,

---

1. ''தமிழ்கெழுகூடல்'' (புறம். 58)
''கடலின் ஆய்ந்த ஒண்டீந் தமிழ் (திருக்கோவை.)
''சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய அங்கண்முதூர். (திருத்தொ. புராணம்.)
''தண்பணையுடுத்த தமிழ்ப் பெருங்கூடல்'' (பண்டார மும்மணிக்கோவை).
''தடம்புணையுடுத்த தண்டமிழ்க்கூடல்'' (மதுரைக் கலம் பகம்)
''தெய்வத் தமிழ்க் கூடல்'' (மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ்)
''தானின்றுலகு தழையத் தழைந்த தமிழ் மதுரை'' (மீனாட்சியம்மன் இரட்டைமணிமாலை )

வடமொழியில் 'மீன லோசனா' என்று தாய்த் தெய்வமான மீனாட்சியை அழைப்பதையும் இங்கு ஒப்பு நோக்கலாம்.[1]

அழகும் பெருமையும் கொண்ட அன்னையாக விளங்கும் மீனாட்சியம்மையின் தோற்றமும் பொலிவும் சிறப்புடையன.

"ஒளியால் உலகின் றுயிர் அனைத்தும்
மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே! கன்னி அன்னமே!

---

Lahari. V. 55) The name under which she is honoured at *Madura* recalls to the informed worshipper the basis of his deepest devotion. (Journal of the American oriental Society, Vol. 67. P. 214)

The Devi Bhagavata Purana says that on the top of the Kumuda mountain the river Kamadugha, originates and comes gradually to the North of Ilavarsha. The *Bhagavathi Minaksi* is worshipped here by the gods and the asuras both.

The deity clothed blue, of fearful countenance and ornamented with hair of blue colour, fulfills all desires of the people. The people worship, remember and praise Her by the names viz. Matta-Matanga-Camini-Mara Pujita Mana Priya; and Mayura-Vara-Sobhadhya. The devotees are honoured by the deity *Minalochana* and the *Parameswari* and they get all sorts of happiness.

Dr. Pushpendra Kumar Sharma, M.A., Ph. D., F.R.A.S. (London)-Sakti cult in Ancient India.
Bhartiya Publishing House, Varanasi. 1974.

1. ஸ்ரீ தேவி ஸ்தோத்ர ரத்னாகரம், பக்கம் 80,
ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், சென்னை 1, 1969.

அளியால் இமவான் திருமகளாய்
ஆவியன்ன மயில் பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து
விளையாட் டயரும் செயல் என்னே![1]

## மீனாட்சியின் தொன்மை

மீனாட்சி என்ற பெயரிலும் வழக்கிலும் அவள் ஒரு தாய்த் தெய்வமென்பது தெளிவாகத் தெரிகின்றது. வரலாற்றுக் காலத்திற்கு முந்தின கதைகளில் சக்தி, வீரியம் ஆகியவற்றிற்கு அடையாளமாக மீனைக் கருதினர். மீனைச் செழிப்புக்குரியதாகப் பண்டைக்காலத்தில் கருதினர். நாடு செழுப்படைய சங்கோடு நண்டு, இறால், வாளை மீன் ஆகியவைகளை யாற்று நீரில் வித்தாகப் போட்டு விளைக, பொலிக என்று மக்கள் கூவினர் என்று பரிபாடல் கூறுகிறது.[2]

தமிழ் நாட்டிலும் மீனைச் செழிப்புக்குரிய தொன்றதாகக் கருதினர். 'ஆப்ரோடைட்' என்ற தாய்த்தெய்வம் மீனுருவினாளாகவும் செழிப்புத் தெய்வமாகவும் கருதப்பட்டாள். மீனுக்கும் தாய்த் தெய்வத்திற்கும் வெகு நெருக்கமான தொடர்பு பண்டைக் காலத்தில் இருந்ததாகக் கூறுவர். இத்தகைய தொடர்பையே மீனாட்சி என்ற தாய்த் தெய்வக் கருத்திலும் காண்கிறோம். மதுரை சொக்கேசர் வலை போட்டு மீன் பிடித்தார் என்று வரும் திருவிளையாடல் புராணக் கதையிலும் மீனாட்சி தெய்வத்துடன் மீனுக்குள்ள நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. ஆதலின் மீனாட்சி என்ற தாய்த் தெய்வம் செழிப்புக்குரியதான மீனுடன் தொடர்பு படுத்தப்பட்ட தாய்த்தெய்வமென்பது விளங்கும். பின்னர் மீனைப் போன்ற கண்ணை உடையாள் என்று கூறலாயினர். மெகஸ்தனீஸ் காலத்திற்குப் பிறகு இந்தத் தெய்வம் மறக்கப்

---

1. பரஞ்சோதி முனிவர். திருவிளையாடற் புராணம், மதுரைக் காண்டம். 594.

2. "நத்தொடு நள்ளி நடையிறவு வயவாளை
வித்தியலையில் விளைக பொலிகென்பார்"
(பரிபாடல்: வையை, 10; 85-86)

பட்டதால் பின்னர் கடம்பவன வாசினியாகக் கருதப்பட்டான். இவளே பின்னர் கடம்பவன வாசினியாகக் கருதப்பட்டாள். இவளே பின்னர் பாண்டிய அரசாட்சிக்குரிய தெய்வமாக நாயக்கர் காலம் வரை கருதப்பட்டாள் என்பர். [1]

மதுரை நாயக்கருடைய கல்வெட்டில் இறைவியின் பெயர் மீனாட்சி அம்மை என்று வழங்கப் பெற்றுள்ளது. [2]

"தாய்த் தெய்வமாகக் கருதக்கூடிய மதுரை மீனாட்சி கடம்ப வனமென்னும் மதுரையில் கோயில் கொண்டதாக மதுரைப் புராணம் கூறும். பண்டைக் காலத்தில் மதுரையில் கடம்ப வனத்தில் இருந்த கானமர் செல்வியே மதுரை மீனாட்சியாக இருக்க வேண்டும். மெகஸ்தனீஸ் என்ற கிரேக்க அறிஞன் எழுதிய நூலில் மதுரை மீனாட்சியைப்பற்றிய ஒரு குறிப்பு உள்ளதால் இந்தத் தெய்வம் கி. மு. ஆறாம் நூற்றாண்டிலேயே வடநாட்டிலும் தெரிந்திருந்தது என்பர். மெகஸ்தனீஸ் அவளை ஹெராக்கிசீன் மகளாகவும், மதுரையில் பெண்ணரசியாக ஆட்சி செய்ததாகவும் குறிப்பிட்டுள்ளார். இச்செய்தி மதுரை மீனாட்சி என்ற தாய்த் தெய்வத்தைக் குறிப்பாகக் கொள்ள வேண்டும். கானமர் செல்வியோடு சிவபெருமானுக்கு உறவு கற்பித்த பிற்காலத்தில் சொக்கேசர் மதுரை மீனாட்சியை மணந்ததாகக் கூறினர். இருப்பினும், பழந்தமிழரின் தெய்வமான மீனாட்சிக்கே மதுரையில் சிறப்பும் பெருமையும் கூறப்பட்டது. மீனாட்சிக்கு மூன்று மார்புகள் இருந்ததாகக் கூறுவது தாய்த் தெய்வத்தின் செழிப்புத் தன்மையை விளக்கும் என்பர். [3]

---

1. பி. எல். சாமி. தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு பக்கம்-76-77
2. வை. சுந்தரேச வாண்டையார். மதுரைக் கோயில்களில் கல்வெட்டுச் செய்திகள்-கட்டுரை மதுரை திருமிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிஷேக மலர்-1963.
3. திரு. பி. எல். சாமி. தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு பக்கம்-49-50.

## உமை - பெயரும் விளக்கமும்

மலைமகளான உமை இளம்பிராயத்தில் தவஞ்செய்யச் சென்ற பொழுது பெற்றோர்கள் 'உ(அம்மா) மா (வேண்டா)' என்று கூறியது பற்றி இவளுக்கு இப்பெயர் வந்ததென வை. மு. கோ. கருதுகிறார். [1]

நந்திக் கலம்பகலத்தில் 'பொருப்பரையன் மடப்பாவை' (3:1) என்று கூறப்பட்டுள்ளது உமையே என்பதும் உணரத் தக்கது. [2]

இந்து மக்களின் பல்வேறு பழக்க வழக்கங்களையும் அவர்கள் வணங்கும் தெய்வங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றையும் நுணுகி ஆராய்ந்த சீசன் பால்கு என்னும் செருமானிய அறிஞர் தம் நூலில் உமைக்கு 27 பெயர்கள் இருப்பதாகக் கூறுவர். அவற்றில் 'அரனிடத்தவள்' 'காமக்கோட்டத்தி போன்ற சில பெயர்கள் சிறப்பாக அமைந்துள்ளமை எண்ணத்தக்கது. [3]

ஆரியை, காமக்கோட்டி, அம்பிகை. நாரி, சக்தி, நாயகி, கௌரி, தேவி, சாம்பவி, தருமச் செல்வி, மலைமகள், சங்கரி, மாதா, ஐயை. பரை, உருத்திரை, பார்ப்பதி, அந்தரி, நீலி, கன்னி, நிமிலி, குமரி, வேதமுதல்வி, விமலை, முக்கண்ணி, அமலை, இமயவதி, அயிராணி, சமயமுதல்வி, தற்பரை, மனோன் மணி, சிவை, உமையம்மை, அரவிடத்தவள், சுகமீன்றவள், பவானி, அன்னை, புண்ணிய முதல்வி என முப்பத்தெட்டு பெயர் களை உமைக்குக் கூறுகின்றது பிங்கால நிகண்டு. [4]

---

1. வை. மு. கோ. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம். பக்கம் 88.

2. சோ. அருணாசல தேசிகர்-நந்திக்கலம்பகம் விளக்கவுரை பக்கம்-3.

3. சீகன் பால்கு-தென்னிந்தியக் கடவுள்களின் கால்வழி. செந்தமிழ்ச் செல்வி, சூலை 1974, சிலம்பு 48. பக்கம் 588.

4. பிங்கல முனிவர்-பிங்கல நிகண்டு பக்கம் 23.

முருகப்பெருமானே உக்கிர பாண்டியனாகத் தோன்றி பெருமை வாய்ந்ததும், இறைவன் அற்புதமான 64 திருவிளையாடல்களைச் செய்தருளிய பதியும், இராஜ சேகர பாண்டியன் வேண்டுதலுக்கு இணங்கி கால்மாறி ஆடிய 5 நடன சபைகளுள் நடுநாயகமாக வெள்ளியம்பலம் விளங்கும் பதியும், பதஞ்சலிக்காகத் தில்லை நடனக் காட்சியைக் கூத்தப் பெருமான் காட்டியருளிய பதியாகவும் விளங்குவது இம் மதுரையம்பதியாகும்.

திருஞான சம்பந்தப் பெருமான் சமணரை வாதில் வென்று விளங்கியதும், பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும், அவரது அமைச்சர் சைவம்காத்த குலச்சிறையாரும், மூர்த்தி நாயனார் முதலிய பெரியோர்களும் வந்து விளங்கியது இம் மதுரையம் பதியே.[1]

நூல்கள்:-

மதுரையைப் பற்றி எழுந்த புராணங்களும், பிரபந்தங்களும் பலவாகும். அப்பர், சம்பந்தர் அருளிய தேவாரப் பதிகங்களும், சொக்கலிங்கம் பெருமான் அருளிய திருமுகப் பாசுரமும், நக்கீரர், பரணர், சேக்கிழார் பாடிய பாடல்களும் குமரகுருபரர் அருளிய மதுரைக்கலம்பகம், மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மீனாட்சி யம்மை இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மைக்குறம் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கது.

மதுரை–வாய்மொழி இலக்கியத்தில் தாலாட்டுப் பாடல்களைப் பார்க்கையில் பொதுவாகப் பெண் குழந்தையைப் பாராட்டும் பொழுது 'மீனா' என்று அன்போடு அழைத்துப் பாடுவதைப் பலரது பாடல்களிலும் காணமுடிகிறது.[2]

---

1. புலவர் முத்துப்பிள்ளை-அருள் சுரக்கும் சக்தி ஆலயங்கள்-பக்கம் 48.

2. சரஸ்வதி வேணுகோபால், எம்.ஏ., மதுரை–வாய்மொழி இலக்கியத்தில் தாலாட்டு- மதுரை திருமிகு மீனாட்சி சுந்தரேசுவ திருக்கோயில் கும்பாபிஷேக மலர்–1974.

## மீனாட்சியம்மன் திருக்கோயிற் சிறப்பு

மதுரைக் கோயில் மிக்க தொன்மை வாய்ந்தது. கோயில்கள் எல்லாவற்றினுள்ளும் பெரியது; உள்ளத்தைக் கவரும் அழகு வாய்ந்தது.

இயல், இசை, நாடகம் என்று மூன்றாய்க் கிளைத்த தமிழர் களின் கலை வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த சின்னமாக இக்கோயில் அமைந்துள்ளது.

மதுரை மாநகரை அழகுபடுத்துவது ஆலவாயன்னலோடு அமர்ந்த அங்கயற்கண்ணம்மையின் அருட்கோயிலேயாகும்.

கோயில் கட்டட அமைப்பு முழுவதும் திராவிடப் பாணியி லேயே அமைந்துள்ளது. தற்போது கோயிலில் மொத்தம் 12 கோபுரங்கள் உள்ளன. அழகிய மண்டபங்களும், பொற்றா மரைக் குளமும், கோயிலுக்கு மேலும் அழகூட்டும் வண்ணம் அமைந்துள்ளன. கோவிலில் விளங்கும் கலையழகும், சிலையழ கும், சிற்பத் திறனழகும், சித்திரப் பேரழகும் காண்போரை வியப் படையச் செய்கின்றன. இத்திருக்கோயில் முத்தமிழ்க் கோயிலாக வும், அங்கயற் கண்ணியம்மையின் அருளாலயமாகவும் திகழக் காண்கிறோம்.

### கோயில் ஆபரணங்களின் சிறப்பு

'பாண்டியர்கள் உயர்ந்த முத்துக்களால் வகை வகையான ஆபரணங்களைச் செய்து அம்மைக்குச் சாற்றியுள்ளனர். பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள நகைகள் இக்கோயிலில் உள்ளன. விலைமதிக்க இயலாத மரகதங்களும், கோமேதகமும், மாணிக்க மும், வைரமும், பொன்னும், மணியும், முத்தும் பதித்த பலவகைப் பட்ட நகைகளை மீனாட்சியம்மனுக்கு அணிவித்துப் பார்ப்பதில் பல மன்னர்களும் பேருவுவகைக் கொண்டிருந்தனர் என்பது இக் கோயிலிலுள்ள ஆபரணங்களைக் காண்பதன் மூலம் புலனாகும்.[1]

---

1. மு. தங்கவேல் தேசிகர் - மதுரைக் கோயில் ஆபரணங்கள், மதுரை திருமிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் - 1974. (பக்கம் – 225 – 234)

### திருவிழாக்கள்

'கோயில் நகரம்' என்றும் 'திருவிழா நகரம்' என்றும் சிறப்பிக்கப்படும் இந்நகரில் சித்திரரைத் திருவிழா, தெப்பத் திருவிழா, ஆவணி மூலவிழா இவை குறிப்பிடத்தக்கவை.

## நூலாசிரியர் பற்றிய செய்திகள்

இந்நூலில் ஆசிரியர் பற்றிய செய்திகள் ஆய்வுக்குரியதாகும். ஓலைச் சுவடியின் முதல் ஏட்டில் இடதுபுற ஓரத்தில் 'அருணகிரியார்' எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆயினும். நூலின் அக, புறச் சான்றுகளைக் கொண்டு இந்நூல் அருணகிரிநாதர் இயற்றியதன்று எனத் துணிவாகக் கூறமுடிகிறது. இதற்குக் கீழ்வரும் காரணங்களையும் சுட்ட முடியும்.

1. நூலின் எப்பாடலிலும் அருணகிரியார் பாடியதாகச் சான்றுகளில்லை.
2. அருணகிரிநாதர் முருகனைத் தவிர மற்ற தெய்வங்களை முதன்மையாக வைத்துப் பாடியதில்லை என்பது வரலாற்றாசிரியர்களின் முடிவாகும்.[1]

எனவே, இந் நூல் அமைப்பைக்கண்ட அளவில். 'திருப்புகழ்' என்னும் அரிய பாடல்களை அருணகிரிநாதர் மட்டுமே பாட இயலும் என்னும் பெருநோக்கில் ஏடு எழுதுவோரால் 'அருணகிரியார்' எனத் தவறாகக் குறிக்கப்பட்டிருக்கலாம்.

அல்லது சில திருப்புகழ் பாடல்களில் அருணகிரிநாதர் வழங்கும் சக்தியின் பெயர்களைக் கருத்தில் கொண்டு. இதே வகையில் சக்தியின் பெயர்கள் வழங்கப்படுவதால் இந்நூலையும் 'அருணகிரிநாதர்' இயற்றியதாகக் கூறப்பட்டிருக்கலாம்.

### இந்நூலாசிரியரின் பெயர்

இந்நூலின் 'சீஷ்ண யோக கயிலாச தாசனடியேன்' (53) என்றும், 'சீஷதாசன் (59) என்றும், அடியேனை (10, 21, 33, 95)

---

1. மு. அருணாசலம். தமிழ் இலக்கிய வரலாறு. (15 ஆம் நூ.) பக். 5

என்றும், அடியேன் (5, 78, 83, 91) என்றும் கூறப்படுவதால் இந் நூலாசிரியர் பெயர் 'தாசன்' என்னும் அடிமொழியைக் கொண்ட தொரு பெயர் என அறிய முடிகிறது.

இந்நூல் உள்ள சுவடிக் கட்டிலேயே 'மீனாட்சியம்மன் திக் விஜயம்' என்னும் மற்றொரு நூலும் உள்ளது. இந்நூலின் ஆசிரியர் 'மீனாட்சி தாசன்' என்பதாக அந்நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது. எனவே, இந்நூலையும் அவரே எழுதியிருக்கலாம் என எண்ணவும் இடமேற்படுகிறது.

**பிறப்பிடம்**

ஆசிரியர் பிறப்பிடம் எது எனத் தெளிவாகக் கூற இயல வில்லை. இந்நூலிலுள்ள வட்டார வழக்குச் சொற்களை ஆராயு மிடத்து இவ்வாசிரியர் தென்பாண்டிய நாட்டினைச் சேர்ந்தவராக இருக்கலாம் என எண்ண இட மேற்படுகிறது.

**காலம்**

இந்நூல் 100 ஆண்டுகளுக்கு முன்பு பிரதி செய்யப்பட்டதாக மட்டுமே இறுதியேட்டில் எழுதப்பட்டுள்ளது. எனவே, அதற்கும் முன்பாகவே இந்நூல் வழக்கில் இருந்திருக்க வேண்டுமெனத் தெரி கிறது. இந்நூல், அருணகிரிநாதரின் திருப்புகழின் வடிவமைப்பை அடிப்படையாகக் கொண்டமைந்துள்ளது. 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குமர குருபரர், அபிராமிப்பட்டர் ஆகியவர்களின் கருத்துக்களும், சொல்லாட்சியும் பல பாடல்களில் காணப்பெறுவ தால் இந்நூல் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலோ 19 ஆம் நூற் றாண்டின் முற்பகுதியிலோ தோன்றியிருக்க வேண்டும் என்பது தெளிவு.

**சமயம்**

இந் நூலில் காணப்படும் அகச் செய்திகளைக் கொண்டு இவ் வாசிரியர் சைவசமயத்தைச் சேர்ந்தவர் எனக் கூற இடமுண்டு. ஆயினும், மதுரை மீனாட்சி அம்மன் மீது கொண்ட அளவற்ற பற்றின் காரணமாகவும், சிவன் வேறு, சக்தி வேறு என்ற மாறு பாடற்ற கோள்கையையுடையவராக காணப்படுவதும், இவர் அன்னையையே முதன்மையாகக் கொண்டு இந்நூலின் கண் வழங்கியுள்ளதையும் அறிதல் சிறப்பாகும்.

சக்தியையும் சிவனையும் சிறப்பாகப் போற்றும் இவ்வாசிரியர் இந்நூலில் திருமால் பற்றிய செய்திகளையும் அங்கங்கே கூறியிருப்பதைக் கொண்டு இவர் சைவ–வைணவ வேறுபாடு அற்றவர் என்பதும் பெறப்படுகிறது.

### சமரசப்போக்கு

அன்னை மீனாட்சியே முதன்மைத்தாய் எனவும், மூவர்க்கும் தேவர்க்கும் மூத்தவள் என்றும், திருமாலுக்கிளையவள் என்றும் இவர் கூறியுள்ளதை நோக்குமிடத்து, சமயக் காழ்ப்புணர்ச்சியில்லாமல் அனைவரும் அன்னை மீனாட்சியைத் தாய்த் தெய்வமாக வழிபடலாம் என்னும் சமயப் பொதுமையை உணர்த்தும் இவரது சமரசப்போக்கையும் அறியமுடிகிறது.

### சிறப்பியல்புகள்

இந்நூலாசிரியரின் சொற்றிறனும், இன்னோசையுடன் கூடிய சந்தப்பாவன்மையும் இன்னிசைத்திறனும் போற்றத்தக்கன. பாடல்களில் பெரும்பாலும் உலக வழக்கிலுள்ள எளிய சொற்களையே நிரம்ப அமைத்து உயர்ந்த நுண் பொருள்களை யாவரும் எளிதிலுணர்ந்து மகிழத்தக்க வகையில் அமைத்துள்ளார். இவ்வாசிரியர் உலக மக்கள் பலரிடையே பெருகிக் காணப்படும் குறைபாடுகளையெல்லாம் தம்மேலேறிட்டுக்கொண்டு அவற்றை நீக்கியருளும் வண்ணம் அன்னை மீனாட்சியை வேண்டும் பாடல்கள் யாவும் அத்தீயோர் உள்ளத்தைத் திருத்துவனவாகும். சொல்லக்கருதிய நற்பொருளை எல்லோரும் தெளிவாக அறியும்படி தம் சொல்வண்மையால் சிறந்த இலக்கியமாக இந்நூலை ஆசிரியர் படைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### முதல் நூல்

மீனாட்சியம்மன் திருப்புகழ் என்னும் இந்நூல் மதுரையில் கோயில் கொண்டுள்ள அன்னை மீனாட்சியின் மீது 'திருப்புகழ்' பாடல் அமைப்பில் பாடப்பட்ட முதல் நூல் என்பது புலனாகிறது.

## திருப்புகழ் அமைப்பும்-மீனாட்சியம்மன் திருப்புகழும்

முதன் முதலில் அருணகிரிநாதரால் வழங்கப்பட்ட திருப்புகழ் பாடல் வடிவ அமைப்பினையே இந்நூலும் கொண்டுள்ளது. பல பாடல்கள் வெவ்வேறு சந்தங்களில் இயற்றப்பட்டுள்ளன. 80க்கும் மேற்பட்ட சந்த வேறுபாடுகளை இந்நூல் கொண்டுள்ளது. இவற்றுள் சில அருணகிரிநாதர் திருப்புகழின் சந்த அமைப்பினை ஒத்தும் அமைந்துள்ளன.

### நூலின் பொருளமைதி

பக்தி இலக்கிய வகைகளுள் தாய்த் தெய்வத்தை வணங்கிப் போற்றும் நூல்களின் வரிசையில் வைத்தற்குரியதாக உள்ளது. மதுரை மீனாட்சியின் புகழ்பேசும் நூல்களில் ஒன்றாகவும் காணப் படுகிறது.

### நூலமைப்பு முறை

இந்நூலின் முதற்கண் நேரிசை வெண்பாவால் இயன்ற காப்புச் செய்யுள் ஒன்று காணப்படுகிறது. இதைத் தவிர மொத்தம் 104 திருப்புகழ் பாடல்கள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலும் 4 அடிகளைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன சில பாடல்கள் மிகவும் நீண்டதாகவும், சில பாடல்கள் குறுகிய தாகவும் காணப்படுகின்றன.

மீனாட்சியம்மனின் சிறப்புக்களையும் அன்னை பராசக்தியின் பெருமைகளையும் பேசும் முறையிலேயே இந்நூல் அமைந்துள்ளது

### நூலாசிரியர் நோக்கம்

நூலிலுள்ள அனைத்துப் பாடல்களையும் நோக்குமிடத்து, அன்னை மீனாட்சியை உலகத்தாயாக நினைத்து அவள்தன் புகழை மிகவும் பெருமைபட பேசவேண்டுமென்பதே பெரு நோக்காகத் தெரிகிறது.

வடமொழியில் வழங்கப்பெறும் சவுந்தரியலஹரி போன்ற நூல்கள் அன்னைப்பராசக்தியைப் போற்றிப் புகழ்வதைப் போன்று, முத்தமிழ் மதுரையில் உறையும் மீனாட்சியம்மனின் புகழைத்தமிழில் போற்றிப் பாடியுள்ளதை இந்நூலில் காணமுடிகிறது.

இந்நூலினைப் பாவலரும், பாமரரும் ஒருங்கே பெற்றுப் போற்ற வேண்டுமென்ற நோக்காலேயே இந்நூலாசிரியர் 'திருப்புகழ்' பாடல் அமைப்பினை இந்நூலுக்குக் கொண்டுள்ளார் என்று கூறுவது பொருத்தமுடையதாகும்.

## இந்நூலின் அடிப்படை நிலைக்களன்

மதுரை மீனாட்சி அம்மையின் திருவுருவச் சிறப்பு, திருவடிச் சிறப்பு, திருவருட்பெருக்கால் ஏற்படும் நன்மைகள் (பிறவித் துன்பம் நீங்குவதற்கு வழி, கூற்றுவன் நெருங்குவதற்கு அஞ்சுதல் முதலிய நன்மைகள்) எல்லாத் தெய்வங்களையும் விடச் சக்தி வாய்ந்த தெய்வமாக அம்மையைப் படைத்துக் காட்டும் ஆசிரியரின் அளவில்லா அவா முதலியவை இந்நூலின் அடிப்படை நிலைக்களனாகத் தோற்றமளிக்கின்றன.

பலபல இடங்களில் வெவ்வேறு கோலத்தில் நின்று அருள் புரிபவள் அன்னை. அதனை உணர்ந்து அம்மையின் அதிசயமான வடிவுகளையெல்லாம் புகழ்ந்து பேசுகிறார் ஆசிரியர். அம்பிகையோடு பிரிவின்றி நின்ற சிவத்தையும், அம்மையே சிவன் வடிவுடையவளாகவும் இணைத்துக் காட்டுகிறார் இவர். இங்ஙனம், ஒவ்வொரு பக்திப் பாடலும் அம்மைக்குச் சூட்டும் ஒவ்வொரு பக்திப் புகழ் மாலையாகக் காணப்படுகிறது.

குறிப்பாக, அம்மையின் சக்தி வெளிப்பாடும், ஆசிரியரின் பக்தி வெளிப்பாடும் இந்நூலின் மையப்புள்ளி எனக்கூறல் பொருத்தமுடையதாகும்.

## திருவுருவச் சிறப்பு

அன்னையின் திருக்கோலத்தை வருணிக்கும் இடங்கள் பல. மனக்கண்ணை விட்டகலாத அம்மையின் திருவுருவத் தோற்றத்தை பல இடங்களில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

'அழகிய மைதீட்டிய கண்களும், இடதுபுரத்து சொருக்கு கொண்டையும், ஒளிர்கின்ற ரத்தினப் பதக்கமும், தொங்கலும், குழையும். கடுக்கனும், பருத்த கொங்கையும், மணிமார்பும். அடியவர்க்கருளும் இருதாளும், மற்றும் அளவிடற்கரிய அழகும் பொருந்தியவளே,

வளறொளி பச்சைக் கொடிக்கொழுந்துநீ
நெடிய பொருப்புச் சிரந்துறும்பதி
வடிவுள சொக்கர் பதத்தை யின்புறு உமையாளே'(3)

என்று பாராட்டுகிறார். இது. அபிராமி பட்டரின் கூற்றுடன் ஒப்பிடத்தக்கது.[1]

பேரழகு

அம்மையை 20க்கும் மேற்பட்ட இடங்களில் ஆசிரியர் அபிராமி என அழைப்பர். அபிராமி என்ற திருநாமத்தின் சொற்பொருள் பேரழகுடையவள் என்பதாகும்.[2]

மேனி நிறம்

அம்மையின் திருமேனியின் ஒளி இருநிலமும் திசை நான்கும் பரந்து ஒளிர்வது என்பர் ஆசிரியர்.

செங்கதிரும், சிந்துர வண்ணமும், மாணிக்கமும், மாதுளமும், குங்குமமும், தாமரையும் போன்ற அம்மையின் செந்நிறமேனியின் பளிச்சிடும் எழிலைப்பல இடங்களில் கூறுகிறார்.

சான்று : சிந்துரச்சுந்தரி (99), சிவந்தகாரணி (21), சிவந்த சவுந்தரி (86),

மீனாட்சியம்மைக்கேயுரிய பச்சை நிறத்தையும் பல இடங்களில் சுட்டுவர். பச்சைக்கிளிக்குழவி (79), பச்சைக்கொடிக் கொழுந்து (3) பச்சை நிர்வாணி (27), பச்சை நிறமேனி (35), பச்சை மதிபெண் (97) கவுரி (3) என்று பல இடங்களில் கூறுவர்.

---

1. 'குழையத் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கை வல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளும் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணு நெஞ்சிலெப் போதும்
உதிக்கின்றனவே'.
அபிராமிபட்டர்–அபிராமி அந்தாதி– (100)

2. 'எம்பெரு மாட்டிதன் பேரழகே'
'அழகுக்கொருவரு மொவ்வாதவல்லி'
அபிராமிபட்டர்- அபிராமி அந்தாதி-70-71.

வெண்ணிறமேனியினளாகவும் (78, 67, 53) நீலநிறமுள்ள நீலியாகவும் (45, 59, 63, 65) கருப்பு நிறமுடைய காளியாகவும் (59) தோற்றமளிக்கிறாள் என்பர்.

### அடி முதல் முடிவரை

அன்னையின் திருவடியைச் சேவடி (22) என்றும், செம்பதங்கள் (82) என்றும் பலவாறு போற்றுகிறார். இருதாள் (3) இருபதம் (21, 6), இருபதத்தழகி (23) என்றும் கூறுகிறார்.

### மருங்கு

துடியும் கொடியும் மின்னலும் போன்ற இடையில் செய்ய பட்டும் பன்மணியும் புனைந்த கோலத்தைக் காட்டுகிறார் ஆசிரியர். (3)

### நகில்

தாமரை அரும்பு போலவும் செப்பு போலவும் மேருமலை போலவும் விளங்கும் பொன்னிறமான நகில்களின் சிறப்பைக் கூறுவர். மிருகமத வெற்பைப் பழித்த கொங்கை (3) எனவும், செப்பிரு தனத்து வெற்பு (34) எனவும், தனகிரி (58, 99) எனவும், உயர்ந்த பொன்னொளி வீசும் மேருகிரியைப் போன்ற தனபாரங்களை ஆசிரியர் அழகுபடப் புனைகிறார்.

இத்தகு அழகிய மணிமார்பின் மீது கடப்ப மலர் மாலையும், தொங்கலும், முத்துமாலையும், பாம்பு மாலையும் அணிந்த கோலத்தை விளக்குவர் (3)

### திருக்கரங்கள்

அம்மையின் அழகிய திருக்கரங்களில், மழுவும், மறியும், பாசமும் அங்குசமும், மலர்ப்பாணங்களும், வில்லும், படையும், வளையும் சூலம் வைத்த கோலமும், வீணை ஏந்தும் கோலமும் குறிப்பிடத் தக்கது. (18, 25, 32, 80, 85, 104)

---

அடைப்புக் குறிக்குள் உள்ளவை பாடல் எண்கள்.

அழகுமுகம்

உதித்த கதிரென விளங்கும் முகத்தில் சிந்துர பொட்டும், அயி லுறையிட்ட கண்களும், பவளம்போன்ற வாயும் (4), பனிமொழியும் நிலவு போன்ற பற்களும் ஆசிரியரின் மனம் பறித்தவை என்பது அவர் அன்னையின் முகஅழகை வருணிக்கும் ஒவ்வொரு பாடலிலும் புலனாகிறது.

கயற்கண்

மீனாட்சி என்ற பெயருக்கேற்ப அன்னையைக் கயற்கண்ணாள் என ஆசிரியர் குறிப்பிடுவது கருதத்தக்கது. (6,97)

இருசெவி

அம்மையின் திருச்செவிகளில் தாளக்கொப்பும் வயிரக்குழையும் ஒளிர் கடுக்கனும் சிறப்பாக ஒளி விசுவதாகக் குறிப்பிடுகிறார்–(93, 16, 76)

சடைமுடி

விரித்த செஞ்சடை மீது கடப்ப மலரும், பிச்சிப்பூவும், கொன் றையும், அறுகும் அழகு பெறுகின்றன. பாதிநிலவு தரித்த சிறப் பைப் பல பாடல்களிலும் கூறுகின்றார். (6, 44, 53, 57, 80, 104)

இவ்வாறு அம்மையின் திருவுருவச் சிறப்பை ஆசிரியர் ஒவ்வொரு பாடலிலும் விளக்கிக் கூறுவது அறிந்து இன்புறத் தக்க தாகும்.

மதுரையும் மீனாட்சியும்

மதுரைக்கும் மீனாட்சிக்குமுள்ளத் தொடர்பை ஆசிரியர் தம் பாடல்களில் பல இடங்களிலும் குறிப்பிடுவர்.

''கூடல் மாமதுரை மீதில் வாழும் உமையாளே'' (2)
வளர் கூடல் மேவிய உமையாளே'' (14)
''மதுரல புரமே மதுரை உமையாளே'' (15)
''கயற்கண் ணெனவளர் மதுரையில் எங்கள் உமையாளே'' (6)

"இனிய மதுரையில் வந்த லாகிரி உமையாளே" (21)
"மதுரைத்துர ராச துரந்தரி" (44)
"விரிகதிரழகிய மதுரையிலினிதுறை உமையாளே" (44)
"உகத்தில் மயில்குயி லாகி வளர்ந்து
செகத்தில் நதிவளர் கூடல மர்ந்த
உரைத்த சுருதிக ளாலுயர் சங்கத்து உமையாளே" (38)

என ஆசிரியர் குறிப்பிடுமிடங்கள் அறிந்து மகிழத்தக்கன.

**அறமும் அம்மையும்**

'அறங்க ளெங்கு மளந்து வழங்கியவள்' (25) என்றும்
'அறம்வளர் கொங்கைச் செங்கைப் பயிரவி' (53) என்றும்
'நெறியிலறம் வளர் கவுரி' (80) என்றும்
'நீதி ஞாயம் விளங்கி வழங்கிய மகராசி' (88) என்றும்

'அறமும் தழைக்க வந்த உமையாளே' (:6) என்றும் குறிப்பிடு மிடங்களில் அம்மையின் அறம் வழங்கும் திறம்பற்றி நன்கு அறிய முடிகிறது.

**அம்மையின் அருட்பெரும் சக்தி விளக்கம்**

'எல்லாம் அம்மையின் திருவருட் பெருக்கே' என்னும் அடிப் படைக் கோட்பாட்டை நூல் முழுவதிலுமே ஆசிரியர் குறிப்பிடு கிறார்.

1) ஒன்றும் பலவும் ஆகிய உருவங்கள் உடையவளாய் இருந் தும் அம்மை அருவமானவளாகவே காணப்படுகிறாள். (21,84)

2) அண்ட சராசரங்களும், வானமும் பூமியும் அவற்றின் முத லும் முடிவுமானவள் (2, 81, 45)

3) வேதத்தின் முதலும் இடையும் அந்தமுமானவள். ஆயினும் தேடுதற்கரியவள் (2, 20)

4) போகம் வழங்கும் பெண் வடிவானவள் (34)

5) அகில உலகங்களையும் படைத்துக் காப்பவள் (6, 18, 65)

6) முத்தொழிலுக்கும் உரியவள் (2, 66)

சிவபெருமான், தன் இடப்பாகத்தில் 'லலிதே' என்ற சக்தி யைப் படைத்து அச்சக்தி தேவியின் மூன்று கண்களின் வாயிலாக

முத்தொழிலுக்குரிய மூவரையும் படைத்தான் என்னும் கோட்பாட்டினை உட்கொண்டு அம்மையின் பேராற்றலைச் சித்தரிக்கின்றார்.

'சத்தித் தத்துவத்திலிருந்து சிவதத்துவம்தோன்றும்' என்னும் கோட்பாட்டின்படி, அம்மை சிவபெருமானுக்கு மூத்தவளாகவும், தாயாகவும், தேவர்களுக்கும் முதன்மைத் தலைவியாகவும் திகழ்வதை ஆசிரியர் குறிப்பிடுவது நோக்கத் தக்கது. இக் கருத்து அபிராமி பட்டரின் பாடலுடன் ஒப்பிடற்குரியது.[1]

சான்று

''கிஷ்ணனயுன் மூவர் முற்றுமுள தேவர்
கற்ப முனதாக விளைவான (30)

சிவன் விரும்பும் அம்மையின் சிறப்பு

சிவனுக்கும் சக்தியாக விளங்கும் அன்னை மீனாட்சியின் திருக்கோலத்தைப் பலவாறு விளக்கும் ஆசிரியர் இவ்விருவரும் சேர்ந்திருக்கும் எழிற்கோலங்களையும் சில பாடல்களில் குறிப்பிடுவது அறிந்து மகிழத் தக்கது.

'சிவனுக்கதி மோகன மாகிய சிவகாமி' (61)
'செப்பிரு தனத்து வெற்பினி லப்பனை
வைத்தருள் உமையாளே' (54)
'கனத்துக் கேகிரி மேவிய போதிரு
தனத்துக் கேசிவன் மோகம தாய்வரு
கருத்துக் கேமன மாமயல் சூடிய மகமாயி.
கடிக்கை யேகுவை லோகமெ லாமிரு
படிக்கப் போதற மேவளர் நாயகி
களித்திட் டேகயி லாசரை மேவிய உமையாளே' (34)

என்னுமிடங்கள் குறிப்பிடத் தக்கன.

---

1. தவளே யிவளெங்கள் சங்கர னார்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக் கன்னையு மாயின ளாகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கு மேலை யிறைவியுமாம்
துவளே னினியொரு தெய்வமுண் டாகமெய்த் தொண்டு
செய்தே
அபிராமி பட்டர் (அபிராமி அந்தாதி. 44)
'யாவையுமாம் ஏகம் பராசக்தி' (திருக்கோவையார். 71)

இவ்வாறு அன்னையை வணங்கி அதன்வழி சிவனின் செம்ப தங்களையும் அடைய விழையும் ஆசிரியர்

'சிவனு மெனக்குத் துணைப்பதந்தந்திட

வந்தருள் உமையாளே (7) என அவளை அழைப்பதும் நோக்கத் தக்கதாகும்.

சிவசக்தி நடனம்

நடம்புரி காளி (46), எதிர்த்தெதிராடிய சுந்தரி (72). நடமிடு மிறையவர்(11), நடனகிருபாகரசேகரி (6!) என பல இடங்களிலும் சிவசக்தி நடனங்களை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

இறைவியின் நடமாடலை பல பாடல்களிலும் கூறும் ஆசிரியர் அப் பாடல்களையும் நடனத்திற்கு ஏற்ப சந்த அமைப்புக்களில் அமைத்திருப்பது அறியத் தக்கது. (82, 83, 87)

அம்மையின் திருப்பெயர்கள்

அபிராமி பட்டர் பாடியுள்ளது போல இந்நூலாசிரியர் அன்னையின் திருப்பெயர்களை நான்மறைசேர் நாமங்களாகத் தன் பாவன்மையால் பாடி மகிழ்கிறார்.

அம்மையை வருணித்தும், இயல்புரைத்தும், சுருக்கமாகவும் பெருக்கமாகவும் இவர் எடுத்தாண்டுள்ள திருப்பெயர்கள் பல.

இப்பெயர்கள் யாவும் பல இடங்களில் பல பொருள்களில் எடுத்தாளப்பட்டுள்ளன.

சான்று:-அபிராமி-பேரழகுடையவள்.

அம்பிகை – எல்லா உலகங்களுக்கும் தாய்
ஆயி – தாய்
குமரி – அழியாத கன்னிகை
காளி – கருப்பு நிறமுடையவள்
சங்கரி – எல்லா பக்தர்களுக்கும் இன்பத்தை அருளுபவள்
பயங்கரி – பாவிகளுக்கு அச்சத்தைத் தருபவள்
கவுரி - பச்சை நிறத்தாள்.
நீலி – நீல நிறத்தாள்.

பரம்பரை – தனக்கு மேல் உயர்வின்றித் தானேயாய் உயர்ந்திருப்பவள்

உத்தமி – அருள் ஞானம் முதலியவற்றின் வடிவாகி முப்பத்திரண்டு அறம் வளர்த்து அரனை விட்டு நீங்காப் பாகத்தினளாகி, எல்லா அண்டங்களையும் திருவயிற்றில் வைத்துக் காத்துப்பெற்று அருளும் இறைவி. எல்லா நற்குணங்களுமாக விளங்குபவள்.

உமை – ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் உமையாளே என ஆசிரியர் விளித்துப் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது.

### திருவடிச்சிறப்பு

மீனாட்சியம்மனின் திருவடிச் சிறப்பைப் பற்றி பல பாடல்களிலும் ஆசிரியர் புகழ்ந்துரைக்கின்றார். (3, 6, 39, 44, 75)

### நூலில் இடம் பெற்றுள்ள புராணச் செய்திகள்

இந்நூல் பக்தி இலக்கியவகையைச்சார்ந்ததாலும், இறைவன், இறைவியை விளக்குமிடங்களில் பல புராணச் செய்திகளைச் சேர்த்து வழங்கும் மரபினாலும் இந்நூலுள் எண்ணற்கரிய பல புராணச் செய்திகள் உள்ளதை அறிய முடிகிறது.

### புராணச் செய்திகள்

1. படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முச்செயலுக்குரியோர் பிரமன், திருமால், சிவன். (6, 21, 30)

---

இந்நூலில் காணப்படும் 300க்கும் மேற்பட்ட அன்னையின் பெயர்களைத் தனியாக தொகுத்துள்ளேன். பின் இணைப்பு 3 இல் காண்க.

'கண்ணிய நுன்புகழ் கற்பதுன் நாமம் கசிந்து பத்தி
பண்ணிய நுன்இரு பாதாம் புயத்தில் பகல்இரவா
நண்ணிய நுன்னை நயந்தோர் அவையத்து நான்முன் செய்த
புண்ணியம் ஏதென்அம் மேபுவி ஏழையும் பூத்தவளே'

அபிராமி பட்டர் (அபிராமி அந்தாதி - 12)

2. பரம்பொருளின் இருப்பிடம் கயிலைமலை (2,16,46,73,78,99)
3. திருமாலின் மார்பில் இலக்குமி உள்ளாள் என்ற செய்தி (36)
4. விநாயகப்பெருமான் தமிழறிவித்தான் என்ற செய்தி (1)
5. விநாயகன், முருகன் உமையின் இருபுதல்வர் என்ற செய்தி (1, 11, 85)
6. கற்பகத்தரு தேவலோகமரம் (42, 49)
7. உலகமுடிவு காலத்தில் உருத்திரன் சங்கொலி செய்வான் என்ற செய்தி (99)
8. விநாயகன் ஆனைமுகமும், ஐங்கரங்களும் கொண்டவன் என்னும் செய்தி (1, 17, 18, 21, 25, 29, 98, 101)
9. சிவனுக்கு முருகன் குருஉபதேசம் செய்தான் என்றசெய்தி(11)
10 சரவணப் பொய்கையில் முருகன் பிறந்தான் என்ற செய்தி (39, 44, 11)
11. முருகன் பண்டித ஞானக்குழந்தை, வீரபண்டிதன் என்பது (83, 7, 18)
12. பிரளய காலத்தில் திருமால் ஆலிலையில் துயில்பவன் (42) என்பது
13. திருமால் நெடியவன் என்பது (13, 39) போன்ற பல புராணச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**புராணக்கதைகள்**

புராணங்களில் பேசப்படுகின்ற பல கதைகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

1. சிவன் திரிபுரம் எரித்த கதை (97, 54)
2. திருமால் நரசிம்மவதார மெடுத்த கதை (39)
3. சிவபெருமான் பிட்டுக்கு மண் சுமந்த கதை (30, 35)
4. திருமால் இடையர் குலத்தில் தோன்றி அருளியது (37)
5. திருமால் வாமன அவதாரம் எடுத்தது (13, 39)
6. காலனை உதைத்த கதை (10)
7. தக்கன் யாகம் செய்தது (100)
8. முயலகனை நெளித்து வளைத்தது (4)
9. மன்மதனை விழித்து எரித்தது (4)
10. மும்முலை தோன்றிய அம்மையின் கதை (98)
11. இறைவி, துந்தமி என்ற அசுரனை அழித்தது (25)

12 இறைவனுடன் எதிர்த்தெதிராடியது (72)
13. மகிடாசுரனை வென்றது (4)
14. பராசக்தி காளியாக நடனமாடியது (26, 46)
15. பைரவியாகிச் சுடுகாட்டில் ஆடியது (9)

இதிகாசச் செய்திகள்

இராமாயணம், பாரதம் ஆகிய இதிகாசச் செய்திகளும் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன.

1. அகலிகை சாபம் நீங்கப் பெற்றது (39)
2. இராமன் சேது சமுத்திரத்தில் அணை கட்டியது (9)
3. இராமன் அயோத்தி ராகவனாக இருந்தது (34, 74)

ஆகிய இது போன்ற பல புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன. பொதுவாக, திருவிளையாடல் புராணம், கந்த புராணம், பெரிய புராணம், தேவாரப் பதிகங்கள், திருவாசகம், திருவாய் மொழி போன்றவற்றில் கூறப்படும் கதைகளும், மக்கள் பலரும் அறிந் திருக்கக் கூடிய புராணக் கதைகளும் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிற

அபிராமியாய் அருளிய வரலாறு

திருக்கடவூர் என்னும் திருத்தலத்தில் 250 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த அபிராமி பட்டர் என்னும் அந்தணருக்கு அபிராமி அம்பிகை காட்சி கொடுத்தருளித் தனது திருத்தோடு ஒன்றைக் கழற்றி வான மண்டலத்தில் வீச அது சென்று சந்திரனைப்

---

"மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானை"
திருவெம்பாவை–8

"முலை மூன்றிலொன்று
கைவந்த கொழுநரொடும் உள்ளப் புணர்ச்சிக்
கருத்தான் அகத்து ஒடுங்க."
மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்–சப்பாணிப்பருவம்–2

போலச் சுடர் விட்டது எனவும், இதன் பயனாக அபிராம பட்டர் மீதிருந்த பழி நீங்கியது என்றும் வரலாறு கூறப்படுகிறது.[1]

இவ்வரலாற்றைக் குறிப்பாகக் கூறும் முகமாக இந்நூலுள் 'கொப்பெறியும் மகமாயி' [(76) என்னும் தொடர் வந்துள்ளது அறியத்தக்கது.

உவமைகள்

கவிதைக்குரிய மொழியான உவமை பாத்திரப்பண்பு, மன நிலை இவற்றை விளக்க மிகவும் இன்றியமையாதது என்பர்.

சிறந்த உவமையானது பொருளின் தன்மையை விளக்குவ தன்றி, அதனைச் சிறப்பிக்கவும் வேண்டுமென்பர்.

இத்தகைய உவமையினைத் துணையாகக்கொண்டு அன்னை உமையின் வடிவத்தினையும், மற்றும்பல பொருள்களையும் காட்சிப்படிமமாகவும், கருத்துப் படிமமாகவும் ஆசிரியர் இந்நூலில் அமைத்துள்ளார்.

1. அம்மையின் வதனத்திற்கு கமலத்தை உவமானமாகக் கூறுகிறார் (23)
2. உமையின் நெறிக்குப் பிறையை உவமானமாகக் கூறுகிறார் (65)
3. உமையின் கண்களுக்கு கயல்மீனை உவமானமாகக் கூறுகிறார் (16, 97)
4. உமையின் கரங்களைத் தளிருக்கு உவமானமாகக் கூறுகிறார் (5, 44)
5. உமையின் இடைக்குத் துடியினை உவமானமாகக் கூறுகிறார் (3, 44)

---

1. கி. வ. ஜகந்நாதன் – அபிராமி அந்தாதி (உரை)
"வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமைத் தோற்றம்" (தொல். 1222)

4

6. அம்மையைக் கொடியாகக்காட்சிபடுத்த பச்சைக் கொடிக் கொழுந்து (3) என்கிறார்.
7. அம்மை மின் போன்ற அழகுடையவள் என்கிறார்.
8. பிறபெண்டிரின் பாதத்திற்கு எவ்விடத்தும் தாமரை உவமையாகக் கூறாது, உமையின் பாதத்தை மட்டும் தாமரை மலருக்கு உவமிக்கும் நிலையினை பலவிடங் களில் காண்கிறோம்.
9. வெற்பு – தனத்துக்குவமையாகக் கூறப்படுகிறது (3,53,54)
10. வஜ்ஜிரம்—உறுதிகுறித்து உவமையாகக் கூறப்படுகிறது. (1, 3. 50, 97)
11. யானைத்தலை, தாமரை அரும்பு, கிரி, கும்பம் — தனத் துக்கு உவமை (3, 6, 53)
12. மத்தளம், குடம், விநாயகரின் வயிற்றுக்கு உவமை (1,98)
13. பல நோயும் நடத்திய திந்தப்பந்த பாசமும்
    மெடுத்திடு நின் கைப்பந்து போலவும் (31) என்றும்
14. இலகு சந்திர விந்த மேரினை
    திலதமென்றதணிந்த நாரணி (62) என்றும் கூறுமி டங்களில் உவமைப் பொருத்தங்களைக் காண முடிகிறது.

தத்துவக் கருத்துக்கள்

1. என்றும் கன்னியாகவே அம்மை விளங்குகின்றாள் என்ற தத்துவம் கூறப்படுகிறது. (11, 13, 23, 80, 84)
2. மறைகளின் முடிவிற் பொருந்தும் அறிதற்குரிய பொரு ளாய் உள்ளவள் (43)
3. அகில உலகங்களையும் ஆக்கித் தருபவள் (18, 25, 90)
4. எப்பொழுதும் சுமங்கலியாக இருப்பவள். (86, 89)
5. கயற்கண்ணெனை உயிரினங்களைக் காப்பவள் (6, 97)

இது அம்மையின் அருளைக் காட்டுகிறது.

இத்தகைய தத்துவக் கருத்துக்கள் பல இந்நூலில் காணப்படு கின்றன.

**தன் இரக்கம்**

இந்நூலாசிரியர் தம் பாடல்களில் தன்னிரக்க உணர்ச்சியை வெகுவாக வெளிப்படுத்தியுள்ளார். அம்மையை விளித்துப்பாடும் ஒவ்வொரு பாடலிலும் இவ்வுணர்ச்சி புலனாகிறது.

'பல நோய்களையும், பந்தபாசங்களையும் அறியாயோ (31)
'ஐம்பொறி மாயையில் மெலிவேனோ '(42)நாயேன்(47,70,103)
'இருவினை மிகுந்து நொந்து திரிவேனோ' (68)
'மயக்கான பெண்கள் இடத்தே மயங்கி இழுக்கான
வங்கி பிணிக்கே கிரந்தி விடப்பாதகங்கள் பிடித்தே
திரிவேனோ' (24) வழி தொகை அருள்வாயே (4) என இவர் கூறுமிடங்கள் கருதத் தக்கன.

**இயமன்**

இந்நூலில் ஆசிரியர் தம்மைக் காலனிடமிருந்து காக்கும்படி அன்னையைப் பலவிடங்களிலும் வேண்டுகிறார். இயமனை இவர் அந்தகன் (18) எமன்(4),காலன் (52, 70, 88) சமன் (10), நமன் (73, 68, 103) என பல பெயர்களில் அழைக்கிறார்.

'மடித்த இதழது கடித்த யெயிறொடு
வருத்தி யொருயெம னிருக்கி வருகென
வழைக்கு மொருபொழு தெனக்கு மடியருள்' உமையாளே
என்றும் (4)

---

"வவ்விய பாகத் திறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற் பாதமும் ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும் போது வெளிநிற்கவே."
அபிராமி பட்டர் (அபிராமி அந்தாதி : 18)

"ஆசைக் கடலி லகப்பட் டருளற்ற வந்தகன்கைப்
பாசத்தி வல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும்
வாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட
நேசத்தை யென்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே,"
அபிராமீபட்டர் (அபிராமி அந்தாதி : 32)

'ஏமவதை யாலுமால காலபகை தீர நீயும்
ஏலவர வேணுமாயி உமையாளே' (33) என்றும்

'பிடரிமிசை யுற்ற காலர்
கயறு கொடி ருக்கும் வேளையில்
பிரியமுட லட்சி நீதுணை உமையாளே' (52) என்றும்

'நடைவழி திறந்து கந்து
மணிமுடி கனுங்குலுங்க நமனுட மனங்கலங்க வருவாயே'
(68) என்றும்

'நமனிருண்ட பாலி கமகமென்ற கோலி
நடு நடுகங்க வாவென் றழையாமுன்' (73) என்றும்

இவர் குறிப்பிட்டுள்ளதிலிருந்து காலனின் கொடுமையையும் அன்னையின் அருந்திறத்தையும் விளக்குவது நன்கு புலனாகிறது.

விநாயகன்

இந்நூலின் முதற்பாடல் விநாயகர் வணக்கமாக அமைந்துள்ளது. 'சித்திசெய் கரிமுகன் செப்பிய தமிழிது சித்தமும் அகம் மிக மகிழ் உமையாளே (1) என ஆசிரியர் முதற்கண் வழிபடுகிறார்.

மதுரைத் தலத்து விநாயகரில் முக்கியமானவர் சித்தி விநாயகர். அவரைச் சித்தியானை என்றும், சித்தி வேழம் என்றும் திருவிளையாடற் புராணத்தில் இரு இடங்களில் போற்றப்படுவதை இவண் நோக்குவது சிறப்புடையதாகும்.[1]

அன்னையை வணங்கும்முன் அன்னையின் முதற் பிள்ளையாகிய ஐங்கரனின் புலமையைக் கூறி அவன் உரைத்த தமிழால்

---

1. சத்தி யாய், சிவ மாகி, தனிப்பர
முத்தியான முதலைத் துதிசெய
சுத்தி யாகிய சொற்பொருள் நல்குவ,
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.'
'...கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்து, வரு வினைகள் தீர்ப்பாம்.' (திருவிளையாடற்
புராணம் (மதுரைக் காண்டம்) பாடல் 1, 45.

உனைப் பாடுகிறேன் ஏற்றுக்கொள்வாயாக என நயமாக உரைத்திருப்பது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும் [2]

விநாயகருக்கு யானைமுகமும் (17, 1), குடம், மத்தளம் போன்ற வயிறும் (1, 17, 21, 98) மருப்பும் (17), மதமும் (1, 11, 17, 101) ஐங்கரமும் (25) உடையதாகக் கூறி அவனே முதல்வன் (17) என்றும் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

முருகன்

மீனாட்சி அம்மையின் இளைய மகன் (21) எனவும், கந்தன் (18, 25. 28, 53) எனவும், சரவணப் பொய்கையில் தோன்றிய சண்முகன் (11, 39, 44, 98) எனவும், குறிஞ்சி நிலக் கடவுளாம் கிரிகுமரன் (44) எனவும், ஆறுமுகங்களைக் கொண்டவன் (17, 44) எனவும், பாலன் (36. 63) எனவும், பண்டிதன் (18, 7) எனவும், ஞானக்குழந்தை (7) எனவும், அழகு பொருந்திய முருகன் 10, 44, 11) எனவும். வேலினைக் கையில் ஏந்தியவன் (22. 40, 30, 101) எனவும், தந்தைக்கு உபதேசித்த குமரகுரு (11) எனவும், சூரனை வதைத்த வீர பண்டிதன் (83) எனவும், எல்லாச் செல்வங்களையும் ஒருங்கே பெற்ற திருமுருகன் (91) எனவும் ஆசிரியர் முருகப் பெருமானைப் போற்றுகிறார்.

பிரமன்

படைத்தற் கடவுளாகிய பிரமன் அயன் (30), மலரயன் (6, 21) என குறிப்பிடுகிறார்.

திருமால்

அன்னை மீனாட்சியின் உடன்பிறந்த மூத்தோனாகிய திருமாலை ஆசிரியர் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். சிவனுக்கு தன் தங்கை மீனாட்சியை மணம் முடித்த திருமாலை அரி (23) ஆலிலையில் துயில்பவன் (42), இராமசந்திரசேது (9)

---

2. 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்' (குறள் 69)
'முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல் வோனே !' (திருப்புகழ் ! 1.)

கலியுக வரதன் (13), களபத்துளபர் (16), கிருஷ்ணன் (30), கேச முகன் (39), கோவலர் (39), சடகோபர் (39), திருமால் (10), தயா பரஞ்சுடர் (9) நீலமேகம் (86), நெடியோன்மால் (39) நெடிய வன் (13), புண்டரிகத் திருமால் (85) பெருமாள் (39), மால் (47,36) முகுந்தன் (7, 25), முராரி (99, 100, 27, ராகவன் (54, 74), விஷ்ணு (30, 76) வரதன் (44), வேயூது மாதவன் (14) என பலவாறு ஆசிரி யர் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கதாகும்.

தேவலோகத்தவர்

தேவலோகத்திலுள்ளவர்களை அண்டர் (29, 80, 104), உம்பர் (18, 25), தேவரும் தேவியும் (2, 67) தேவலோகப் பெண்களை அரப்பையர் (87) தேவர்களுக்குத் தலைவரை இந்திரன் (87) இந்திரர்க்கிறை (85), இந்திரர்கோன் (17) தேவர்க்காதிபர் (22) புரந்தரதிபதி (21) என ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

நாரதர் (7), நந்திமகேசுவரர் (7, 29) சிவ கங்கணங்கள் (57) போன்ற பிறரைப் பற்றிய செய்திகளையும் ஆசிரியர் குறிப்பிடு கின்றார்.

மன்மதனை—மதனன் (4) என்றும், வசந்தன் (25) என்றும் குறிப்பிடுகிறார்.

விண்ணும் மண்ணும்

அணு (14, 15, 92), அண்டகூடம் (25) அண்டபகிரண்டம் (90), அண்டமகண்டம் (18), இரவி (6, 77, 67), உகம் (25, 38), உலகம் (62, 57, 8, 49) கதிரவன் (4) காசினி (77) குவலயம் (84), சராசரம் (9, 20, 82) ஞாலம் (86), திரிபுரம் (29), திரிபுவனம் (99) திரிலோகம் (32), எண்டிசை வான் (7), தேசம் (37, 41, 42,), தென்புவி (28), நவகண்டம் (90), சந்திரன் (29, 99, 13, 4, 25, 50). நிலப்பூ (42), பார் (21, 39, 40, 42), வானம் (63, 86) விண் (90) விண்டலம் (63) வங்கக்கடல் (53) எனவும் ஆசிரியர் குறிப்பிடுவது அறியத்தக்கது.

பாடல்களில் கூறப்படும் ஊர்களின் பெயர்கள்

அருணை (6) அருவிமலை (81) இசலிமலை (10, 63) இமயப் பூதலம் (13) ஒண்ணாமலை (91) கடம்பர சோலை (46) கமலபதி

(11, 65), கயிலாசமேரு (1, 46, 78,) கயிலை (16, 11, 23, 64, 73, 99) கருமலை (39), கனககிரி (3) காசிநகர் (74), காசிமலை (50) கூடல் (2, 22, 35, 38, 63, 70), கொங்குமலை(90), கோபுரமலை (62) சக்கரகிரி (76) சித்திரக்கூடல் (37), சித்துக்குகை (55) சோலைமலை (35) திருமலை (39), மதுராபுரம் (15) மதுரை (6, 15, 21, 49, 58), மாமதுரை (2), முண்டகக்குன்று (99) சப்தகிரி (35) எனவும் ஆசிரியர் குறிப்பிடுவது அறியத்தக்கது.

### நோய்களின் பெயர்கள்

அங்கிகரோகம் (7), இருமல் (31), இளைப் பிருமல் (102, கண்டப் பொங்கு சாளை (31), கண்டிப்பண்ட வசதம் (31). கிரந்தி (7, 24); நீரளிகோர்வை )37), மூலம் (31), சூலை (3.. 33, 43). சோகை (31). தொண்டைக்கண்ட மரலை (31), நெஞ்சு தங்கு கோழை (31), நோய் (1, 14, 17, 31, 88, 103), பிணி (10, 24, 33, 52) மண்டைத் தொண்டை வீளை (31), மந்திர நோய் (31), மேக வெட்டை (51), மெலிதல் (51, 62, 81, 88), ரவிகிரண சூடு (103). ரோகங்கள் (41), வாய்வு (31, 33), வாதசூலை (14), வாதம் (33,43). போன்ற பல நோய்ப் பெயர்கள் கூறப்படுகின்றன.

### அணிகலன்களின் பெயர்கள்

குழை (3, 16, 54), கொப்பு (76), குண்டலம் (80, 90). சித்ர கடுக்கன் (3), இரகு (78), உச்சித பொட்டு (97), கங்கணம் (85, 18 40, 28), கிண்கிணி (7. 18, 25), வெண்டயம் ( 80, 87). வெண்மதி (48), சதங்கை (7, 21, 24, 38, 39, 46, 57, 68, 87) சிலம்பு (7, 25 57, 87) தண்டைகள் (7, 18, 25, 39, 68, 80, 87) நவமணிமாலை (38), நவநிதி (4, 44), பாடகம் (24, 18, 39, 87) மணி (21), ரத்னயதக்கம் (3), பலமணிமுத்து (10), மரகதம் (3, 11) முத்து (100) என இவ்வாறு பல அணிகலன்கள் கூறப்படுகின்றன.

### விலங்கினங்களின் பெயர்கள்

அரவு (35, 78), கிஞ்சுகம் (25), கிளி (23), குஞ்சரம் (90), குயில் (3, 38), கூகை (89), கூளி (100), ஓரி (89), கொக்கு (69), சேவல்(63), தத்தை (3). மயில் (30, 3, 38, 39. 44), நாய் (92), புரவி (80), யாளி (50), வண்டு (62) போன்ற பல விலங்கினங்கள் கூறப்படுகின்றன,

**பாடல்களில் குறிப்பிடப்படும் படைக் கருவிகள்**

அங்குசம் (18, 25, 32), **கிண்ணரம்** (98), சக்கரம் (85, 27, 37) சங்கு 40, 85), கொடி (63), சேனை(52) துடி (44), மழுமறி (80,4) மயிற்பொறி (102), வச்சிரகத்தி (97) போன்றவை குறிப்பிடத் தக்கன.

**இசைக் கருவிகளின் பெயர்கள்**

பம்பை ( 85 ), வீணை (85), துருத்தி (19, 38), யாழ் (18), மத்தளம் (1, 85), மேளதாளம் (65).

**உறுப்புக்களின் பெயர்கள்**

உடல் :- அங்கம், ( 80, 90 ), உடல் ( 40, 8?, 102 ), தேகம் (12, 41), தோல் (47), சடம் (24, 70), கட்டு ( 35, 76 ), ஐம்பொறி (8, 42).

தலை :- உச்சி (79),உச்சமுடி (35), சடை(4, 6, 29, 33, 38,96)

முகம் :- முகம் (6, 97), நெற்றி ( 79), நுதல் (96 ), கழுத்து (102), பிடரி (52), செவி (75) (103), காது (33, 47, 65),

கண்கள் :- கண் {3, 18, 25, 28, 80, 82, 95), கயற்கண் (6,97¿ கதிர்விழி (38), விழி (58), புருவம் (16, 23, 4, 90)

நாசி :- (47, 103), வாய் (47,63, 83), இதழ் (4), எயிறு (4, 6) நா (49)

மார்பு :- முலை (17, 22, 24, 48, 58, 76, 97)
கொங்கை (3, 7, 39, 72),
தனம் (32, 38, 54, 65, 72, 82, 88, 95) இருதயம் (21)

வயிறு :- உதரம் (4, 49), வயிறு 1, 52, 70, 98), குடல் (8).

இடை :- இடை, (44, 65,102), மருங்கு (88), கொச்சையிடை (30), யோனி (52), அல்குல் (92)

கை :- அங்கை (18, 25), கரம் (8, 11), கை (1, 3, 27, 92, 95)

அடி :- அடி (3, 6, 39, 44, 75) தாள் (3), கால் (47, 74)

**நறுமண அழகுப் பொருட்கள்**

அஞ்சனம் (7, 18, 72), களபம் (16, 39), குங்குமம் (40, 18, 25), சந்தனம் (18, 25, 57), சிந்துரம் (25), சுகந்தம் (7, 25), நளின பரி

மளம் (11, 99), நறுமணம் (11), நறுமலர்(68), பரிமள கெந்தம் (53) வாசனை (36, 38, 42, 57, 59, 86) வாடை (3 , 42, 88) போன்றன குறிப்பிடத் தக்கவை.

உணவுப் பொருட்கள்

மலைத்தேன் (24), தேன் (21,24), வடை(1), தயிர் (1) பால்(1) பாகு (1), மதுரசம் (1), பயறு (1), தினை (5, 99), பனை(5), முக்கனி (1) போன்றவை கூறப்பட்டுள்ளன.

நிறங்கள்

இருள் (44, 67, 49), ஒளி (2, 15, 49), ஒளி (2, 15, 49), சிவந்த தாள் (21, 62. 86), செங்கதிர் (25), செங்கழல் (83), செஞ்சடை (25) செந்தழல் (99), செழுஞ்சுடர் (89), பங்கய நிறம் (19), பச்சை (3, 27 35, 79, 42, 97), படிக நிறம் (67), பழுத்த நிறம் (19) போன்றன கூறப்படுகின்றன.

தாவர வகைகள்

அடகு (15), அறுகு (6, 44), அனிச்சமலர் (38) இலவு (78), எருக்கு (4)' கடப்ப மலர் (6), கடலை (1), கடுகு (75, 80, 95, 101), கமலமலர் (11, 23), கற்பக மரம் (19, 42, 54, 49, 97) கனி (15, 47), காயிலை பூ (15, 47), காய் (32), கொன்றை (53, 57, 80, 104), சதகுப்பை (8), சிறுபயறு (1), தாமரை (72), பங்கயம் (40), செண் பகம் (7, 25), தளிர் (39), தினை (5, 99), தும்பை (80, 104), பத்மம் (8), முக்கனி (1), முருகு (81), பூ (15).

எண்வகை மெய்ப்பாடுகளைக் குறிக்கும் சொற்கள்

அஞ்சல் (5, 53, 80, 104), அற்புதம் (19, 35, 54, 56, 72, 97), ஆசை (5, 33, 67, 72, 86, 51, 65, 37), ஆவேசம் (14), தெளிவு (48), இடற (98), இடுக்கம் (6, 101), இன்பம் (6, 8, 53, 25, 62, 66, 80, 104), உக்கிரம் (35, 54, 56), உணர்வு (1, 16, 45, 64, 67, 75, 76), உருகுதல் (67, 81, 96, 102), உழலுதல் (24, 68, 77), ஒடுங்குதல் (97), கருணை (3, 6, 16, 23, 64, 73, 84), கவலை (16, 84), கவனம் (10, 62, 65, 75), கழரல் (10), களிப்பு(1, 6,18,28,34, 46), கற்பனை

(37, 56, 100), காதல் (7, 33). காமகலை (57, 74, 67), காமம் (88), காமுகர் (92), கிருபை (91), குலங்கல் (3, 6 8 ), கெருவிதம் (58), வாதை (103), கொஞ்சல் (31, 53, 99, 104), கோபம் ( 92, 100), சிரித்தல் 3, 34, 104, சரவணம் 16, 25, 54, 61, 99, சலனம் 16, சலித்தல் 70, திடுக்கிடல் 60, நடுக்கம் 19, 60, 97, நவரசம் 60, பயங்கரம் 86, பயம் 25, 53, புகளிதம் 98, புன்சிரிப்பு 85, ரோசம் 37 வஞ்சனை 104, விரகு 26, 44, 81, 80, 103); வேடம் 34, 67, மயல் 80, 23, 65, 76, 103, 52.

**கோணங்கள்**

திரிகோணம் 2, 9, 12, 41, சட்கோணம் 69. நவகோணம் 35, 67, 74, 33, முக்கோணம் 69, நாலுகோணம் 65. போன்றவை குறிப்பிடத்தக்கன.

**எண்ணுப் பெயர்கள்**

பாதி நிலவு 74, பாதிவெண்பிறை 63.

ஒன்று:- ஓரெழுத்து 51, ஒன்றுரண்டு 64, ஓரெழுத்தஞ்சு 99. ஓர் பரமம் 2. ஒருபத்து 44. 52, அஞ்சிலொன்று 83, அயந்துக்கொரு முதல் 29, அறிவிலொன்று 64, ஒரு நூறு 15, ரண்டுபொன்றென 104, ரண்டென ஒன்றென 87.

இரண்டு:- இரண்டு பேரும் 62, இருசரன் 58, இருசெவி 75, இருசொற்பொருள் 61, இருதாள் 3. இருபோது 77, இருவர் 11,61 இருவினை 68. ரண்டு 21, 37, 104, இருதனம் 54, ரண்டு நேரம் 21.

மூன்று:- திரிகுணம் 4, 26, 99, திரிபுரம் 4, 29, 98, திரிபுவனம் 99. திரிலோகம் 32, முக்கோணம் 69, திரிகோணம் 2, 9, 12, 41, முப்புரதிக்கு 97, மூக்கணர் 85, மும்முதம் 98

நான்கு:- நாலுவேதம் 2, 86, நான்கு சாதி 13, நாலு கோணம் 35 நால்வகையோனி 2, சதுர்வேதம் 15,

ஐந்து:- அஞ்சு 104, அஞ்செழுத்து 25, 96, அய்ந்துக்கொரு முதல் 29 ஐங்கரக்குழந்தை 18, 25, ஐம்பொறி 8, 42, பஞ்சக்கசடு 53, பஞ்சகம் 99, பஞ்சசடாதரம் 7, பஞ்சமி 19, 25, பஞ்சரதம் 40, பஞ்சவர் 39,

ஆறு:- ஆறுமுகம் 17, ஆறுவீடு 88, சட்குணம் 27, சட் கோணம் 69, சட்சமயம் 35, சட்ரசம் 1.

ஏழு:- ஏழு 1, எழுபுவி 13, சப்தகிரி 35.

எட்டு:- எட்டு அஷ்டகெஜம் 35, அஷ்ட்டதிசை 76, 56, அட்ட கிரி 76, எண்டிசை 11, 44.

ஒன்பது:- நவகோணம் 35. 33. 67, 74, நவமணிமாலை 38, நவநிதி 4. 44, நவரசம் 11, 44.

பத்து:- ஒரு பத்து 52, பதினாறு 46, ஆறு பதினாலு 45.

நூறு:- ஒரு நூறு 15.

இலட்சம்:- லட்சகரதாரு 30.

கோடி:- கோடியுகம் 59, கோடி கோடி 89. போன்ற சொற் கள் குறிப்பிடத்தக்கன.

புகழ்

அன்னை மீனாட்சியின் திருப்புகழைப் பாடும் ஆசிரியர் 'புகழ்' என்னும் சொல்லை இந்நூலில் வழங்கும் இடங்கள் அறியத்தக்கன.

'கருணைப் பருவப் புகழைப் பெருகக் களபத் துளபர்க்கிளை
யாய் 16

'மதித்த பல உயிர் மிகவும் கிளர்ந்து
துதித்து நினையடி தொழுது புகழ்ந்து
வழுத்துமவர் பவ வினைகள் தகர்ந்து விடவேதான் 6

'புகழ்ந்து பாடிய சந்ததியின் துணை உமையாளே' 40

'வேதம் புகழ்ந்து விரிகின்ற சம்பு சிவகாமி 57

'செகம் புகழ்ந்த புரந்தரி' 25

'யானுனக்கடியா னெனப் புகழ் வேத சத்தி சிவாய
நித்திய வுலாச வுத்தமி உமையாளே 48

'சீர தங்கதி ரேசவும் புகழே யருள் ... 63

'திருப்புகழோ' 71

'பேணியிரு போது கந்த பூசைசிவ யோக நண்பர்
பேசுதிரு வாசகங்கள் புகழோத 77

'திக்கத்த ரித்தொரு சொல் வர்த்திக்க தக்கபுகழ்
நிஷ்டை கிருத்திய தி லெனையாள்வாய் 79

'பரம ரகசியப் பொருளை மதி திருப்புகழை
யெனதெனத் தெளிய வகையிதுக்
குரிய மதி தரும் உமையாளே 23

'வேத முதலாகி யேது முறவாக வீசு புகழாயி மிகவேதான் என பல பாடல்களிலும் கூறுகிறார். 43

தமிழ்

கரிமுகன் செப்பியதமிழ் 1, செந்தமிழ் 9, செப்புதமிழ் 50, பாவு செந்தமிழ் 83, தமிழ் 91 என ஆசிரியர் குறிப்பிடுவது அறியத்தக்கது

சந்தம்

இந்நூலிலுள்ள பாடல்கள் பல்வேறு சந்தங்களில் அமைந்துள் ளன. அவற்றைப் பின்வருமாறு தொகுத்துக் காணலாம்.

1. மிக நீண்ட சந்தக் குறிப்புகளைக் கொண்ட பாடல்கள் :- 63, 65, 67, 80, 97, 99.
2. மிகக் குறுகிய சந்தக் குறிப்புகளைக்கொண்ட பாடல்கள் :- 1, 15, 16, 28, 35, 36, 43, 45, 45, 47, 69, 90.
3. பொரும்பாலான பாடல்களில் அரையடிக்கு மூன்று குழிப் பும், ஒரு தொங்கலுமே வந்துள்ளன.
   19, 25, 53 எண்ணுள்ள பாடல்களில் மட்டும் அரையடிக்கு 6 குழிப்புகளும் ஒரு தொங்கலும் வந்துள்ளன.
4. ஒவ்வொரு பாடலிலும் 8 தொங்கல்கள் அல்லது தனிச் சொற்களே வருகின்றன.
   35 ஆம் எண்ணுள்ள பாடலில் மட்டும் 16 தொங்கல்கள் உள்ளன.
5. 63 எண்ணுள்ள பாடல் இவைகளிலிருந்து முற்றிலும் வேறு பட்ட வகையில் அமைந்துள்ளது.
6. 48 எண்ணுள்ள பாடல் பல சந்தங்களும் கலந்து அமைந் துள்ளது.
7. 11,13,23 எண்ணுள்ள மூன்று பாடல்களும் ஒரே சந்தத்தில் அமைந்துள்ளன

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2, 12, 33 | ,, | ,, | ,, | ,, | ,, |
| 44, 58 | ,, | இரண்டு | ,, | ,, | ,, |
| 78, 103, | ,, | ,, | ,, | ,, | ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 43, 45 | ,, | ,, | ,, | ,, | ,, |
| 64, 82 | ,, | ,, | ,, | ,, | ,, |
| 30, 35 | ,, | ,, | ,, | ,, | ,, |

மற்ற பாடல்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு சந்தங்களில் அமைந்துள்ளன.

8. இந்நூலிலுள்ள பாடல்கள் சிலவற்றில் பாடலடிகளி னிடையே சில தாளக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. (3, 7, 23. 29, 53, 54, 55, 66, 72, 85, 87, 104

**வண்ணம்**

பாவின்கண் நிகழும் ஓசை விகற்பமாகிய சந்த வேறுபாடு 'வண்ணம்' என்று வழங்கப்படும். ஒரு பாவின் உறுப்பாக வரும் எழுத்து, அசை, சீர், என்பன எல்லாம் பாவின் சந்தத்திற்கு அடித் தளமாகும். குறிலும், நெடிலும். வல்லினமும், மெல்லினமும், அள பெடையும் குற்றிகர குற்றுகரங்களும், மற்றும் இவை போல்வன எல்லாம் பாவினுள் சந்த மாறுதலை விளைவித்து நிற்கும் என்பர்.[1]

**வண்ணம்-இருபது**

'வண்ணந் தாமே நாலைந் தென்ப'[2] என்பர் தொல்காப்பியர்.

வல்லிசை, மெல்லிசை, இயைபு, நெடுஞ்சீர், குறுஞ்சீர், சித்திர நலிபு வண்ணம் என்னும் இவை ஏழும் எழுத்து அடிப்படையின.

பாஅ, எண்ணு, ஏந்தல் வண்ணம் இவை மூன்றும் சொல் அல்லது சீர் அடிப்படையின.

தாஅ, அளபெடை, வண்ணம் இவையிரண்டும் தொடை அடிப் படையின.

---

இந் நூலிலுள்ள பாடல்களுக்கான சந்தக் குறிப்புக்களை ஒவ் வொரு பாடலின் தலைப்பிலும் அறிந்துள்ளேன். இவற்றின் தொகுப்பை பின் இணைப்பு 3 இல் காண்க.

1. திரு. மு. சண்முகம்பிள்ளை—திருக்குறள் யாப்பு அமைதியும் பாடவேறுபாடும். பக்கம்—79.

2. தொல். பொருள். செய். 204

ஒழுகு, ஒருஉ, அகைப்பு, தூங்கல், உருட்டு முடுகு வண்ணம் இவை ஆறும் ஓசை அடிப்படையின.

அகப்பாட்டு, புறப்பாட்டு வண்ணம் இவையிரண்டும் வடிவ அல்லது நடை அடிப்படையின என்பர்.[1]

**இந்நூலில் காணப்படும் வண்ணங்கள்**

திருப்புகழ் அமைப்பிலுள்ள இந்நூலின்கண் இவ்வண்ணங்கள் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளமை அறிய முடிகிறது.

பெரும்பாலும் எழுத்து அடிப்படையிலான வண்ணங்களே காணப்படுகின்றன.

எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காண்போம்.

**1, வல்லிசை வண்ணம்**

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே"[2]

க, ச, ட, த, ப, ற என்ற வல்லினம் மிகுதியாகப் பயின்று வரும் பாடல்கள் பல உள்ளன. 1, 10, 11, 13, 23, 44, 58, 76, 79

சான்று :- 'முக்கனியவல் பொறி 1, சரடு திருத்தி 10

**2. மெல்லிசை வண்ணம்**

'மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே'[3]

ங, ஞ, ண, ந, ம, ன என்ற மெல்லினம் ஆறும் மிகுதியாகப் பயின்று வரும் பாடல்கள் பல உள்ளள 25, 39, 40, 53, 62, 83, 86

சான்று :- சுகந்த சந்தன'25, மருந்தினால் மணி 40

**3. இயைபு வண்ணம்**

'இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே[4]

ய, ர, ல, வ, ழ, ள என்ற இடையினம் மிகுதியாகப் பயின்று வரும் பாடல்கள் பல உள்ளன.

சான்று :- தினையளவு 5, பரவுமடியவர் 13

---

1. தொல். பொருள். செய். 213, 2. தொல். பொருள். செய். 208
3. தொல்,பொருள். செய். 20 4. தொல்.பொருள். செய். 210

4. நெடுஞ்சீர் வண்ணம்

'நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்'[1]

2, 12, 15, 14, 33, 36, 47, 78 எண்ணுள்ள பாடல்களைக் கூறலாம்.

சான்று :- ஓம் நமசிவாய மாகி 2. அரு மாதவமே 15
வாதமிகு சூலை 33

5. குறுஞ்சீர் வண்ணம்

'குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்'[2]

11, 13. 23, 44. 53 எண்ணுள்ள பாடல்களைக் கூறலாம்.

சான்று :- முருக சரவண 11, பருவத மௌனவொரு 58

6. சித்திர வண்ணம்

'நெடிலும் குறிலும் சேர்ந்து உடன் வரும்.[3]

நாணமற வேதவங்கள் 77 போன்ற பாடல்களைக் கூறலாம்.

இவ்வாறு சந்த இனிமைக்கேற்ப இந்நூலின் பாடல்கள் அனைத்தும் வெவ்வேறு வண்ண அமைப்புகளைக் கொண்டிருப்பதை அறிய முடிகிறது.

தொடை நயம்

பாட்டின் ஓசைக்கு நிலைக்களமாக அமையும் மோனை, எதுகை அமைப்பும் ஒவ்வொரு பாடலிலும் மிகவும் பொருத்தமாக அமைந்திருப்பது அறியத் தக்கது.

மொழிநடை

இந்நூலில் கீழ்க்கண்ட தொடர்களும் சொற்களும் இந்நூலின் மொழி நடையை வெளிப்படுத்துவன.

அடுக்குத்தொடர்

அநேக நேக 12, அரிதரிது 52, 80, அரியரி 21, அரையரை 8, அளவளவு 84, கிண் கிண் 57, கோரகோர 89, கோடிகோடி 89,

---

1. தொல். பொருள். செய். 212
2. தொல். பொருள், செய். 213
3. தொல், பொருள், செய். 214

செய செய 23, 29, தேவி தேவி 89, போடு போடு 89, 65, மாறுமாறு 65, ராச ராச 86, வகை வகை 2, 53, 59, முறை முறை 6, வர வர 58, 67, 75, உழன்று மூன்று 68, பல பல 53

இரட்டைக் கிளவி

அர அர 29, கம கம 65, 80, சட சட 65, பவ பவ 29,

பேச்சு வழக்குச் சொற்கள்

அங்கெனயிங்கென 89, உனக்கெனக்கென 54, உனக்கெனது 102 எனக்குனது 102, அஞ்சு 25, 83, அதிகாரி 85. அதிசயம் 29, 90, அய்ந்து 29, உபகாரி 51, உச்சி 35, 76, ஊதாரி 14, பேர் (பெயர்) 61, உந்தன் (உன்றன்) 19, 84, எந்தன் (என்றன்) 25, கடுகத்தனை 91, கடுகளவு 80, கடுவிடம் 75, 101, காசாசை 14, காசு 88, சக்கரை 1, சகாயம் 26. சகோதரவாசம் 14, சலசலம் 7, சமத்து 97, சவ்பாக்கியம் 32, சாட்சி 71, சீச்சீ 69, போக சாலி 12, சீமாட்சி 31, சுமங்கலி 86, 89, செகவாசை 67, செல்சொல் (செல்வாக்கு) 82, நாலு 2, 65, 86, பரிகாரி 90, பாரு 37, பாழ் 43, போறும் 63, யோகசாலி 89, ரோசம் 37, வேணும் 74, 84, துடர்ந்து (தொடர்ந்து) 5, தகைவாசி 63, தடுமாறல் 76, 78, 81, 102), நாகரிகம் 65,

வட்டார வழக்குச் சொற்கள்

உயர்ந்த-உசந்த 96, அடிமை – அடுமை 102, 103, எதிர்த்து -எதுத்து 54, என்னாச்சி 32, கெற்பம் 30, கௌவுமாரி 33,43, கெவுரி 13, காற்றிகை 32, குற்றம் – குத்தம் 51, குளிர் – குளிறு 98, கொட்டாரம் 69, சிற்றிடை – சித்திடை 66, சுமங்கலி – சுமுங்கிலி - 86, 89, சுழற்சி – சுழத்தி 102, நிலைமை – நிலமை 68, நிசம் 32,60 நெற்றி – நெத்தி 42, நெகிழ்ந்து – நெகிள்ந்து 19, தெம்பம் 99, புஞ்சிரிப்பு 85, ரண்டு நேரம் 21, ஏலவரவேணுமாயி 33, செதி 6, ஞாயம் 88, தெண்டு 31, 62, தெரிசினை 94

பார்மிசை 39, 40, பிடரிமிசை 52, புவிமிசை 6, 37, 29, வாமிசை 36, விடமிசை 4 எனப் பல இடங்களில் 'மிசை' என்னும் அசைச் சொற்களைப் பயன்படுத்துவர்.

வட சொல்லாட்சி

இந்நூலில், சந்தப் பாடலானதாய் ஓசையை நோக்கிப் பல பாடல்களில் வடசொற்கள் அமைத்துப் பாடப்பட்டுள்ளன. வட சொற்களைத் தமிழ் படுத்தியும், படுத்தாமலும் இந்நூலில் கையா ளப்பட்டுள்ளன.

செய செய 23, சோபாசோபம் 49, ராச 86, செனித்தல் 72, நடராசன் 38, நிசம் 32, அத்வயிதம் 35, அபயம் 64, ஏகம் 14, கமலம் 11, 76, 23, கனகம் 16, அஷ்டதிசை 76, ராசஸ உமை 36, ரிஷி 35, ஸ்ரீ சதம் 61, நிஷ்டை 19, கிஷ்ணன் 30 என இவ்வாறு வடவெழுத்துக்களும் இடம் பெற்றுள்ளன.

நீதிக் கருத்துக்கள்

பெண்ணாசை மறத்தல் 7. 24. 33, 55, 58, 88, 95, 103 நல் லோர் நட்பைப் பெற விழைதல் 26, 67, போன்ற நீதிக் கருத்துக் களை ஆசிரியர் பாடல்களின் இடையே குறிப்பிடுகிறார்.

அறிவுரைகள்

'உலகப்பெரு வாழ்வை மறந்திடு மனமே நீ 49
'ஓரெழுத்தை வாக்கி லயராதே' 31
'வேசையிக்ட மாற்றி னூடளித்து
மாய்த்து மேக வெட்டை யேற்று மெலியாதே 51
'வாடைவீசு மடந்தையரையும், விலை மாதர்களையும்
அணுகாதே' 88, 95

என இடையிடையே கூறப்படும் அறிவுரைகளும் கவனிக்கத்தக்க னவாகும்.

பிற நூல் கருத்துக்கள்

திருக்குறள், நாலடியார் போன்ற நீதி நூல்களின் கருத்துக் களையும் பட்டினத்தார். அருணகிரிநாதர், தாயுமானவர், அபிராமி பட்டர் போன்ற பெரியோர்களின் நூற்கருத்துக்களையும் பொன்னேபோல் போற்றி இந்நூலில் கூறப்பட்டுள்ளது குறிப் பிடத்தக்கதாகும்.

இதுபோன்ற இன்னும் பல செய்திகள் இந்நூலுள் பொதிந்து கிடக்கின்றன.

மீனாட்சியம்மன் திருப்புகழ் என்னும் இந்நூலின் பாடல்கள் அனைத்தும் இனிய நடை உடையவை; சிறந்த இசையமைதி கொண்டவை; ஆழ்ந்த பொருள் பொதிந்தவை; உலக வாழ்வில் பண்பட்ட ஒருவரது உணர்ச்சி வெளிப்பாடாக உள்ளவை; மதுரையின் மாண்பை உரைப்பவை; கயற்கண் அம்மையின் கருணையைக் கூறுபவை; எல்லாவற்றிற்கும் மேலாக உலகத் தாயாம் மீனாட்சியம்மையின் அருட்சிறப்பை முழுதும் உரைப்பவை என்பது தெளிவு.

## ஒப்பீடு

'திருப்புகழ்' என்னும் இலக்கிய வகையைத் தோற்றுவித்த 'அருணகிரிநாத'ரின் திருப்புகழுடன் இந்நூலைப் பின்வருமாறு ஒப்பு நோக்கலாம்.

| மீனாட்சியம்மன் திருப்புகழ் | அருணகிரிநாதர் திருப்புகழ் |
|---|---|
| வேற்றுமைகள் :- | |
| 1. மதுரை மீனாட்சியம்மையை முதன்மையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. | 1. முருகனை முதன்மையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது |
| 2. காசி முதலான பல தலங்களைக் குறிப்பிடினும் மதுரையை முதன்மையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது | 2. முருகனின் அறுபடை வீடுகளையும் மற்றும் பல தலங்களிலும் பாடப்பட்டுள்ளது. |
| 3. ஒவ்வொரு பாடலின் இறுதி சொல்லும் 'உமையாளே' என முடிவடைகிறது. | 3. ஒவ்வொரு பாடலின் இறுதிச் சொல்லும் 'பெருமாளே' (அ) 'தம்பிரானே' என முடிவடைகிறது. |
| 4. மொத்தம் 104 பாடல்களே குறிக்கப்பட்டுள்ளன. | 4. 1300க்கு மேற்பட்ட பாடல்கள் கிடைத்துள்ளன. |
| 5. 80க்கும் மேற்பட்ட சந்தங்களில் அமைந்துள்ளன. | 5. 1000க்கு மேற்பட்ட சந்தங்களில் அமைந்துள்ளது. |
| 6. ஆசிரியர் பெயர் தெளிவாகத் தெரியவில்லை. | 6. அருணகிரிநாதரே இயற்றியவர் ஆவார். |
| 7. இதுவரை பதிப்பிக்கப்படவில்லை. | 7. 1300 - க்கும் மேற்பட்ட பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன, |

**ஒற்றுமைகள்**

1. 'திருப்புகழ்' யாப்பு அமைப்பிலேயே இரண்டும் அமைந்துள்ளன.

2. சந்த இனிமையும், பொருள் கூறும் போக்கும் ஒப்புமையுடையது.

3. தன்னிரக்கம்மிக்க பாடல்கள் பாடல்கள் பல இரண்டிலுமே உள்ளன.

4. பெண்ணாசையை வெறுத்தல், நோய்களிலிருந்து விடுதலை, நல்லோர் நட்பைப் பெற விழைதல் போன்ற கருத்துக்களை கொண்ட பாடல்கள் இரண்டிலும் உள்ளன.

5. வட சொல்லாட்சி இரண்டிலும் உண்டு.

6. எளிய ஆற்றொழுக்கான நடையும், எதுகை நயமும் இரண்டிலும் உண்டு.

7. பக்தி இலக்கிய வகைகளுள் புராண மரபுச் செய்திகளை அறிய உதவும் கருவூலங்களாக இரண்டுமே காணப்படுகின்றன.

8. இவ்விரு நூல்களையும் ஆய்ந்தறிவதன் மூலம் சைவம், வைணவம், சாக்தம் போன்ற பல சமயங்களின் இடையே காணப்படும் ஒரு பொதுமையான போக்கினையும் சமரச உணர்வினையும் உணர இயலும்.

9. பக்திச்சுவை மிக்க இவ்விரு நூல்களும் தமிழிசை உலகிற்குப் பெருமை சேர்ப்பனவாக அமைந்துள்ளன.

# மீனாட்சியம்மன் திருப்புகழ்

( காப்பு )

சொன்னேன் சுருதிமதித் தோகையபி ராமியெனு
மின்னா ளுமைபாதம் வேண்டியே - முன்னாள்
நவின மணிகவி ரவிவெண் மதிசேர்
களிறுவந்து முன்சொல்லும் காப்பு.

# நூல்

## (விநாயகர் வணக்கம்)

(தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான)

1 முக்கனி யவல்பொரி இக்கொடு கடலைகள்
மொச்சைகள் சிறுபய றொடுபாகு
மொக்கிய மதுரச நெய்க்குட மொருதொசை
முற்றிலும் வடைமிகு தயிர்பாலும்

சர்க்கரை யெழுகலம் எட்பொரி யறுகலம்
சட்ரச மதுமிகு வரைபோலும்
தப்பித மிலையிது செப்பிய படியுள
சட்டமும் வகைவகை மறவாமல்

வைக்கவு முணர்வுசெய் கைத்தல மதுமெடு
மத்தள வயறது பசிதீர
வச்சிர மலர்மிசை யுச்சித மெனவளர்
வஸ்த்துவி னுடமத கரறாய்நீ

திக்கினி திசைவிசை சக்கர நெறிமுறை
சிட்டர்கள் பணிபத பரிபாலி
சித்திசெய் கரிமுகன் செப்பிய தமிழிது
சித்தமு மகமகிழ் உமையாளே

---

1. முக்கனி–வாழை. மா, பலா. இக்கு – கரும்பு. மது - தேன், சர்க்கரை - சக்கரை. பாகு – வெல்லப்பாகு. அறுகலம் – ஆறுகலம். கைத்தலம் – கை. உச்சிதம் – சிறந்தது. வஸ்த்து - பொருள். மதகரன் – துதிக்கையுடையவன், சிட்டர்கள் – சான்றோர். சித்தி – பேறு. வரை – மலை.

## (அன்னையே முதலாவாள்)

(தானதன தானதான தானதன தானதான
தானதன தானதான தனதான

2 ஓம்நமசி வாயமாயி ஞானகுரு தேசிவாயி
ஓதுமறை நாலுவேத முடையாளே
ஓர்பரம மானபோது சீர்மருவு சாலசூது
ஓசையொலி மூலமாகி ஒளியாகி

மானஅபி மானலோக நாலுவகை யோனிரேத
மாய்கைபல வாகியேதும் விரிவாகி
வான்மிசையில் மூவர்தேவ ரீசர்சரு வேசர்தாணு
வாகுனது யேவலாள ரெனவேதான்

மோனமது வாகிபேத யோககயி லாசமேரில்
மூடுதிரை மூட லூடல் விளையாடி
மூவரறி யாதநாடு கோலமுத லாறுவீடு
மூலவரை கீழுமேலு முடிமேலும்

வானமுத மானதான பானமுத மூறுதாரை
வாவிதிரி கோணமேவு மதியேநீ
மாடநெடு கூடமேடை தேடவரி தானகூடல்
மாமதுரை மீதில்வாழும் உமையாளே.

---

2. அபிமானம் – பற்று. பரமம் – மேன்மை. சூது – வெற்றி சருவேசர் – எப்பொருட்கும் இறைவர். தாணு– சிவன். தாரை– ஒழுக்கு. வாவி – நீர்நிலை. ஏது – காரணம், ஏவலாளர் – பணியாளர்கள்.

## (அன்னையின் தோற்றப் பொலிவு)

(தனதன தத்தத் தனத்த தந்தன
தனதன தத்தத் தனத்த தந்தன
தனதன தத்தத் தனத்த தந்தன தனதான)

3 வெயில்விரி ரத்னப் பதக்க முந்துடி
யிடையினி லிச்சைபட் டுடுத்த தொங்கலும்
மிருகமத வெற்பைப் பழித்த கொங்கையும் மணிமார்பும்
விகசித வச்ரக் குழைக்க ணிந்திடும்
மரகத சித்ரக் கடுக்க னுஞ்சிலை
மிகுமதி முத்துத் தரித்த கந்தர சிவரூபி

அயிலுறை யிட்டுப் பதித்த கண்களு
மிடதுபு ரத்துச் சொருக்கு கொண்டையும்
அடியரு ளத்திற் பதித்த விந்தமு மிருதாளும்
அனுதின முக்கட் பரத்தொ டுந்தன
தனதன தத்தத் தனத்தொ டுந்தன
அடிமுடி தொட்டுக் கதிக்கு ளந்திரு மபிராமி

கையில்வளையிட்டுக் குலுக்கி விந்தைசெய்
நயகுண மெய்ப்பொற் சபைக்கு ரஞ்சித
கனககி ரிக்குட் சிரித்து நன்பொடு விளையாடி
சகு ணைமி குத்துக் குதித்து ரஞ்சித
மணிசிறு பற்பல் பதித்த செந்திரு
கதிதரு குத்ரப் பரத்தை யந்தரி திரிசூலி

மயில்குயில் தத்தைக் கிசைத்த சுந்தர
மழகுத ரித்துத் துடைத்தி லங்கிய
மதுநுத லிட்டுத் திருத்தி யெங்குள மதிபோலே
வளறொளி பச்சைக் கொடிக்கொ ழுந்துநீ
நெடியபொ ருப்புச் சிரத்து றும்பதி
வடிவுள சொக்கர்ப் பதத்தை யின்புறு உமையாளே.

---

3. துடியிடை-உடுக்கையைப் போன்றஇடை. மிருகமத வெற்பு - யானையின் மத்தகம். அயில் - வேல், விந்தம் - செம்மணி. தத்தை - கிளி. நெடிய பொருப்பு - இமய மலை. உறுதல் - தங்குதல்.

## ( அன்னையின் அருட்செயல்கள் )

( தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன தனதான)

4 தரித்த சிறுபிறை வடித்த சடைமுடி
தனக்கு மலரரு கெருக்கு மணியர
விருக்கு னதியிதழ் தமக்கு வடிவது வெனவேதான்
சமைத்த பருவரு ததத்தி லனுதினம்
நினைத்த படிதிரு குணத்தில் விதமுணர்த்
தவற்றில் நிலைபெற விதித்த குருவொரு முதலாகி
புரித்த திரிபுர மெரித்து மதனனை
விழித்த திறமது மதித்து முயலகன்
நெளித்து முதுகினை வளைத்த செயலது வொருபாதம்
சினத்து மறலியை யுதைத்து மயிடகன்
வரத்தை யவனுட தரத்தை யுயிர்கொடு
சிரத்தை நெருடிய கரத்தி பயிரவி திரிசூலி
விரித்த கதிர்மணி பதித்த நவநிதி
கதித்த மழுமறி யுதித்த விடமிசை
விதித்த படியொரு யெழுத்தை மனதினில் மறவேனே
விசுத்தி நிலையது கசத்து நடுவிடை
கருப்பு ருவசுழி வெருப்பு மலைதுலை]
விளக்கி யொளிவெளி பழக்கி வழிதொகை யருள்வாயே
மதித்த கதிரவ னுதித்து வருவது
பெருத்த புவியொடு வுதித்த பரிசிலை
மதிக்கு முடல்சிறு பிறைக்குள் வளர்மதி யறியேனே
மடித்த இதழது கடித்த யெயிறொடு
வருத்தி யொருஜெம னிருக்கி வருகென
வழைக்கு மொருபொழு தெனக்கு மடியருள் உமையாளே

---

4. திரிபுரம் – விண்ணில் உலாவிய மூன்று நகரங்கள்
மதனன் - காமன், உதரம் - வயிறு, சிகரம் – தலை
நவநிதி - கச்சபநிதி, கற்பநிதி. சங்கநிதி, பதுமநிதி.
மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்த நிதி, நந்தநிதி,
நில நிதி ஆகிய ஒன்பது வகைப்பட்ட குபேர நிதி.
எயிறு – பல்.

## (மொழிக்குக் காரணமானவள்)

(தனதனன தானதந்த தனதனன தானதந்த
தனதனன தானதந்த தனதான)

5 தினையளவு நாணமன்றி மனநினைவு கோணலன்றி
தெளியறிவை யூணிநின்று அசையாமல்
திருமருவு சோதிகண்டு பெருகுபுன லாடியுண்டு
திரவியதி லாசைகொண்டு வெளியூடே

பனையளவு போலுயர்ந்து தனையுநினை யாதயர்ந்து
பரமசுக மேநயந்து சுழிமீதில்
பலகலையு மேதெரிந்து விபரமதி லேபுரிந்து
பகரரிய நாதவிந்து தனிலேதான்

வினைகளது காததந்திர வுபயவுப தேசமந்த்ர
மிகுபெருகு ஞானசந்த்ர வரைமீதில்
விரவியதி லேகலந்து பரவிமலை மாமலர்ந்து
விகசிதம தாயிருந்து அணைமீதில்

முனைநடுவி லேகிடந்து மனையளவு போய்நடந்து
முடியவடி யேதொடர்ந்து வினையேதான்
முழுதுமடி யேனுகந்து தொழுதுமன மேமகிழ்ந்து
மொழியவகை யேபுரிந்த உமையாளே.

---

5. தினை – மிகச் சிறிய அளவு, கோணல் – மாறுபாடு
ஊனி – ஊன்றி
திரவி-திரவியம்–பொன், பொருள்
ஆசை – விருப்பம்
அயர்தல் – உணர்வழிதல்
நயந்தல்–நயத்தல்-விரும்பல்
விபரம் – விரிவு
நாதம் - ஒலி,
விந்து – ஒலிமுதல்
தந்திர – நூல்
உபதேசம் - அருண்மொழி
விகசிதம் - மலர்தல்

## ( வினை தீர்க்கும் கயற்கண்ணி )

( தனத்த தனதன தனன தனந்த
தனத்த தனதன தனன தனந்த
தனத்த தனதன தனன தனந்த தனதான )

6 உதித்த கதிரென முகமு மிலங்க
நகைத்த எயிறது நிலவு துலங்க
உரைத்த தொனியது சுருதி முழங்க வளர்பாலி
உடுத்த திரையொலி கருணை முழங்க
தொடுத்த பரகதி யருணை விளங்க
உணர்ந்து மடியவ ரிடரு கலங்க உருவாகி

விதித்த மலரய னுனது சிறந்த
பதத்தி லணுவள வெனவும் வளர்ந்து
விரித்த புவிமிசை உயிர்க ளனந்தம் விளைவாகி
மிகுத்த நவரச வருசு வையின்ப
சுகத்தை யவரவர் மனது விரும்ப
விசுத்தி மருள்கர விகசி தகும்பத் தனமாதே

மதித்த பலஉயிர் மிகவும் கிளர்ந்து
துதித்து நினையடி தொழுது புகழ்ந்து
வழுத்து மவர்பவ வினைகள் தகர்ந்து விடவேதான்
வரத்தி றனுபவ முறைமு றைகொண்ட
பரத்தி திரிபுரை யிரவி வைகுண்ட
மகிழ்ச்சி யுடையவ ளிருப தமென்று மறவேனே

கதித்த கதிர்முனை முடியி லிருந்து
கிரிக்கு ளொருகுகை தனிலும் வருந்தி
களித்து மொழிபயி லியல்கள் திருந்தக் கதிதாராய்
கடப்ப மலர்நதி யறுகொடு தும்பை
வடிப்ப முளசடை முடியி லணிந்து
கயற்கண் ணெனவளர் மதுரையி லெங்கள் உமையாளே.

---

6, துலங்கல் - ஒளி செய்தல், இடர் - துன்பம்
தொனி - ஒலி மலரயன் - நான்முகன்
சுருதி – வேதம் கும்பம் – குடம்
திரை - அலை தனம் – நகில்
கருணை – இரக்கம் கிளர்ந்து – நிறைந்த
பரகதி - வீடுபேறு வைகுண்டம்-திருமால் நகரம்
அருணை-திருவண்ணாமலை அறுகு – அறுகம் புல்

## (பெண்ணாசை மறக்க வேண்டல்)

(தந்தன தானன தந்தன தந்தன
தந்தன தானன தந்தன தந்தன
தந்தன தானன தந்தன தந்தன தனதான)

7 அஞ்சன வேல்விழி ரஞ்சித வஞ்சிள
தந்திர வுபாயம றிந்திடு வம்பிய
ரன்பொடு சோர்வுக லந்தும ருந்துசெய் பவரேனும்
அந்தணர் காதல்மு யங்கிம யங்கிகள்
விங்கித மூரல்சு கந்தவ சந்திக
ழுங்கிக ரோகமி ருந்துவ ழுங்குவ ருறவாமோ
சஞ்சல மானகி ரந்திப வுந்திர
மிஞ்சிய கோரசி ரங்குப ரங்கிகள்
தந்துற வாகிய கொங்கையர் தங்களை யணுகாமல்
சமரச தாசிவ மென்றொரு மந்திர
விந்தம தாகிய பங்கய செண்பக
தண்டைக ளோலசி லம்பொலி கிண்கிணி தணுபூகம்
பஞ்சச டாதர சும்புர திம்புரம்
கந்தம கேசுபர் கும்பம தங்கிய
பண்டித ஞானகு ழந்தை குந்தனி னுடராகம்
பைம்பொனு லாவிய கந்தபு ரந்தர
நந்திம கேசுபர் வெங்கள்ப தஞ்சலி
பங்கய நாரதர் வந்துப தந்தொழ நடமாடும்
செஞ்சர ணாரச தங்கைமு ழங்கிய
சங்கொலி நாதமி லங்குப ரம்பரை
திந்திமி தாதிகு திந்திமி திந்திகு வெனவேதான்
தெண்டிசை வானுயர் மண்டல மென்றிசை
குண்டல மாடிய சந்திய மந்திலர்.
செந்திரு வாகிய சுந்தரி யுன்செயல் உமையாளே.

---

7. அஞ்சனம் – கருமை
இரஞ்சிதம் – இன்பம்.
தந்திரம் – சூழ்ச்சி.
இங்கிதம் – இன்பம்

ஊறல் – காய்த்து வரும்புண்.
அங்கிகை – கச்சு
ரோகம் – நோய்.

## ( அன்னையே நிலையானவன்)

( தனதன தத்தத் தனத்த தந்தன
தனதன தத்தத் தனத்த தந்தன
தனதன தத்தத் தனத்த தந்தன தனதான)

8 பதர்சத குப்பைச் சழக்கு மஞ்சிய
கனசுமை வெற்பிற் குதைக்க லம்பிய
பலபிணி மொய்த்துக் கொதித்து வெம்பிய குடிலாகி
பசைகொடி ரைத்துப் பொருத்தி யுண்சத
மலசல மிட்டுப் பெருத்த உந்தியின்
பகற்குடல் தெத்திச் சுமத்தி என்பொடு முருவாகி

மதமிகு சத்தக் குணத்தி லைம்பொறி
யரையரை வைத்துப் பதித்த மெங்குள
வகைபல சித்ரப் பொரைக்கு ளுஞ்சில கிருமிவாழும்
மதமிகு சத்தக் குணத்திர் மண்முரு
வழுகமி குத்துப் புழுக்கு தம்மையில்
மருகிவ ழிக்கித் திகைத்து நொந்தற மெலிவேனோ

சதமிலை மக்கட் கிணங்க முறுஞ்சுக
மனவிம யக்கத் துடக்கெ னுஞ்செடி
தனையுமெ னக்குத் திருத்தி யின்புற நினைவாயே
சருவச கஸ்த்திரக் குறிப்ப றிந்தொரு
பருபத பிச்சிக் கதிர்க்கொ ழுந்தென
சததள பத்மத் துதித்த சந்திர மதியேநீ

உதயமெ னக்குத் தரித்த சிந்தையி
லதியவ ரத்தைச் செலுத்தி விந்தைசெய்
உபயக ரத்தைக் குவித்து நன்பொடு பணிவேனோ
உனதும கட்குக் கருத்து தந்தருள்
சிவனுமெ னக்குத் துணைப்ப தந்தர
உலகம திக்கட்ச் சணத்தில் வந்தருள் உமையாளே

---

8. உந்தி – வயறு
பத்மம் – தாமரை
சததளம் – தாமரை
உபயகரம் – இரண்டு கைகள்.

## (அருட்பெயர்கள்)

(தனாதனந்தன தான தானன
தனாதனந்தன தான தானன
தனாதனந்தன தான தானன தன தான)

9 அதீதசம்பிரிய நாத சீதள
வுலா சவுந்தர பாத க...
அனேக தந்திர்உ பாய மாதவி அபிராமி
அரூபி சங்கிர்ம ராச நாயகி
வரோதனங்கயி லாச கேசரி
அனாதியம்பரை தேவி யாமளை அதிரூபி

பதாதியங்குள தேவி மேரச
கரா தலம்பணி வேத பார்வதி
ப்ராகமன்றினி லாடு வேடவி மகராசி
பராசரன்புரு வேத வியாசரு
முலாவுபொன்கிரி மீது யாபர
பதாம்புயங்கவி நோத செந்தமி ழரமேசில்

சதாசிவன்கர பாலி சூலினி
வராகியந்தரி வீர சூரினி
தயாபரஞ்சுடர் தாங்கு மாலினி திரிசூலி
சராசரசம்பணி ராச பூசணி
மசானசங்கரி ரூப லாவணி
தனாதனந்தருவ் ஞான பூரணி மகமாயி

இதாயிதம்புக ழோது காரணி
தராதலந்திரி கோண நாயகி
இராமசந்திர சேது சோதரி சிவகாமி
எடாதகங்கண வாம நாயகி
கிடாரிதுந்துமி டாகி மேரகி
நிலாதவிந்தைசெய் வால மாமதி உமையாளே

---

9. அதீதம் – கடந்தது. சம்பிரமம் – மகிழ்ச்சி. உபாயம் – சித்தி அடையும் வழி. சங்கிரமம் – கலப்பு. திங்கட் பிறப்பு. பதாதியம் - காலாட்படை. தயாபரன் – அருளுடையோன். சராசரம் – உலகம், இதம் – அறம். தராதலம் - கீழேழ் உலகின் ஒன்று. வாமம் – இடப் பக்கம். துந்துமி - ஒர் அரசன். வால மாமதி - இளம்பிறை.

## ( யோக நிலை )

(தனன தனத்தத் தனதன தத்தத்
தனன தனத்தத் தனதன தத்தத்
தனன தனத்தத் தனதன தத்தத் தனதான)

10 சரடு திருத்திப் பலமணி முத்துக்
கரடு திருத்தித் துணைநடு விட்டுத்
தமர்து ளையிட்டுச் சரமென வைத்துச் சிறுநூலால்
சகல கலைக்கட் பெயரறி வித்துத்
தொளிர்கள் பயிற்றுக் கொடுமுடி சத்தச்
சகடை முழக்கிக் கழறிய டக்கி; வரவேதான்

இரடு பிடித்துச் செநனம டத்தைத்
தனது பகைத்துத் துரியவெ ளிக்கு
ழிவளை மயக்கிச் செயலையொ டுச்கி யொருகால்மேல்
இசலி மலைக்குட் சுவடுபி ரித்துக்
கவலை வனத்தை பரவைபி டிக்க
இருகை விரித்து குருகப ரிக்கத் தெரியாதால்

முரடு பிடித்துப் பகடுந டத்திச்
சகடு வளைத்துப் பொறிகட் பரக்க
முரிகள் சிவப்பச் சுகமூட னிதட் டிளையாமுன்
முருக னெனக்குத் துணையென வைத்துப்
பரம சிவத்தை நடுநிலை தொட்டு
முழிசு ழிவட்டப் புருவ மதிக்குட் திருமாலும்

குரடு மிதித்துக் கரடுத கத்துச்
சமனை யுதைத்துக் கொடியசு ரத்துப்
பிணிகள் துரத்திப் (பொரவெய யர்த்த) அடியேனை
குளவி யெனச்சற் பயிரவி மெய்ப்பொற்
... ... ... ... ...
குணமு மிகுத்துத் தருவருள் சித்தி உமையாளே

---

10. சரடு – பொன்னாலான கயறு சமன் - காலன்

## ( ஈன்றவளின் அருள் வேண்டல் )

( தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான)

11 முருக சரவண பவனை யருளிய
விமலி திரிபுரை குமரி பகவதி
முதிய தவசிவ பெருமை யருளிய மகமாயி
முழுது மடியவ ருனது திருவருள்
பெருக வரமது புரிய நவமணி
முதலை யறிவுசெய் யிதய வமரினி லெனதாயி

வருக மரகத நளின பரிமள
சுகமு மலரது மிகவும் நறுமண
வடிவு முடிசடை தெரிய மகிழ்வொடு வருவாயே
எமது தவசிவ சமய மிதுநெறி
யுபய கரமிசை மணிய மவுனமு
மதுர விகசித கமல மலரது பதிமீதே

தருக வொருபொரு ளறிய வுதவிசெய்
குமர குருபர சமர மிகுகர
தரள மதகரி யவனை யருளிய சிவகாமி
சகல கலைகளு முனது பழமொழி
அறிவ ரறிவினி லரிய வெளியொளி
தனிலும் வளர்ப ளுனது நிரைநிரை அபிராமி

உருக வுருகத தயவு மெழுகுநெய்
யெகுமை யுடையவர் பெருமை மகிமையி
லுறையு மிறையவர் பரம பதமதில் வளர்பாலி
உனது கயிலய கிரிய கொலுமிசை
இருவ ரதுபொருள் சபையில் நடமிடு
மிறைவர் தருகதி தெரிய உதவிசெய் உமையாளே

## (அரனுடன் மகிழும் அன்னை)

(தானதன தானதான தானதன தானதான
தானதன தானதான தனதன)

12 தேவிகிரு பாலிசூலி மாசறுவி லாசமாலி
சீரிய போகசாலி திரிசூலி
தேகமுன தாகமாயி யேகசரு வேசராயி
சீவசர ராசியாகி யெனதாயி

பாவிகலி தீரவேநி யாளவர வேணுமானி
பாரமக மேருஞான சிவரூபி
பாதமல ரானசார மாமதுர பானதீர
பாகுரச வாமகோர மகமாயி

ஆவிதிரி கோணமீது லாவுமொரு போதுமாது
ஆதிபர மீசர்பாத மகலாத
ஆகமபு ராணமான காவியம நேகநேக
ஆருமறி யாதசோதி யருள்வாயே

தேவியுட லாறுவீதி தேடுபர யேறுநாடர்
வீடுபெற வாழிநீடு மதியூடே
வீதிவரு போதுபாத தூளியென தேகமீதில்
வீறுதவ நாதநீதி உமையாளே

---

12. போகசாலி - செல்வமுடையவள்
தேகம் – உடல்.
கலி - துன்பம்.
ஆகமம் – தருமநூல்.
புராணம் – பழங்கதை
காவியம் – காப்பியம்,
ஏறு – இடபம்.
வீறு – பெருமை.

## (எங்கும் நிறைந்த நிமலி)

(தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான)

13 பரவு மடியவ ருளமு மிடமதி
திரையும் விகசித மலரி நினையடி
படிக பரமனை தனிலு மலைமக ளதிருபி
பரமி பயிரவி பிரமி திரிபுரை
விமலை குரவணி கவுரி சததள
பவுரி பவுரிக சமரி சமரக சிவயோகி

விரவி நனைதுயி லொருவ நெடியவ
னினிய கலியுக வரத னவனுட
வரிய துணையென (வரமு மிகதர) வளர்பாலி
அகில மெனதுமெய் மூகிலு முகடள
வவையு மதிலுள தொழிலும் வகைபல
அழகு மழகினி லதிய திருவுரு வெனவேதான்

வரவு கதிர்மதி னுதய மனுதய
தலமு மெழுபுவி முழுது முறைமுறை
வருட மொருதொகை யெழுதி வயதினை யொருநூறு
மகிழ்வு வெகுகன தளர்வு பலசில
கிளைஞ ருறவினர் சிறியர் முதியவர்
(மனைவி மகவெனும்)பெ ருமை யநுபவ விதியாலும்

இரவு பகல்யுக முடிவு தனிலர
சியல்பு புரிதிரு தனமு முடையவ
ளிகமு மிகபர வரமு நிறுவிய மகமாயி
எனது மனதினை வினைகள் பலவுயி
ரதனை வரம்வளர் நெறியி லுயர்கிரி
இமய பருவத குமரி பகவதி உமையாளே

---

13. பரவும் – புகழும். விகசிதம் – மந்தகாசம். சததளம் – தாமரை. அகிலம் – உலகம். அனுபவம் – நுகர்ச்சி, அழுந்தியறிவது இகம் – இம்மை.

## (துணை வேண்டல்)

(தானான தானன தான தானன
தானான தானன தான தானன
தானான தானன தான தானன தனதான)

14 ஓயாப பிற்பிரக் காசி யூசி
லாகாது நோயரது காம லாகிரி
யூடாடி யேறிடும் வாத சூலைக ளுடனேதான்
யூதாரி தோதகியர் பாத மாய்கைசெய்
... ... ... ... ... ... ... ...
வோகேர கோவெதினை யேக மாகவு மெனபாவம்

ஆயாவ்த போதநர் வேத காரணி
தாயா வேனவரு மாது நாரணி
யாவேச மாகிய போது பூரணி யனுவாகி
ஆதார மாஞ்சிவ போத மாத்வி
பாதார மேகதி வேத நாயகி
ஆகார மேதரு லோக நாயகி அபிராமி

ஈயாத மானிட லோப ராகிய
மரமாவி சாதக ரோட னேகமு
நேகான பாரத வேத மோதியு மறியாதார்
ஈசாவெ ணாதவர் மூட வேதவர்
காசாசை நாடிய தேட வீடிய
வீடே வேயறி யாத கேடர்தம் உறவாமோ

வேயூது மாதவ ராச சீகர
நேயாள்ச கோதர வாச மாகிய
வீரான மாமதி யாதி சீதள விமலாயி
மேரூரு பாமள வாச கோசர
மீதேசு பாகர ராதி சேகர
வீடேகி யேவளர் கூடல்மேவிய உமையாளே

---

14. முதல் அடியில் பல சொற்கள் மாறியும், திரிந்தும் விடு பட்டுமுள்ளன.

## ( அனைத்திலும் அகத்திருப்பவள் )

( தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான)

15 அருமா தவமே செயலே பொருளே
அடியா ருளமே குடியாகி
அணுவே உருவே அளவே தளியே
அமரா வதியே அதிரூபி

ஓருமா தவளே பிரியா தவளே
உளமே யளமே யுரிதாகி
யுகமே யகமே யிகமே பரமே
ஒளியே வெளியே உடையாளே

கருமா முகிலே யரனா ரிடமே
களையே முளையே விளைவே நீ
கனியே ருசியே வமுதே அடகே
காயே பூவே தெவபால

வருமா மணியே சுடரே வடிவே
மதியே விதியே யெனையாளு
மதுரா புரமே சதுர்வே தகமே
மருவே மதுரை உமையாளே

---

15. அணு–நுண்மை. அளவு–எல்லை. தளி - நீர்த்துளி. அமராவதி – தேவேந்திர நகரம். அதிரூபி – பேரழகி. அளம்–நெருக்கம் யுகம் – ஊழி. அகம் – ஞானம், விண், ஆன்மா. இகம்–இம்மை பரம் - மறுமை, முகில் – மேகம். அரண் - சிவன். களை – புல் அடகு – இலை. சதுர்வேதம் – நான்கு மறைகள். மரு–மணம்

## (சரண் பதம்)

(தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத் தனதான)

16 அருணக் கிரணம் பொறிகட்க் குணர
வதைத் தனையத் தெரியாமல்
அமுழிக் குமுழிக் கலவிச் சிதமித்
தவனைக் கருதிப் பலகாலும்

தருகக் கமலச் சிமிழுக் கிணைவற்
பணையிற் றுவளக் கடவேனோ
சலனக் கவலைக் குடிலத் தெளியச்
சரணப் பதமுற் றருள்வாயே

கருணைப் பருவப் புகழைப் பெருகக்
களபத் துளபக் கிளையாய்நீ
கயிலைப் பதியிற் சிவனைச் சபையிற்
கருகித் திருகிக் குழையசலும்

திரணக் கனகப் புலனைப் பொருளைத்
திரவிக் கறிவத் தெரியாதால்
செயலைத் தருகப் புருவச் சுழினைத்
தருவிற் பரவும் உமையாளே

---

16. அருணக்கிரணம் – சிவந்த ஒளிக்கதிர். சலனம் - கலக்கம். கவலை - அச்சம். குடிலம் – மாயை. சரணம் - புகலிடம். கருணை - இரக்கம். பருவப்புகழ் – உயர்புகழ். களபம் – யனைக்கன்று. துளபம் – துளசி (திருமாலுக்கிளையவள்) தரு – கற்பகத்தரு.

(செல்வமளித்திடும் சிவகாமி)

(தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான)

17 ஆனைமுகத் தானைவயத் தானைமதத் தானைநிறத்
தானைமருப் பானைமுதல் வனையானும்
ஆறுமுகத் தாறுசடைச் சோதிமதித் தேறுவிடைப்
பாதிமதிக் காதிபரப் பொருளாகி

சேனைநிலத் தூறுமுயிர்க் கானபசிக் கானவகைப்
பானமுரத் தேனருளிச் செயலாலே
சீருருவிப் பாரமலைக் கோடுநிகர்ச் சேரமுலைச்
சேணிநிதிப் பாணிமதிச் சிவகாமி

ஊனையெடுத் தூணைவளர்த் தூஞுகரத் தூணுடலைத்
தூரடரப் பேயடரச் சிலநோய்கள்
ஊணிவிடச் சீதசுரத் தாதுகெடப் பாசமுரத்
தேரகைகளப் பாலநளத் துரளுமுன்

தானையிடப் பாகமுரத் தூயகரத் தாரளுவிச்
சாதனையற் றேவருட்செய் அபிராமி
தாரணியிற் காரணகொற் பூரணமுற் றாபரணப்
பேரருளத் தாளருளும் உமையாளே

---

17. கோடு – யானையின் தந்தம். சேணி – வித்தியாதரர் உலகு. நிதிப்பாணி – இலக்குமி. மதி – நிலவு. ஊண் – ஆன்மாவின் இன்ப துன்ப நுகர்வு. தானை – படை. தாரணி – பூமி. தாள் – பாதம்.

## ( நடன நாயகி )

(தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன தனதான)

18 சந்தன குங்கும சாந்து மேவிய
பங்கய தொம்பத மேந்து மேடையில்
தம்புர கிம்புர ளேங்கி யாழிசை யநுராகம்
தண்டைகள் கிண்கிணி சேர்ந்த பாடக
மிங்கித சங்கித பாங்கி நாடக
சம்பிர்ம கங்கண தாண்ட வேதவர் சபைமீதில்

அந்தண நின்புதி சாங்க மோதிய
மண்டல மெண்டிசை யீன்ற மாதவி
அன்பினி லன்புசெய் வாஞ்சை நாயகி அபிராமி
அந்தரி சுந்தரி யூரண்ட வான்முக
டண்டம கண்டம தூஞ்ச லாடிய
அங்குச செங்கர மீய்ந்த பார்வதி யருள்தாராய்

கந்தனொ டைங்கர நான்கு தாகர
வந்தியி னம்புகழ் வேண்டி யேவளர்
கண்கழி யஞ்சன மூய்ந்த வேல்விழி யதனாலே
கண்டிரு கண்களி கூர்ந்து தானொரு
பண்டித மைந்தனை யாண்டு பூமிசை
கங்கையெ னுங்கழ லார்ந்த மாமலர் தருவாயே

உந்தனை யும்பவ வான்ப யோதநச்
சிந்தைசெ யிந்திரர் கோன்ப ராபர
னும்பர்கள் பண்புற நீண்ட காரணி கிருபாணி
உன்பத நன்மையில் நான்கு சாதியி
லெந்தனை யங்கையி லேந்து நீரணி
உந்தயில் வந்தன தீந்தின் மேதவி உமையாளே

---

18 சாந்து - கலவைச் சாந்து. மேவுதல் - சேர்தல். இங்கிதம் - இனிமை. சம்பிரமம்—களிப்பு. சாங்கம் - சங்கொலி. வாஞ்சை - ஆசை. அண்டம் - உலகம். அகண்டம் - எல்லாம். ஐங்கரன் - விநாயகன். அஞ்சனம் - கருமை. உம்பர் - தேவர். அந்தன்- இயமன். அங்கை - அகங்கை.

## (யோக நிலை)

(தனத்த தத்தன தத்த தனந்த
தனத்த தத்தன தத்த தனந்த
தனத்த தத்தன தத்த தனந்த
தனத்த தத்தன தத்த தனந்த
தனத்த தத்தன தத்த தனந்த
தனத்த தத்தன தத்த தனந்த தன தான)

19 துடக்கி முட்னர தட்டி லிருந்து
விதிக்கு மட்சர வைப்பு மலர்ந்து
குகைக்கு ளூர்ப்பன செப்பி லளைந்து
தரிக்கு முத்திரை மெய்கு ளணிந்து
துவைக்கி வைக்கிய பைக்கு ளடங்கி
யழுக்க ளடைக்கு முப்பு மிகுந்து மிளகாகி
சுழித்தெ ழுந்தொரு வட்ட மிகுந்து
அழுத்தி யச்சுரு முற்றும் வகுந்து
யிருத்தி முப்பொரு தப்பு மிகுந்து
பொருத்த சக்கர சத்தி பரந்து
துருத்தி சிக்கிய கட்டி லிசைந்து
வகுத்து ருப்படி வைத்து முடைந்து நிரையாகி

முடக்கு சித்திர நிஷ்டை பொருந்தி
யெடுத்து ருக்களை முற்றும் நிறைந்து
உருக்கி யக்கல சத்தை யடைந்து
மனைக்கு ழுப்பினை பொக்க நிறைந்து
முருக்கு முப்புரி பத்து முடிந்து
விரித்த தத்துவ கட்ட ளைஎங்கும் விரிவாகி
முளைத்த சற்குரு முத்தி புரிந்து
எடுத்த லட்சண வித்தை பயின்று
தரித்த சைக்குட மட்டு மறிந்து
மயக்கி யக்குகை தொட்டு நெளிந்து
முழிக்கு நட்டனை யிட்டு வளர்ந்து

... ... ... ... ... ... ... ...

அடக்க மிட்டதை யிட்டு மறந்து
யியக்கி விக்கிவி ருத்து வியென்று
மதுக்கு டத்தைநெ கிழ்த்து டல்கண்டு
நழுக்கி யக்குகை விட்டு மலங்கி
... ... ... ...
யிழுக்கு மச்சுரு மெத்த மயங்கி — வெளியேதான்
அலிக்கு மெய்க்குயி ரப்பு மிகுந்து
மயக்க ருத்துள விக்கி லழுந்து
அழுக்கு வக்குவ சத்தை முழங்கி
யிசைத்த வக்கிது டைக்க நடுங்கி
நயப்பு மிக்கத ரைக்கி டையெங்கும்
நடத்தி விக்கமு டித்து வழங்கு — சங்குச்சேனை

அடக்க முற்பன வித்தை தெரிந்து
யிகத்தி லித்தனை செப்ப டிபந்து
நடத்தி விப்பது கற்பினை யுன்றன்
சமத்தி யுத்தமி சொற்படி யெங்கு
மளித்த ழிப்பது சித்திர விந்தை
விளக்கி நிற்பது நிட்ட குமென்று — முடையாளே
அழுக்க றுத்தெனை யற்பு தசிந்தை
வழுத்து லட்சண லட்ச ரமுந்த்ரி
குமுர்த்த சித்திபெ றத்த ருள்சுந்தரி
மறத்தி யக்குவ டத்தி னிபஞ்சமி
அமைத்த கற்பக விற்ப ஊபங்கய
நிறத்தி தற்பர சட்சு தசங்கரி — உமையாளே

## ( அருள் வேண்டல் )

( தான தந்தன தான தனாதன
தான தந்தன தான தனாதன
தான தந்தன தான தனாதன தனதான)

20 ஆதி சுந்தரி யாயி நமோநம
சீத சந்திர சோதி நமோநம
ஆறு செஞ்சடை வேணி நமோநம அருள்தாராய்
நாக கங்கண வாமி நமோநம
நீல முண்டக மேனி நமோநம
ஆளி சங்கர பாணி நமோநம யெனதாயி

நீதி யம்பர வாழ்வே நமோநம
ஆதி மங்கள லாதி நமோநம
யோக சம்பிர்ம யோகி நமோநம சிவகாமி
ரேக சம்பிர்ம யோகி நமோநம
மூர கந்திரி சூலி நமோநம
நீர ணிந்தபி ராமி நமோநம வெகுருபி

நாதி யங்குச பாணி நமோநம
சோம வங்கிச தாயி நமோநம
ராச பண்டித நாதி நமோநம நரபாலி
நாளுமிங்கித மாதே யுலாவிய
பாக மங்களி னாலே சராசர
நாத வின்பம தாலே மகாதல மிடிரேழும்

விதி யந்தரி லோகா திலோகமும்
நீய றஞ்செய வாழு மநேகமும்
வீடு மங்குள வேறா குலாவிய பெருவாழ்வும்
விரி சங்கர கோலா கலாபமும்
தான வந்தித தேவா திதேவர்செய்
வேத மந்திர மூநி யெஏனவருள் உமையாளே

---

20 சீதம் – குளிர்ச்சி. முண்டகம் – தாமரை. ஆளி – சிங்கம் யோகம் – தவநிலை, சோமவங்கிசம் – சிவன்கூறு. இங்கிதம் – இனிமை.

## (மறைபொருளானவள்)

(தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தனதான)

வரவர அறிவு பிரிந்து நாடொரு
முருதியொ ருவழி திறந்து வீடுற
வகைகளு தவிசெய் நிறைந்த பூரண வடிவே நீ
மனநினை வறிவு புகுந்து மேவிஙக
கனகன லொளியில் மிகுந்து தாவிய
மறைபொரு ளாகியு மிருந்து கூவிய மகராசி

அரியரி மலரயன் பரந்த ரதிபதி
மிகுதவ முனிபல் வளர்ந்த மாதவர்
வரவரி ருதய தலங்க ளானது மகலாமல்
அருவுரு வென்வரு சிவந்த காரணி
தருவுகு மிருபதம் கிளர்ந்த பூரணி
அதிவித சவுரிய மிசைந்த நாரணி தருவாயே

பரவிய மிருபத சதங்கை யேபல
கலகல கலிரென நடந்து பூமிசை
பணிமணி யழகுற திருந்த மார்பணி சிவகாமி
பகரரு மிகர்ச வுசந்த தேனது
உகரவு மதுர்ச முனிந்து தானொரு
பரமசு கமது புரிந்து பாரினி லடியேனை

இரவு பகலது ரண்டு நேரமும்
வரவு பகலதுங்கண்டு தேரவும்
இதய வமரினில் வந்து நீயருள் யெனதாயி
இளைய மகனொரு தொந்தி வாரணர்
பழைய கிழவனொ டம்பி சேகரி
இனிய மதுரையில் வந்த லாகிரி உமையாளே

---

21. அரி - திருமால். மலரயன் – பிரமன். புரந்தரதிபதி - இந்திரன். அருவுரு – அரிய உருவம். சவுரியம் – சூரத்தனம். தொந்தி வாரணர் – விநாயகர். இளைய மகன் - முருகன். இலாகிரி - மதர்ப்பு.

* இறுதியடியில் - தனன தனதன தந்த தானன என சந்தம் மாறியுள்ளது.

(வீடுபேறு வேண்டல்)

(தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன தனதான)

22 வாயுத் தாரணை நாடிய மாமுடி
யோகச் சாதனை தேடிய சேவடி
வாசித் தோவர லோடிய வீடியல் தருவாயே
வாதுக் காடிய மாசிவ தேசிகர்
மீதுக் கேமய லாகிய மோகினி
மாய்கைக் காரணி தோதகி சாதகி மகராசி

தேயுத் தாரக மேவளர் பூரணி
வாயுத் தாரணை மேவிய காரணி
தீதத் தேசுட ராடிய நாரணி சிவகாமி
தேவர்க் காதிப ராகிய வேலவர்
பூபர்க் கேமுலைப் பாலமு தாகவெ
தேடித் தானரு ளேகொம சாதன முடையாளே

... ... ... ... ... ... ...
நீயும் மாசன மேவிய மாலினி
சேவிப் பார்கலி தீதறு சூலினி
நீறிட் டாருள மேயம ராவதி மதியூடே

... ... ... ... ... ... ... ... ...
மாசித் தாநர மாநர சேனைகள்
பூசித் தேவரு கூடலில் மீன்வள
மாலைப் பூமல ராயிம னோகரி உமையாளே

---

22. வாயுத் தாரணை – வாயுவை நிறுத்துதல். வாது – சண்டை. மயல் – காமவிருப்பம். தேயு – தீ, தாரகம் – ஆதாரம். நீயம் - ஒளி. ஆசனம் – இருக்கை. சேவிப்பார் – வணங்குபவர்.

## (இருபதத்தழகியின் புகழ்)

(தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தன தான)

23 கனக கயிலையிற் சிவனை வரவர
மனது தனிலுரை பணியும் வகையது
கமல முகமலர் புருவ நடுவணை யதனூடே
கருதி மதுரச துகளி லினியமு
தரள மரகத கிளியை வடிவுள
கருணை யிருபதத் தழகி வருள்பெற மனமேகி

அநக னதிகுணத் தகுமன் னுருவிழி
நடன கருவித சபையி லுளபடி
யவனை யெதிர்பெற குமரி பகவதி மயலாகி
தனன தனதன தகட திமிதிமி
செகந செகநதி குரத திகுரத
தரள மணிவடத் தொளிர்கள் பளிரிட விளையாடி

சகல கலைமுதற் குமரி முறைமுறை
யறைய வெகுபறை திகிரி யதிரிடச்
சமரி பயிரவி தகதி செயசெய மெனவேதரன்
செனக முனிபரப் பிரம நிகரும
தவசி முனிஅரி யரது மதிசயப்
பெருமை இதுவென அகமும் கிளர்வுர விதிலேதான்

... ... ... ... ... ... ... ... ... ...
சிகர வரையினிற் பரம ரகசியப்
பொருளை மதிதிருப் புகழை யெனதெனத்
தெளிய வகையிதுக் குரிய மதிதரும் உமையாளே

---

23. கனகம் – பொன், தரளம் – முத்து. அநகம் – அழகிய. அநகன் – இறைவன். திகிரி – சக்கரம், தேர்.

## (தடைகளைத் தகர்க்கும் தாய்)

(தனத்தா தனந்த தனத்தா தனந்த
தனத்தா தனந்த தனத்தா தனந்த
தனத்தா தனந்த தனத்தா தனந்த தனதான
)

24 பணத்தா டுசேர்ந்து நடுத்தா ளதிர்ந்து
யெடுத்தா டுசெம்பொ னடுத்தே முடிந்து
பழுத்தே கனிந்து பணித்தா டுவந்து வெளியேதான்
பசித்தே யுழன்று முலைப்பா லருந்தி
யனைக்கே தவழ்ந்து பிரித்தே நடந்து
பணிப்பா டகங்கள் சுரித்தே சதங்கை யரைஞாணும்

மனத்தோ மணங்கள் தனக்கே வணங்கி
லிருப்போ டுகந்த சுவைத்தே னருந்தி
மதத்தா ரைபொங்கி யிகத்தே வளர்ந்து வயதாகி
மயக்கா னபெண்கள் யிடத்தே மயங்கி
யிழுக்கா னவங்கி பிணிக்கே கிரந்தி
விடப்பா தகங்கள் பிடித்தே கவந்து திரிவேனே

... ... ... ...
சரக்கூ டமென்ற சிரக்கோ புரங்கள்
திருத்தாள் கடந்து வழிப்பா தையொன்று
தரத்தா லிருந்தி நினைப்பாய் மதங்கி மகமாயி

சுணப்போ துநின்று வெளிப்பா தைகொண்டு
கிணப்பூ தபஞ்ச பிணக்கே களைந்து
சனித்தே ரவங்கி விளக்கா கியெங்கும் பரமான
சடத்தே கலந்து தனைத்தா னறிந்து
மலைத்தேன் வழிந்து வரத்தா னுகந்து
கருத்தோ டிருந்து சுகத்தோ டணிந்து உமையாளே

---

24. உழறுதல் – கலங்குதல். மதத்தாரை – விருப்பம், வெறி. பாதகம் – பெருந்தீவினை,

## (அருட்செயல்கள்)

(தனந்த தந்தன தந்தன தந்தன
தனந்த தந்தன தந்தன தந்தன
தனந்த தந்தன தந்தன தந்தன
தனந்த தந்தன தந்தன தந்தன
தனந்த தந்தன தந்தன தந்தன
தனந்த தந்தன தந்தன தந்தன தனதான)

25 சுகந்த சந்தன குங்கும சிந்துர
மிலங்கு பங்கய செண்பக சுந்தர
முகங்க ளிங்கித செங்கனி தங்கிய
மதங்கி தந்திர மந்திர சுந்தரி
துலங்கு செண்பக தண்டைகள் கிண்கிணி
முழங்கு சங்கொலி யன்பும திர்ந்திட நடமாடும்
சுமங்க ளங்குச சுந்தர சங்கரி
விளங்கு குண்டலி செஞ்சடை பிங்கலை
தவங்க ளம்பர செந்திரு சுந்தரி
வயங்கு முண்டணி நஞ்சுடர் பிஞ்சணி
சுரந்த மஞ்சரி வஞ்சகி பஞ்சமி
நிரந்த ரம்பரி யிந்திர சம்பிரமி யருள்தாய்நீ

செகம்பு கழ்ந்தபு ரந்தரி யம்பிகை
யறங்க ளெங்கு மளந்து வழங்கிய
தரம்பரி யில்புக கரந்தச வுந்தரி
வசந்த னும்பணி யும்பர்ம கிழ்ந்தன
சிவந்த கண்களில் வந்துவ ணங்குவ
முகுந்த னுந்திரி யம்பக முண்டக னுடனேதான்
சிறந்த பொன்கிரி மன்றினில் நின்றுள
நடம்பு ரிந்ததி லன்றுவ ளர்ந்துயர்
புவன்க ளின்கண மிங்குள முந்தரி
யளந்த கண்சுழி செஞ்சுட ரைம்பொறி
சிலம்ப லம்பிய சந்தத விந்தைகள்
விளைந்த ருந்தவ சங்கண விண்பதி மகமாயி

உகங்க ளண்டமு தண்டத லங்களு
மெழுந்த செங்கதிர் சந்திர வின்பமு
நிலங்க ளுஞ்சிறு கங்குல மங்குல
பிலங்க ளுந்திரை கங்கையுஞ் சங்கமு
முரங்க ளுங்கிரி யன்பரு மின்பமுந்
தினங்க ளுஞ்சில திங்களு சங்கையு மயராமல்
உடந்தை யிங்குள தொந்தமு முந்தனை
வணங்க வுங்கதி தந்தவ ளொண்புகை
யடங்க லுங்குடி கொண்டவ னய்ங்கர
குழந்தை யென்றொரு தம்பிப ரங்கிரி
யுளங்க ளிந்துவ ரந்தரு செந்தியி
லமர்ந்த குஞ்சரி மஞ்சரி பங்கினில் மணவாளன்

இகங்க ளுஞ்சர ணஞ்சர ணென்றிட
மதங்க ளுஞ்சொல வஞ்சக நெஞ்சது
பயங்க ளும்பத னென்றிட வஞ்செழுத்
தமுந்த வுங்குரு லிங்கசி வன்செய
லிசைந்த கந்தனை மைந்தனை யுந்தனை
அயர்ந்து கண்டுயில் கின்றம னந்தனில் மறவேனே
இரங்கி யங்கையி லென்கலி சங்கட
குலங்க ளெண்கிரி வண்பிணி யுங்குடி
அறங்கள் கொண்டதி லுங்கிவ ரம்பெற
விடுஞ்ச ரங்கொடு துந்துமி கிஞ்சுக
மிகுந்த செங்கர கங்கண பங்கய
மலர்ந்த விந்தும ணத்தர வந்தருள் உமையாளே

---

25 இலங்குதல் – விளங்குதல். வசந்தன் – மன்மதன். முகுந்தன் – திருமால். உகம் - ஊழி. தொந்தம் – தொடர்பு. குஞ்சரி - தெய்வானை. துலங்கல் – ஒளி செய்தல். உம்பர் – தேவர். சந்ததம் - எப்பொழுதும். உடந்தை – துணை. கதி – வழி.

## (நல்லோர் நட்பை வேண்டல்)

(தனதன தானன தான தானன
தனதன தானன தான தானன
தனதன தானன தான தானன தனதான)

26 திருவுள மானச காய மாயொரு
பொருளது தோணவி வேக மேவரு
செயலது காணநி தான மேதரு சிவகாமி
திருகுண மானவு லாச மோகினி
ரவிகுல ராசச லாப வாகினி
சிவமய ரூபமெ லாம தாகினி செகமாதா

வெருவுள மானபொ றாத கோபிகள்
பொறிபுல னாணம றாத பாவிகள்
வெளிபெற வீடுபெ றாத லோபர்க ளுறவாமோ
விரகது மீறிய தாப சோபனை
இருள்வினை மூடிய லோப லாபனை
வினையற நேசமு னாத கேடனை நிறைவேற

மருவுள மாகிய ஏக நாயகி
அருடர வாசக மான சாதகி
மணிமுடி சூடிய சோம சேகரி மகராசி
மதுரச மாஞ்சிவ யோக நாரணி
வுருகுரு மாதுவி வேக பூரணி
தனதுள மாகிய வேத காரணி அபிராமி

... ... ... ... ... ... ... ... ... ...
சததள மீதினி லாப சீதள
விகசித மாமதி போலு மாதள
சவுரிய சாகர லோக நாயகி உமையாளே

---

26. சகாயம் – நன்மை, உதவி. நிதானம் – ஆதிகாரணம் வெருவுளம் – மனக்கலக்கம். உலோபர் – பேரவா உடையவர் தாபம் – தாகம். சவுரியம் – சூரத்தனம். விவேகம் –பகுத்தறிவு. செகமாதா – உலகத்தாய். பாவிகள் – தீயோர். விரகம் – காமநோய். வாசகம் – மொழி. சாகரம் – கடல்.

## ( தவத்தோர் வணங்கும் தாய் )

( தத்தன தான தத்தன தான
தத்தன தான தத்தன தான
தத்தன தான தத்தன தான தனதான)

27 சத்திய மாதர் நித்திய தார்தர்
வித்தகர் வேதர் சட்சமை போதர்
சிட்சகி நீதர் தற்பல கோலா கலமாது
சத்சிவ யோகி புத்தியி லூகி
தற்பர சாலி சொற்பொரு ளாகி
சற்குண மாகி நிர்க்குணதாயி நிலமாயி

நித்திய தாரி பத்திர காளி
சித்திர ரூபி மித்திர பேதி
நிர்க்கத தூளி பற்பவி மானி பரிபாலி
நிற்சிவ சோதி சச்சுத நாதி
சக்கர பாணி நிஷ்டச மாதி
... ... ... யஷ்டக ளேது எனதாயி

வித்திய மாரி சத்துரு கோரி
யச்சுத மாலி பச்சைநிர் வாணி
விக்ரம நாரி யுக்ரபி டாரி மயிடாரி
விஷ்ணுமு ராரி சற்குண தாரி
முக்குண வாமி லக்கண நேமி
விற்பன வாகி கற்பக தேசி சிவயோகி

... ... ... ... ... ... ...
கைப்பொருள் நீதர் புத்திர நானோ
குத்தம தானால் சித்தமென் மீதே
— — — — வைத்திடு தாய்நீ உமையாளே

---

27 சத்தியம் – உண்மை. தாதர் – தொண்டர். வித்தகர் – அறிஞர் வேதர் – மறையோர். சட்சமயம் – அறுசமயம். போதர்-ஞானிகள். நீதர் - நன்னெறியோர். தற்பரசாலி - உமை. சற்குணம்-நல்லியல்பு. மித்திரபேதம் – நட்புப் பிரிவு.

## (தென்னகமே தன்னகம்)

(தந்தனன தந்த தந்தனன தந்த
தந்தனன தந்த தனதான)

28 கண்டகம கிழ்ந்து கொண்டுளம்நி றைந்து
கண்களும லர்ந்து களிகூர
கந்தவனை யின்று என்றனிடம் நின்று
கண்டுபணி யென்று மொழிவாயே

மண்டலமு ழங்க விண்டலம்வி ளங்க
மன்றினில்ந டந்த மகமாயி
மைந்தனுவி ருந்த பைந்தொடிம கிழ்ந்து
வந்துளமி ருந்து வினைதீராய்

தண்டமிழ லர்ந்து தொண்டரும்வ ளர்ந்து
சந்ததம கிழ்ந்து வரவேதான்
சம்புசிவ னன்று கங்கணம ணிந்து
சங்கதம்பு னைந்த சிவகாமி

தண்டனிடு மன்பர் நின்றுபணி கின்ற
திங்களணி கின்ற திரிசூலி
தென்புவிபு ரந்து தன்பதியி தென்று
சிந்தையுடன் வந்த உமையாளே

---

28 மண்டலம் - பூமி. விண்டலம் – ஆகாயம். மன்று - கனகசபை. தண்டமிழ்–இனிய தமிழ். சங்கதம்–உறவு. தண்டம்–வணக்கம். புரத்தல்-ஈதல்.

## ( வானோர்க்கும் அரியவன் )

( தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதான )

29 சிந்தித் தொழுவது கணபதி செயசெய
கங்கைத் திருமுரு கரஅர பவபவ
செஞ்சொற் பததிரி புரைபரை யரகர எனவோதும்
தந்தித் திரிகிட செணகிட திகிடத
நந்திக் கிடகிரிக் குடையவ ரர்ப்புத
திங்கட் சடைமுடி யுடையவ ளுரமுறை திரிசூலி

வந்துற் றவருட பவவினை பொடிபட
எந்தத் தவமது அவரவர் மனதுட
வஞ்சக் களையற நடமிடு திரிபுர நகையாளே
வம்புச் சிறுவிடு விகசித மெனவொரு
கொம்பிற் கனிவெகு ருசிதனி லதிவித
மங்கைப் பரசிவ மதிநுத லெனவரு மகமாயி

நந்திக் கருளிய வொருபொரு ளதுதனை
மைந்தர்க் குதவிசெய் யொளிபெற வெளியில
நன்புற் றிருபத மனுதின மனதினில் மறவேனே
நஞ்சுக் கறைமிட றுடையவர் வெறியற
நெஞ்சுக் கொருடிதி திறமென உதவிய
நன்றிக் கதுநிக ரறம்வளர் பெரியவ ளெனவேதான்

அந்திச் சதிமதி மணிமுடி சடையொடு
மிந்தப் புவிமிசை வருமதி செயமென
அண்டர்க் கரிதவ முனியடி பணியற அதிரூபி
அங்கத் தழகினி லழகிய திருவிரு
வெங்கட் கொருதிற னழவது தெரிதள
அய்ந்துக் கொருமுத லிதுவென வரமருள் உமையாளே

---

29 பரை – சிவசக்தி. பவவினை – பிறப்பு வினை. நுதல் - நெற்றி அனுதினம் - எப்பொழுதும். மிடறு - கழுத்து. அண்டர் – வானோர். அதிரூபி - பேரழகி.

## (மூவர்க்கும் மூத்தவள்)

30 (தத்தனன தான தத்தனன தான
தத்தனன தான தனதான)

ரத்னவொளி தீப சித்ரமதி ரூபி
நிர்ப்பரம சோதி யுடையாளே
நச்சரவு தோகை பச்சைமயி லாட
மெச்சியப தாகை வடிவேலன்

கிஷ்ணனயன் மூவர் முற்றுமுள தேவர்
கற்பமுன தாக விளைவான
கர்ச்சிதவு லாச வுற்பநவி சேஷ
கட்டிபரி பாலி கவுமாரி

விஷ்ணுமய மாக வர்த்திகள ளாகி
மெய்க்குயிர்க ளாவு முணர்வாக
விற்பதக லாம லட்சகர தாகு
மித்ரகலி தீர மதிபோலே

குட்னிதன தாமி கட்னெயிளை யாளி
கொச்சையிடை யாள மகவேரி
கொக்கிறகு சூடி மிக்கவிளை யாடல்
கொத்தனிட மாகும் உமையாளே

---

30. அரவு-பாம்பு. மெச்சுதல்-கொண்டாடல். பதாகை-அடையாளம். அயன்-மகேசுவரன். மூவர்-நான்முகன், சிவன், திருமால். கற்பம் – கருப்பம். கர்ச்சித்தல் - முழங்குதல். உற்பநம் – தோற்றம். கட்டி - அகமகிழ்ச்சி. விற்பன்னம் – கல்வி. மித்ரகலி-துன்பம். கொச்சை-மெலிந்த. கொத்தன்-மண்சுமந்த சிவன்.

## ( நோய் நீக்க வேண்டல் )

( தனத்தன தந்தத் தந்த தானன
தனத்தன தந்தத் தந்த தானன
தனத்தன தந்தத் தந்த தானன தனதான)

31 வயத்தெழு கண்டிப் பண்ட வாதமு
மிகுப்பொடு சந்துட் டங்கு மூலமும்
வலித்திடு தந்தக் கென்ற சூலையும் குளநோயும்
மயக்கிய சண்டிச் சுண்டு வாதமும்
முழக்கிய தொண்டைக் கண்ட மாலையும்
வறட்சிகள் நெஞ்சுத் தங்கு கோழையு மிருமல்யாவும்

சயத்தெழு துன்பக் கந்த தாளையும்
விழித்திடு கண்கள் மந்த காசமுந்
தனித்தெழு வெண்பற் றந்த வாயுவும் விதராதே
தலைக்கசை மண்டைத் தொண்டை வீளையும்
நடுக்கய கண்டப் பொங்கு சாளையும்
தசைக்குரு வந்தித் தொந்த வாய்வுமந் திரைநோயும்

நயத்தெழு வன்பத் தொன்ற சீதமு
முறுக்கிய பண்டக் கிண்ட சூலையும்
நழுக்கிய தண்டுத் துண்டு சோகையும் பலநோயும்
நடத்திய திந்தப் பந்த பாசமு
மெடுத்திடு நின்கைப் பந்து போலவும்
நடத்திடு வஞ்சத் தஞ்ச பூதமும் விளையாட

மயத்தொடு சொந்தச் சென்மத தோடுடன்
வகுத்தவ னிந்தக் கொஞ்ச நோய்களை
வதைத்தர சிந்தித் துஞ்ச வேவிட வறியாயோ
மதித்தெழு பைம்பொற் செம்பொன் மேரினு
லுதித்திடு திங்கட் டங்கு பார்வதி
வழுத்திய தொண்டர்க் கன்பு தானருள் உமையாளே

---

31 முழக்கல் – ஒலித்தல். வறட்சி–சொறி. கந்ததாளி – ஒருவகை நோய். பந்தம் – பற்று. துஞ்ச – அழிக்க. பைம்பொன் - பசிய பொன். வழுத்தல்–வணங்கல். மந்தகாசம் – க்ஷயநோய் வகை

## ( புவியோர் போற்றுபவள் )

( தனந்த தந்தன தாத்தன தாத்தன
தனந்த தந்தன தாத்தன தாத்தன
தனந்த தந்தன தாத்தன தாத்தன தனதான)

32 மதங்க மங்குச பாட்டிமுப் பாட்டிகை
வரங்க விந்தொட்டி தாட்டிக
வங்கிளை யாட்டிசெப் பாட்டிய மாட்சியாலும்
மனங்க ளுந்தன தாக்கிய மேய்ப்பர
லிதங்க ளும்பெரு மாட்சிகர் மாட்சிகள்
மணங்க ளுஞ்சுக மாக்குசி ளுக்கிய பாக்கியசாலி

... ... ... ... ... ... ...
பசுங்கொ ழுந்தினர் பூப்பது காய்ப்பது
பரம்ப றந்தொளி ருக்குவ தாட்டுவ சூட்சிமாயம்

நிதங்க ளும்புவி யோர்கள்சவ் பாக்கிய
தனங்க ளுஞ்சிறு தேட்டையு மேட்டையும்
நிலங்க ளும்பதி வாழ்க்கையு மேற்கையும்
வாழ்க்கைத் தாழ்வும்
நிரந்த ரம்பரி யாட்டிதிப் பாட்டியர்
பரங்க ளுந்திரி லோகபி ராட்டிய
நிசங்க ளுஞ்செய லாக்கிது வாய்க்கவு மெளிதோதான்

சுதங்க ளுந்தொழு தேற்றிய கூப்பிய
பலங்க ளுந்தரு கார்த்திகை பார்வதி
சுகந்த ருஞ்சன மாட்டுதொட் டாட்டிய சம்பிரமதாயி
துலங்கு பங்கய வீட்டொளி காட்டிய
சரங்க ளங்குச மாட்டும்சி மாட்டியுன்
துசங்க முங்கித வாச்சியென் னாச்சி உமையாளே

---

32. முதல் இரண்டடிகளிலும் சொற்கள் பல திரிந்தும், விடுபட்டு முள்ளன.

## (கலிதீர அழைத்தல்)

(தானதன தானதான தானதன தானதான
தானதன தானதான தனதான)

33 வாதமிகு சூலையாலும் நீரளி கோர்வையாலும்
வாய்வுநிலை சோகையாலும் பிணியாலும்
மாய்கைபல காதலாலும் பூசலீடு மாதராலும்
வாடைகுளிர் பீடையாலு மெலியாமல்

ஊதுதிரை வேசையாசை மூசலது பாசநேசம்
ஊசலிடு தேகமாய்கை யறவேதான்
ஓமபுன லாடிநீடு காமமன லேரியாறு
வேசைநகர் வரமதேச முறவாவி

வேதவுப தேசநாத கீதமென வோதுகாதில்
விரிகவு மாரிசூலி விமலாயி
வேணிநவ கோணமாது ஞானசிவ யோகமாது
வீடதிய மாடகூட முறையாளே

ஏதுமறி யாதயேனை பாதமற வாதசீஷ்ண
யோககயி லாசதாச னடியேனை
ஏமவதை யானுமால காலபகை தீரநீயும்
ஏலவர வேணுமாயி உமையாளே

---

33. காதல் – காமநோக்கம். பூசல் – ஒப்பனை. வேசி – விலைமகள். மூசல் – சாதல். நேசம் – அன்பு. ஊசல் – அசைதல். நவம் – ஒன்பது. ஏமன் – இயமன். ஆலகாலம் – பாற்கடல் நஞ்சு. ஏல – மிகவும், முன்னம்.

## (சிவன் விரும்பும் சிவகாமி)

(தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன — தனதான)

34 சினத்தைக் காணமென தாவிர மாதவர்
மனத்துக் கேபரி பூரண மாகுவர்
செகத்துக் கேயொரு போதக மாகுவ — ரவரேனும்
செடத்துக் கேவரு தீதரு மாசபை
நடத்துக் கேசெய லாகுவர் தேசிகர்
சிரத்துக் கோபுர மேருவ பூருவ — விதியாலே

வனத்துக் கேசிவ யோகித போதனர்
சினத்துத் தானொரு மூலிகை வேரொடு
மதித்துக் காயிலை பூடுண வேகிரி — யுறைவோரும்
வரத்துக் கேதவ மீய்குல தாரென
அறத்துக் கூவென வேதிய ரோதுவர்
வரத்துக் கேதெரி யாதத போதனர் — வடிவேகேள்

சனத்துக் கேவசை யாகிய வேடமும்
இனத்துக் கேபகை யாகிய தோடமும்
சளப்பட் டேசுமை போடவு மேகொடு — விடுவேனோ
தடத்துக் கேசிறு வாசலு மாபுர
மடத்துக் கேசரு வேசரி தாள்துணை
தரத்துக் காதிப ராகவ சோதரி — மகமாயி

கனத்துக் கேகிரி மேவிய போதிரு
தனத்துக் கேசிவன் மோகம தாய்வரு
கருத்துக் கேமன மாமயல் சூடிய — மகமாயி
கடிக்கைக் கேகுவை லோகமெ லாமிரு
படிக்கப் போதற மேவளர் நாயகி
களித்திட் டேகயி லாசரை மேவிய — உமையாளே.

---

34. காணம் – பொருள், செகம் - பூமி, வனம் – காடு. தோடம் – குற்றம். சலம் – பொய். தடம் – வழி. தனம் – நகில், பர்பூரணம் - முழுநிறைவு. போதகம் - உபதேசம், கிரி – மலை, தபோதனர் – முனிவர்.

## (அருட் கோலம்)

(தத்தனன தான தத்தனன தான
தத்தனன தான தனதான)

35 தற்சொருப மான பச்சைநிற மேனி
தற்பரவி மான விசையாலே
சத்திநவ கோண வித்வசன மான
சற்குணிநி தான வடிவாகி

சத்தரிஷி வேத சற்றுமறி யாத
சற்சபையு லாச நடமாகி
சர்ப்பமணி வேணி நற்கனக பாணி
தர்க்கனிட ராளி தனதானி

அச்சுதசு ரூபி யுட்சிவிளை யாடல்
சப்தகிரி நாத ரிடமான
அற்புதச யோக மெய்ப்புகழ தாக
அத்வயித மாக வளர்மாதே

அஷ்டகஜ மான தெட்டுநிலை பேர
அச்சையிர வாடல் புரிமாதே
அச்சரமு ஞான பச்சைமிகு வான
அப்பர்தொழு மோன மருள்வாயே

மச்சமிடு வாலை பச்சைமயி லோசை
வர்த்தனைய னேக மதியாக
வட்டமதி மேடை கட்டழகி கூடல்
மட்டுலவு சோலை மலையாளே

வைத்தவகை யாறு நித்தவள நாடு
மத்தவெறி யாடி — வரவேதான்
மத்துநிக ழூன பத்தரசன் பாலி
மக்கள்கலி தீரு — மகமாயி

உச்சமுடி மீது மிச்சநகை மாது
உக்ரகவு மாரி — சிவயோகி
உச்சரிவி பேக சட்சமய மாக
வொற்றமய மான — விரிவாகி

உற்றஅரு ணேசர் சித்தமற வாத
உக்ரமயில் வீர — னமதாயி
ஒப்பமுள தேச வைப்பதனில் மேவும்
ஒட்டரிட மான — உமையாளே

---

35, சற்குணம் – நல்லியல்பு. அச்சுதம் – அழியாமை. அத்வயிதம்– இரண்டற்றது. அஷ்டம் – எட்டு. தர்க்கன் – சிவபெருமான், ஒட்டர் – மண் வேலை செய்வோர். அரவு – பாம்பு. அச்சரம்– எழுத்து. மோனம் – மௌனம். மச்சம் – மீன். வாலை - இளம்பெண், அஷ்டகசம் – எண்பக்க யானை, சட்சமயம்–அறு சமயம்.

## (தாயின் தவக்கோலம்)

(தானன தானன தானன தானன
தானன தானன தனொனா)

36 மானத வாவியி னூடெழு தாமரை
வாசம தாகிய மாதாவே
வாருதி மீதனி லாடர வாமிசை
மால்துயி லாகின பேரதேநீ

தானத ராதல மாவையெ ழாவகை
சாதக போதக னாநாலே
தாமத மாகிய வாமன ரூபக
சாமிச தாசிவம் நீதாயே

ஞானசி வாகம வேதப ராபர
நாதசி ரோமணி வாவேநீ
தாமதி யானன சோதிம னோகர
ராசச பாசபை மீதேகேள்

பானமு தாகர தேனது வூரிய
பாகது யானுன வேணீதாய்
பாலனை யேபரி பாலன மாகுவர்
பார்வதி ராசச உமையாளே.

---

36. வாசம் -இருப்பிடம். வாமன்-சிவன். தியானம் -சிவயோகம்
பரிபாலனம் – அருளுதல்.

(துணைப்பதந்தருபவன்)

(தான தத்தன தானந் தனதன
தான தத்தன தானந் தனதன
தான தத்தன தானந் தனதன தனதான)

37 ஆரு மற்றது தாரந் தரணியில்
ஊரி லுத்தம ரோடும் பழகுவ
ருடை சுற்றிய தேசம் புவிமிசை அழகாகும்
ஆத ரித்தவர் தானும் பெரியற
பேத ளித்தவர் தானுஞ் சிறியவ
ராசை யற்றவ ரோசங்கெடுபவ ரடையாளம்

... ... ... ...
பாரு மிக்கொரு காலங் கலியுக
நாளு மிப்படி யாலுந் தவநெறி
பாவ கற்பனை தானுங் கொடியது பகராமல்

கோரு மிப்படி நாளும் பலபல
பேத மிப்படி யாகுந் தவமுறை
கோதை யற்கொரு சாலந் தொழிலது முறையாக
கோர்வை மக்களி னாலுங் கிரியைசெய்
வேத கத்தினி னாலுந் திரிகுண
கோள கத்ததி நாலும் பலவிதஞ் செயவாமல்

வாரு முச்சுட ராடுங் கொடுமுடி
யாடல் சித்திர கூடந் தரிலடு
மாரி நிஷ்கள தாளுந் தரிசொலி இதவாக
... ... ... ...
மாது சக்கர நாதந் தனதன
வால உத்தமி ப்ாதந் தரவருள் உமையாளே

---

37. தரணி—பூமி. ஊடை—உண்டை, பார்—பூமி. கோதையர்—மாதர், கிரியை—தொழில். நிஷ்களம்—அருவம். உத்தமர்—நல்லவர். ரோசம் — வெட்கம். கோள்— இடையூறு, சால — மிகுதி. பேதகம் — வேறுபாடு.

## (உயர் சங்கத்துமை)

(தனத்த தனதன தானன தந்த
தனத்த தனதன தானன தந்த
தனத்த தனதன தானன தந்த தனதான)

38 எடுத்த துரையறி யாதவர் தங்கள்
மனத்தி னுலுள்மகரை மாயம தங்கள்
எதிர்த்த கதிர்விழி யார்வழங் கின்புந் திரியாமல்
இகத்தி னநுபவ வாசனை கண்டு
நடக்கு மதிவித சாதக தொந்த
மெழுத்தி னளவள வாமிது வென்று புவிமீதே

தொடுத்த நினைவய றாமனு மன்று
விதித்த படிமுடி வாமிது ரெண்டு
துருத்தி களலதி லூதிய பைம்பொன் வரைமீதே
தொகுத்த பலகலை தாளமு ழங்க
நிரச்சு மிடுசர ணாரம தங்கி
சுரத்தி நயமிகு நாதச தங்கை யிசைராகம்

அடுத்த. சடைநட ராசந டங்கள்
முழக்க மதுவெளி யாகுமி டங்கள்
அழுத்த மறிவது காலபி லங்க ளதனாலே
அனிச்ச மலரது காரண கண்கள்
களித்து மகிழ்வது மாதவர் நெஞ்சம்
அழுக்க தரவொரு மாசது மன்றி அசையாமல்

உடுத்த மதிநுத லாயித னங்கள்
தரித்த நவமணி மாலைய ணிந்த
ஒருத்தி யிருபத சேர்வைக ளென்று மறவேனே
உகத்தில் மயில்குயி லாகிவ ளர்ந்து
செகத்தில் நதிவளர் கூடல மர்ந்த
உரைத்த சுருதிக ளாலுயர் சங்கத்து உமையாளே

---

38. இகம் – இம்மை. தொந்தம் – நெருக்கம். பிலம் – பாதாளம்
மாசு - குற்றம். உகம் – நிலம். செகம்–பூமி. சுருதி – வேதம்.

## (திருமாலின் தங்கை)

(தனதன தந்த தனந்த தான
தனதன தந்த தனந்த தானன
தனதன தந்த தனந்த தானன தனதான)

39 திருமலை வெங்க டரங்க நாயகர்
வடமலை எங்கள் உயர்ந்த கேசர
செகதல முண்டு வளர்ந்த கோவலர் நெடியோன்மால்
திருமக ளன்பு நிறைந்த மார்பிறை
சுருதிக ளெங்கு முழங்கு தூலிறை
திரைமிசை கண்கள் துயின்ற மாதவ ரகுராமர்

கருமலை விண்டு நடந்த தாளிறை
அகலிகை கொண்ட தவங்கள் நீவிநற்
கனைதொடு பஞ்ச வர்பங்கி லுறைபவர் சடகோபர்
கலியுக மன்றுள் புரந்த நாள்வெகு
தலதல மெங்கும் நிறைந்த பூரணர்
களபம ணிந்த சுகந்த வாசகர் பெருமாளே

வருமதி யென்று பரந்து பார்வதி
பரரச திவந்த மெரிந்து தாழ்மிசை
மலர்தளிர் கொண்டடி பணிந்து நாடொரு மிகவேதான்
மகிமைகள் கண்டு தெளிந்து பார்மிசை
மிகவருள் கொண்டுள மறிந்து கேசமு
மரகத மயில் சரவணபவ மைந்தரும். வரவேணும்

... ... ... ... ... ...
தரிசன தண்டை சதங்கை பாடக
மணியசை கின்ற பதங்கள் நாடக
சவுமிய கொங்கை மதங்கி யம்பிகை உமையாளே:

---

39. களபம் - கலவைச் சாந்து. சுகந்தம் - சந்தனம். கனை—அம்பு
மகிமை – பெருமை,

## (துதிப்பவரின் துணை)

(தனந்த தானன தந்தன தந்தன
தனந்த தானன தந்தன தந்தன
தனந்த தானன தந்னதன தந்தன தனதான)

40 மருந்தி னால்மணி மந்திர மந்திர
விதங்க ளாலுடல் தங்கிய பிங்கலை
மடிந்து போவென விந்தைசெய் சிந்துர மதிநாலெ
மகிழ்ந்து தானொரு பண்டித னென்றொரு
குழந்தை வேலவர் வந்தன சிந்தையில்
மதங்கி பாலகர் சம்ப்ரம மிங்குள வகையாலும்

திருந்தி நாலுயர் சங்குர ரங்குச
கரங்க ளாலணி கங்கண கிண்கிணி
சிறந்த தாளிசை பங்கய விங்கித மலர்மீது
சிவந்த மாதள குங்கும மின்கொடி
நடந்த தாரச மன்றினில் நின்றது
தெரிந்தி டாதவ ரங்கனை யின்புற நினைவேனோ

வருந்தி நாலது வந்தருள் தந்திட
நினைந்த போதினி லங்குறை இன்றனள்
மறந்தி டாரிட நன்புரு நன்புரு சிவகாமி
வரங்க ளாகிய பொன்கிரி யன்பர்கள்
தரங்க ளாகிய சம்புசி தம்பர
மடங்க ளாலைய் மெங்கு முழங்கிய வதிரூபி

பொருந்தி நால்வகை நன்புவ ரம்பொடு
வருந்து வாழுயிர் பஞ்சர தங்கொள
பொலிந்து பார்மிசை யைந்தரு வென்கிற வடிவாகி
புரந்த மாதவ சுந்தரி யம்பிகை
தரந்த ராதர மெங்கும் நிறைந்தரி
புகழ்ந்து பாடிய சந்ததி யின்துணை உமையாளே

---

40. சம்ப்ரமம் – மகிழ்ச்சி. இங்கிதம் – இனிமை. சந்ததி – வழிவழி.

## (உலகமாயை ஒழிப்பவள்)

(தானந்த தானன தானந்த தானன
தானந்த தானன தனதான

41 லோகந்தி ராசதி காரம்பொ லாதது
ரோங்க ளானது மணுகாதே
ஓதும்பி ரானருள் வேணுங்க டாசியில்
யோகஞ்ச மாதியு மறவாதே

தேசங்க ளானன பாவங்கள் தேடியே
சீவன்க ளேசத மெனவேதான்
தேசங்க ளாசையை நேசங்கொ ளாதவர்
தேடும்ப ராபர வெளிதானாய்.

நாகங்கள் சூடிய ராகங்கள் பாடிய
நாகங்க ளாடிய நடராயன்
நாதங்க ளோதிய வேதங்க ளாவது
ஞானங்க ளேவரு சிவயோகம்

மாகங்க ணாவித மாகம்ப ராகமும்
வாழுந்த யாபரி மகமாயி
மாணம்பிர் மாணவ கோணந்திரி கோணமும்
வானுந்தி வாகரி உமையாளே

---

41. ரோகம் - நோய். கடாசி - இறுதி. சீவன் - உயிர். தேசம் — அன்பு. பிரான் — இறைவன். சமாதி - அட்டயோகத்தி லொன்று. சதம் - நிலைமை. பிரமாணம் — முதல்வேதம்.

## (ஐக்கியம் பெற அழைத்தல்)

(தானத் தானத்த தானன தந்தன
தானத் தானத்த தானன தந்தன
தானத் தானத்த தானன தந்தன தனதான)

42 தேசத் தோடொத்து வாழ்குவ ரென்றிவை
யேசித் தானிட்ட வாசக மொன்றது
தேரிக் கோசித்தி மானது கண்டது செகமீதில்
சீருற் றாபத்த ராகிப தொண்டர்க
ளாலித் தேகர்த்த ரானவ ரின்பதச்
சேர்வைக் கேபுத்தி யாகிய பண்பது மறவேனே

பாசத் தேசத்து வீழ்குவர் ஐம்பொறி
மாசுக் கேசிக்கி மூழ்குவ ரங்கழல்
பாவத் தேபட்டு மாய்கையில் வெந்தற மெலியாமல்
பாருக் கேசுத்த மாளுவ தன்றிநின்
றாளுக் கேபத்தி யானது தந்தருள்
பாவர்க் கேபுத்தி யாமீது வென்பது மறிவேனோ

நேசத் தேயிஷ்ட மாகிய துன்செயல்
காணத் தானிலப் பூவினில் வந்தருள்
நீறிட் டார்நெற்றி போலவு மிந்திர
சாலத் தேயொத்த மாதர்கள் தங்கள்தம்
நீலத் தேபுக்கி யாழில கொங்கையில் வீழ்வாமோ

வாசத் தேகற்ப தாருவ ணங்குமுன்
பூசித் தேபெற்ற வாழ்வதை யிங்குள
வாலைக் கேவெற்றி மாமணி தங்கிய மகராசி
வாடைக் கேபச்சை யாலிலை யிற்றுயில்
சோலைக் கோர்கத் தானவ வங்கிச
வாசிக் கேசச்சி தாகிவ சுந்தரி உமையாளே

---

42. பத்தர் - அடியவர். ஆலித்தல் - களித்தல், சேர்வை– கலத்தல்
மாசு – குற்றம். நேசம் – அன்பு. இஷ்டம் – விருப்பம்.
நேமித்தல் – நியமித்தல். இந்திர சாலம் - மாயவித்தை.
நீலம் - நஞ்சு. புக்கல் - புகுதல். யாழல் – கறையான்.
கோர்கம் – கோரகம்–அரும்பு. நிலப்பூ – பூமி.

## (வேத முதலாள்)

(தானதன தான தானதன தான
தானதன தான தனதான)

43 வாதமிகு சூலை வேதனைக ளாலும்
வாதனையி தேது மகமாயி
வாலைவடி வான வேலைதுயி லான
மாலையணி வேணி வரவேணும்

நாதசிவ யோக வாசியது காதில்
ஞானஉப தேசம் நவில்வாயே
நாசிநுனி மீது ரேசகம தாக
நாதிகவு மாரி நமதாயி

பாதகம தான மாமதகு ரோத
பாசவினை தீர வருளாயி
பாழ்நரக மீது வீழ்கும்வகை சூது
பாலியனு கூலி யருள்வாயே

வேதமுத லாகி யேதுமுற வாக
வீசுபுக ழாயி மிகவேதான்
வேடர்குல மாது வாழுமக மேரில்
வீடுதவு மாயி உமையாளே

---

43. வேதனை - நோய்த்துன்பம். வாதனை—வருத்தம். இரேசகம் — மூச்சுவிடல். மதம்—வெறி. குரோதம்—சினம். பாழ்—சூனியம். கெடுதி. வீடு—வீடுபேறு.

## (காட்சி வேண்டல்)

(தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன தனதான)

44 மரகத மயில்மிசை வருகிரி குமரனை
யறுமுக சரவண பவனனை யனுதின
மனமுற நினைவது தனிலொரு முருகனை மறவேனே
வரதனை யொருபது யிருகர முடையனை
யருளிய தவசிவ இரிதனி லதிபதி
மதிபுனை நவமணி யறுவது புனைசடை திரிசூலி

துரகத மெனவெகு கொடுமுடி யதிரிட
நடமிடு கடதட வடவரை கிடுகிடு
தொனியது திரையலை சுவறிட வெகுகன விசையாகி
துடியோடு வடிவுள விடைகடை நடுவது
வடிமுடி வழிபுக வெளியொளி நிலையது
சுழிமுனை யனையது தொழும்வர கதியது பெறவேதான்

பரகதி யொருபொரு ளுருகிய மணியது
தருவது மலைமக ளுலவின சுடரது
பதிதனை யறிவது குருவது செயலது துணையாகி
பரிபுர கனநவ நிதிவரை யினிலர
செனவரு மொருபெரி யவனெனும் மதிபக
விதுகுடி லதுநிலை வழிவகை தருபெரு சிவகாமி

விரகது தெளிவுற மருளனை யிருளற
வகைபுரி பரிமள குகையது தரிசனை
யதுபெற விதிசிறு வழிவிடு துணையென வருவாயே
விகசித மலரென மதுரச மொழுகிய
வகைதொகை இதுவென நினைவினி லுதவிசெய்
விரிகதி ரழகிய மதுரையி லினிதுறை உமையாளே

---

44. கிரி—மலை, அறுகு—அறுகம்புல். தொனி-ஒலி. திரை—அலை. சுவறல்—வற்றல். மருளன்—பூசாரி. தரிசனை—காட்சி. விகசிதம்-மலர்தல்.

## (நடுநிலை நாயகி)

(தானதன தான தானதன தான
தானதன தான தனதான)

45 சோதிமய மான ஆதிபர மீசர்
சோபசுக மாக வடிவாகி
சோடசமு லீலை யாறுபதி நாலு
சோர்வுசெய்த நீலி திரிசூலி

நீதிசொலு மாறு மோதுமறை நாலும்
நீடுபுவி யாவும் விளைவாக
நேமிசிவ காமி வாமனசொ ரூபி
நீபரம யோகி கலிகாலி

சாதிகுல பேத வேறுபல நீத
தாழ்வுமிக வாழ்வு சமனாகி
தாரணியும் வானும் பூரணிநி தானும்
தானதன ஞான பரிபாலி

வீதிவெளி மாயை யாலுயிர்கள் யாவும்
மீதுணர்வு தாரு மகமாயி
வீடுபெரி தான தேடுதவ யோக
மேவுசிவ பாகம் உமையாளே

---

45. சோதி – ஒளி. சோபம் – அழகு. சுகம் – இன்பம். சோர்வு – அயர்ச்சி. மறைநான்கு – இருக்கு, சாமம், அதர்வணம், யசுர். நீதம் – தகுதி. சமன் - நடுநிலை.

## (ஆடலால் அருள்பவள்)

(தனந்தன தான தனந்தன தான
 தனந்தன தான தனதான)

46 கடம்பர சோலை இடம்பட வீடு
 கனம்பெற வாழு மகராசி
 கனந்திரி லோக வரம்பினில் நாள்கள்.
 கலந்துரு மாறி விளையாடி

நடன்புரு பாத ருடன்கிரி மீது
 நடம்புரி காளி மகமாயி
நலந்திக மான குலங்கள தாகி
 நயந்திரு நாளி படிதானாய்

மடம்பதி னாறு தலந்திரு வாடு
 மகந்துறை தோறு மிதவாக
மனங்களி கூர நிதம்பசி யாற
 மகிழ்ந்தரு ளீயு மகமாயி

தலம்பதி மேரு வலம்புரி வீச
 தருங்கயி லாச வரைமீதே
சதங்கைக ளாட வருஞ்சிவ காம
 சவுந்தரி யான உமையாளே

---

46. கடம்பர சோலை - கடம்பவனம் - மதுரை. திரிலோகம் திரிபுவனம். நிதம் - தினமும். வரை - மலை.

## (யோகநிலை வேண்டல்)

(தானா தானா தானா தானா
தானா தானா தனதான)

47 காலாய் மேலாய் வானே தானாய்
காயாய் கனியாய் குடிலாசி
காதாய் வாயாய் நாவாய் ரூபக்
காலாய் நாசித் தருவாகி

தோலாய் மாலாய் சாலா சாலத்
தூறே வாசல் துளையாகி
தூறாய் வேறாய் பேரா யூராய்
சோபா சோப முடனேதான்

ஆலா கால கோலா கால
தாறா தார வயறாகி
ஆயாள் நீதா னோபா மாயா
தாசா பாச மருள்வாயே

நாலா பாண மூலா தாரி
நாயே னேது மலையாமல்
நானா யோக வாழ்வே நீதா
தாரா யணியே உமையாளே

---

47. தூறு–சிறுசெடி. சோபம்–அழகு. ஆறாதாரம்–மூலாதாரம்
ஆயாள்–தாய். ஆசாபாசம்–ஆசை வலை. நானா–பல.

## (நித்திய வுலாச உத்தமி)

(பல சந்தங்களும் கலந்து வந்துள்ள பாடல்)

48 ஆறித்தெளி மனமே பரியேறிக் கொள்வாய் தினமே
யருளா னுற்பன காரணர் பூரணர் கிருபாகர
ஆதிய நாதி யென்றே இருநீதினி தானமொன்றே
அசையாதிரு ஆறு செஞ்சடை மீதில் வெண்மதி புனலாறு

தேறிப்பர வெளியினிலே நிலைக்கூடிக் கதிபெறவே
திருதாளினை சென்றுரு முபாய மிடேர செயலதுநீ
தரவேணும்
செகமீதென்றனை யாளவந்தருள் தேவியம்பிகை
யாதி சுந்தரி நீநாமசகி மோன காரணி சிவகாமி

கூறிக்கமுத முலைப்பாலருளுறித் திருமுலைப் பால்கொடு
வாவென குயர்தாளப் பிரம நாமுச் சுடரெனு குறியாக
குண்டலி நின்றசையப் பரிவிண்டல மெண்டிசையுங்
குடிகொண்டு யிருந்துள மன்றினி லாடியு நின்றபடி
மாறிய பிறவீதி

மீறித்தரு சுனுணீ யேறித்தேடி முடிமேரு ருத்திர கனகசபை
மீதில்
மேருக்கிரிப் பொருளே இனித்தாகு மெனக்கருள்
மாறவிலை
யானுனக் கடியானெனப் புகழ் வேத சத்தி
சிவாய நித்திய வுலாச வுத்தமி உமையாளே.

## (பெண் பெருமை பேசவந்தவள்)

(தனனத்தன தான தனந்தன
தனனத்தன தான தனந்தன
தனனத்தன தான தனந்தன தனதான)

49 உதிரப்புனல் மூழ்கி நிறைந்தொரு
பதரைப்பொரு ளாகி நிறைந்திடு
உலகப்பெரு வாழ்வை மறந்திடு மனமேநீ
ஒருசொற்பொரு ளான துகந்திடு
பெருமைப்பர மான தடைந்திடு
ஒளியிற்தெளி வான தறிந்திடு பதறாதே

சதிரப்புல னோட லைகின்றது
கதிரைத்தெரி யாதி ருளுண்டது
தனதுற்றது தானெ னநின்றிட மறியாயோ
சமயத்தொழி லான தனந்தமும்
நிமிஷத்தினி லோடி முடிந்தது
சருவர்க்கிது வாகி யதொந்தமுன் விளையாடல்

மதுரைத்துர ராச துரந்தரி
மிகுசித்ரவி மான புரந்தரி
வருகற்பக தாரு ளசுந்தரி மகராசி
மகிமைக்கொரு சோதி லைஇங்கொரு
உகமைக்கொரு நேரி லைமங்கையர்
வலிமைக்கிவள் தானெ னவந்தது புவிமீதே

பகரத்தொனி யான கமென்றிசை
பகரப்பல நாத முழங்கிய
அருணக்கம லாச னபங்கய மலர்மீதே
அறிவுக்கறி வான திகம்பரை
குறியிற்குறி யான பரம்பரை
யவனுக்கவ ளாகி யசுந்தரி உமையாளே

---

49. பதர் – பயனற்றது. சதிரம் – உடல். கதிர் – ஒளி. சோடு – இணை. உகந்திடு – விரும்பிடு. புலன் – ஐம்புலன். அனந்தம் – அளவின்மை.

## (எத்தொழிலும் அவளே)

(தத்தனன தானான தத்தனன தானான
தத்தனன தானான தனதான)

50 சட்டமிடு மாமாயை வெட்டவெளி யாபாரி
தட்டழிய வேசாரி மிடசாரி
சர்ப்பமது ஊடாட லுற்றுநிலை யேதேடல்
சற்றுமறி யாதமூடல் திறவாதே

வட்டமிடு மோவாசி நட்டமிடு மோதேசி
வச்ரமய மோகாசி மலைமீதே
வைத்துமன மாறாய வித்தைமதி யேராச
வர்த்தனியெ நீதாராய் மகராசி

இட்டமுட னாதார கட்டளிம யாரூபி
இப்பவர வேணுமென வருள்தாயி
எத்தொழிலும் நீயாகி வெற்றிபுரி மாகாளி
இக்குநர னேயாட விளையாடி

சிட்டர்பண பாமூற்று மடியார் காணாத
சித்ரசபை யேதோண வருவாயே
சித்தமுன தாசார பத்தசிவ பூசாரி
செப்புதமி ழோசாரும் உமையாளே.

---

50 இட்டம்-விருப்பம். ஆசாரம்-வழிபாடு. இக்குநரன்-இயக்கன்.

## (முத்திக்கருள்பவள்)

(தானதத்த தான தானதத்த தான
தானதத்த தான தனதான)

51 ஆசைவைத்த வீட்டை பாசமொத்த காட்டை
ஆடவிங்ட கூட்டை நடைகூடி
ஆவிவிட்டு நாட்டி லோடவிட்டு நாட்டி
லாகமத்தை மூட்டி வெளிமாயை

ஊசலிட்டு பார்த்து வாசமொத்த காற்று
யோகசித்தி யாத்து மருவாமல்
ஊரகத்தை நோக்கி மாசறுத்து நீக்கி
ஓரெழுத்தை வாக்கி லயராதே

வேசையிட்ட மாத்தி லூடளித்து மாய்த்து
மேகவெட்டை யேற்று மெலியாதே
வேதசித்தி மார்க்க யோகநிஷ்டை பார்க்க
வீரசத்தி மார்க்க வகையாலே

தேசிகர்க்கு மூத்த ஞானசித்தி வார்த்தை
தேடமுத்தி யார்க்கு முபகாரி
தீதழித்த சூட்சி ஊனுயிர்க்கு மாட்சி
தேடுகட்சி யாட்சி உமையாளே

---

51. ஆகமம்–முதல்வன் வாக்கு, மாசு–குற்றம். வேசை–விலைமகள், நிஷ்டை – ஒருமைநிலை. உபகாரி – உதவுபவன். மருவல் – கலத்தல். அயர்வு–உணர்வழிவு. மாத்து–செருக்கு, மார்க்கம்–நெறி. மாட்சி–பெருமை.

## (காலன் வருகையில் காப்பவள்)

(தனதனன தத்த தானன
தனதனன தத்த தானன
தனதனன தத்த தானன தனதான)

52 அரிதரிது மக்கள் யோனிகள்
மனிதரென வைத்த சேனைகள்
அழகுடைய சித்தி மூலிகை யதனாலே
அடவுடைய சித்தி நாடிகள்
வகையுறவு முற்று மேசில
அவயவமு மிட்டு மூடிய குகையேதான்

விரவுசெய முட்டி மோதிய
வயறதுபெ ருக்கி யேகன
வெளியில்வரு பத்து மாசமுஞ் சரியாகி
விதனமுரு கற்ப மானதி
டைவழியில் கத்தி யேவிழ்வு
மிகுசனமும் வெற்றி (யேபல) பகர்வாரும்

தரிசுமணி யிட்டு நாடொரு
வயசுமொரு பத்து மானது
சமயமிகு பக்வ மாகிய படியேதான்
தரணிதனில் வித்தை சூதுமெ
கழவுமய லெத்து மாதர்கள்
தனதுவச மாக்கி வாலிப மீகவேபோய்

பெரியபிணி சிக்கி வாடிய
கிழவனென் விக்கி வீருள
பெரியதடி கைக்கு ளேநடை தடுமாறி
பிடரிமிசை யுற்ற காலரக்
கயறுகொடி ருக்கும் வேளையில்
பிரியமுட னட்சி நீதுணை உமையாளே

---

52. யோனி - பிறப்பு. விரவு - கலப்பு. கழவு - கழப்பு-கள்ளத்தனம். பிடரி - கழுத்து. பிரியம் - அன்பு. அவயம் - புகலிடம். தரணி - பூமி. வாலிபம் - இயமன். அட்சி - கண்.

## (பகை போக்கும் பரம்)

(தனதன தந்தத் தனதன
தனதன தந்தத் தந்தத் தனதன
தனதன தந்தத் தந்தத் தனதன
தனதன தந்தத் தந்தத் தனதன
தனதன தந்தந் தந்தத் தனதன
தனதன தந்தந் தந்தத் தனதன தனதான)

53. நிதிபதி செம்பொற் தம்பர்க் கதிபதி
யகரவி விம்பச் சம்புக் கொருசுத
மதகளி ரந்தக் சுந்தக் குமரரை
மருவிய தங்கட் கின்பச் சிறுவர்கள்
நிறுவிய திந்தச் சிங்கத் தளமது
தரணியி லுன்சொற் பண்புக் குருசியார் புகழோத
நினைவது தந்துற் றஞ்சிப் பலபல
கலையறி கின்றக் கன்றக் கெனுமன
வெகுளிய துங்கிச் சிந்திப் பொறிபலம்
வுதைபிர வஞ்சப் பஞ்சக் கசடதை
நெரிடுரை துன்பக் கொஞ்சப் பகையற
மணியசை தங்கத் தண்டக் கழலிணை தருவாயே

மதிபுனை தும்பைக் கொன்றைச் சடைமுடி
யுடையவ ளன்பர்க் கின்பத் துறைபவள்
செகவரை யண்டத் தண்டத் துளதுயிர்
பருகிய மைந்தர்க் கந்தச் சுகமது
வருளிய சங்கைத் தங்கப் படிகொடு
அறம்வளர் கொங்கைச் செங்கைப் பயிரவி யெனதாயி
மகபதி சிந்தைக் கந்தச் செயலற
வகைவகை யந்தச் சங்கைப் படிமுடி
யதுதனை நம்பிச் சிந்தித் தொழுபவர்
வினையது துஞ்சி மிஞ்சித் துகளென
மருகிய வங்கத் துங்கக் கடல்மிசை
யலைபடு சந்தச் சண்டித் திரணமு மிதுபோலே

நிதிவழி யஞ்சிக் கொஞ்சிப் பயமுற
வொருமுதல் முந்தித் தந்துற் பனமென
வெளியொளி தங்கிச் சென்றும் பதிபுக
வருளிய பைம்பொற் செம்பொற் பயிரவி
வருளிதி பண்திக் கொம்பைச் சிரமணி
பெரியவர் தந்தித் திந்தித் தெனதென .........
... ... ... ... ... ...
டுடுடுடு டுண்டு டுண்டு விசையதிர்
மனத்தினில் சென்றிட் டெதிர்பொரு ......
திரிகிட திந்தித் திந்தித் தனகுண வெனதான

பதிபெரு வின்கட் சங்கத் தொனிமிட
றுருகிய தொந்தச் சந்தத் தெருமிசை
வழிசிறு கொங்குக் கந்தப் பிரமொரு
தனிவரை முன்றிற் கந்தச் சுழிகொடு
பரிபரி கஞ்சச் செஞ்சொற் பலகலை
யனுபவ மொன்றைத் தந்திப் படியென வருள்வாயே
பரமது தஞ்சச் சொந்தத் தரமனை
நடுவனை எந்தைக் கம்பத் தடிமுடி
யழகிய சம்புச் சொம்புக் கிணையென
விகசிக கும்பத் தம்பத் தனகிரி
பரிமள கந்தச் சந்தப் புழுகணி
படிகம தங்கிப் பெண்பொற் பருவத உமையாளே

---

53. **நிதிபதி** – குபேரன். சண்டி – துர்க்கை. படிகம் – பளிங்கு. தொழுபவர் – வணங்குபவர். புழுகு – வாசனை. பரிமளம் – மிகுமணம்,

## (வெற்றிமகள்)

(தனத்த தத்தன தத்தன தத்தன
தனத்த தத்தன தத்தன தத்தன
தனத்த தத்தன தத்தன தத்தன தனதான)

54 திருத்தி யொப்பர விட்டுயற் பொற்றன
பிதத்தை விட்டெரி கட்டளை யிட்டொரு
திருக்க ருத்திடு மெய்ப்பர முள்புக சிவயோகம்
செலுத்தி நிற்பவ ருற்பன நிட்சேப
கொலுத்தி ருச்சபை தற்பர சிற்பர
செகுத்தொ ருத்தொகு திக்குகு திக்கென சிலதாளம்

வருத்தி யுக்கிர நிர்த்தந டத்தது
விருத்தர் முப்புர மெரிப்ப நகைத்தது
மகுத்துவ உத்தமி பெற்றச ரணத்தொனி விசையாடல்
மயக்க முற்றவ ரத்திதி ருக்குழை
இயக்கி வித்தவ ரெத்தியெ டுத்துமெய்
கிளைக்க ணித்தவர் வெற்றிகள் பகரத் தெரியாத

ஒருத்தி வித்தைசெய் முப்புரி சக்கர
நெருப்பொ ருப்பென நிஷ்கள வுற்பன
வுசத்தி தத்தர தக்ஷணை ரக்ஷகி விளையாடல்
உனக்கெ னக்கென பற்பல சித்திர
விதத்தை யக்ஷர மொற்றம லர்க்கர
வுடுக்கெ டுத்தர சத்தம றைக்கட வெனவேதான்

இருத்தி மித்தியி லொடுத்தொடு தித்திமி
பெருத்து ரத்தத னத்தொடு வர்தினி
எதிர்த்து வெற்றிக டத்திய கத்தவி மகமாயி
எடுத்து முத்தியி டற்புத கற்பக
சுகத்தை நட்புர மெய்ப்புக செப்பிரு
தனத்து வெற்பினி லப்பனை வைத்தருள் உமையாளே

---

54. மகத்துவம் – மேன்மை. நிஷ்களம் - அருவம். தட்சணம் – வலப்பக்கம், உடன். தனம் – நகில், வெற்பு – மலை,

## (ஆட்கொள அழைத்தல்)

(தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தன தான)

55 கற்பித்தொரு வித்துச் சிவபொரு
ளொப்பித்தது சித்துக் குகைபுக
கற்பித்தரு (முத்திக் கரு) ளிய தொருநாளே
கட்டிப்புல னிட்டுத் தொகைவகை
திட்மெத்திவர் மட்டுத் திகைவகை
கட்டிப்பிர மிட்டுப் புவியினில் வெளியேறி

துர்ப்புத்திகள் சற்றுத் தெருமிசை
எத்திப்பல சுற்றிப் பரவையர்
துக்கக்குழி சிக்கித் துயரினில் தினைவாகி
சொற்சுற்குணம் விட்டுத் தவசிவ
மெய்ப்பொற்கழல் தொட்டுப் பலவினை
யற்றுக்கதி பெற்றுத் தெரியவு மருள்வாயே

... ... ... ... ... ... ... ...

அத்தர்க்கிசை சத்திப் பயிரவி
தொக்குத்தொகு தொக்குத் தொகுவென
சுப்பர்க்குள செப்பித் தயவுசெ யபிராமி
வெற்புக்கொரு மிக்கப் பதிதனில்
வெற்புக்கொடி கட்டிப் படிவிரு
நெர்த்தத்தர சச்செயல் தருசிவ உமையாளே

---

55. வித்து – காரணம். துர்ப்புத்தி – தீயகுணம். எத்தி – ஏமாற்று பவள். அத்தன் – சிவன்.

## (யோகநிலை)

(தத்தன தத்த தனத்த தனத்தன
தத்தன தத்த தனத்த தனத்தன
தத்தன தத்த தனத்த தனத்தன தனதான)

56 கட்டளை யிட்டு விதித்த விதிப்படி
பட்டலை யப்ப டவிட்ட வினைப்படி
கற்பனை யொத்து வகுத்த வகைப்படி தெரியாமல்
கத்திய சத்த மிகுத்த தவிப்பொடு
குற்றமு மிட்டு முடித்த துவெற்பொடு
கக்கிச மிட்டு மயக்கி மருக்கொடு திரிவேனோ

தொட்டளை யெட்டி யெடுக்க நினைத்தொரு
நெட்டுர லிட்டு மிதித்தொ ருசட்டிகள்
தொட்டுந டுக்கி டுசிக்க விருப்பொடு செரதேமர்
தொக்கென முக்கி யிருக்க மடக்கிளி
சிக்கிநெ ருக்கி யடிக்க விரல்கொடு
கட்டியி ருக்க விழித்து நெளித்தவன் துணையாகி

இட்டளை கிட்டு முடித்த முகைத்துன
மட்டெழு தத்து கையெழுத்தி னையச்சது
இப்படி யொப்பி னைநிற்ப துபெற்றது மகமாயி
எட்டும திற்பிர பையொத்த பரம்பரை
யஷ்டதி சைக்கி ரியெட்டு நிலைக்குயி
ரிட்டற விக்கி ரனெட்டி சிசித்திர மெளவேதான்

விட்டள கிட்டெ முநட்டளை சிற்சிவ
சிற்பர தற்ப ரவிற்ப னகற்பக
சச்சுத சித்தி யசித்தி ரியுத்தமி பரிபால்
மெய்த்தள தத்து வலட்ச ணலக்கரி
பட்சண பட்சி மநற்ற வசித்திசெய்
விக்கிரம நிக்கி ரவுக்ர நயக்கிரக உமையாளே

## (சுகமருளும் சுந்தரி)

(தானந் தனந்த தனதந்த தந்த
தானந் தனந்த தனதந்த தந்த
தானந் தனந்த தனதந்த தந்த தனதான)

57 ஊரும் புலன்க ளுடனின்று கொண்டு
தானுங் கலந்து களமுண்டு நின்று
ஓடுங் கணங்க ளலைகின்ற தொன்றும் தெரியாமல்
ஓதும் பரங்க ளினதென்ற றிந்து
நாதம் பிறந்த நடுநின்று கந்து
ஊனுந் தலங்க ளிதுவென்று ணர்ந்து தெரியாதே

பேரும் விளங்க வருசிந்தை தந்து
சேரும் பதங்க ளெதுவுந்தெ ளிந்து
பேதங் குணங்க ளுடனுங்க லந்து பெரிதாகி
பேதங் களன்றி யுலகெங்கு மெங்கும்
நீதங் களன்பு நிறைதங்கு முங்குள்
பேதம் புகழ்ந்து விரிகின்ற சம்பு சிவகாமி

சாரும் விதங்கள் சிவகங்க ணங்கள்
தூரும் விளங்க வருசெங்க மங்கள்
தாளம் பிறந்த வெகுசம்பிர மங்க ளினிதான
தாகும் சிலம்பு மணிகிண்கி ணென்று
நாதம் சதங்கை கலிரென்றெ ழும்ப
தானுந் தனங்க ளிசைகொண்ட சைந்து வரவேணும்

வேருங் கொழுந்து மிகுசந்த னங்கள்
வாசம் பொருந்தி மலர்தங்கி கொன்றை
வேடம் புனைந்த வடிவஞ்சி வந்து புவிமீதில்
வீடும் புகழ்ந்து செயல்தந்தி சைந்த
நாளுந் துலங்க மிகுசந்த தங்கள்
வேணுஞ் சுகங்க ளிதுவென்று தந்த உமையாளே

---

57 பேதம் – ஒவ்வாமை. வேர் – வெற்றிவேர். கொழுந்து – மருக்கொழுந்து.

## (மும்மலமில்லா முதல்வி)

(தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன தனதான)

58 பருவத மெனவொரு கொடுமுடி யடிமிசை
திரிவது கரியறி வதுதனை யறிவது
பகலிர வலியது பகரறி தரிதது பகர்வாயே
பனிமதி யுடனிரு சரணது கிரணது
தவசிவ மறிவது பலவினை முடிவது
பதிநிலை தெரிவது விதிவழி யுணர்வது பரிகாணும்

பெருவது மதுவெளி யறிவது மொருவிழி
பழையவ ருரிவது யிளையவர் திறமது
பெரியவர் தெளிவது சிறியவர் வழியது மனநேசம்
பிடிபட வரியது யடியுவர் வழியது கழியது
கடியது கொடியது நெடியது முடியது
பிறவிக ளறுவது திரவியி லுறைவது தெரியாமல்

கெருவித மதமொடு தெருவினி லுலவிய
விலைமக ளவளுட முலையிரு தனகிரி
யதுகதி யெனஉயி ரதுபொரு ளெழவென் விழுவேனோ
கெடுமதி வருவது யிருவிழி குருடது
விடுவது விதிவழி யறிவது சிவசிவ
கிருபைகள் வரவர வனுபவ முளபடி யதனாலே

பதவிக சிதமணி யதுகலி ரெனவரு
திருவழ கியசிலை வரவென வெகுதரி
சனைதர வரமரு வமதவ (மெனவரு) மகமாயி
செகமக வெனவள ரதிபதி மதுரையி
லகமகி ழுறுதின வரசென நடமிடு
சிறுபிறை னதியறு கரவணி சடைமுடி உமையாளே

---

58. பருவதம் – மலை. கெருவிதம் – கருவம். விலைமகள் – வேசை. தரிசனை – காட்சி. செகம் – பூமி.

## (பந்தமறுத்திடும் பாவை)

(தானதன தானதான தானதன தானதான
தானதன தானதான தனதான)

59. வாலமதி யீசர்நேசம் போலவொரு சீஷ்தாசன்
வானுலகு தேசதேச புவிமீதே
வாசனைக ளானஞான தானதவ யோகமான
மாசருசி லோகவாழ்வு தெரியாது

பாலனைய தூளியாளி யாலமுத சாரசார
பாணிசடை வேணியாலு முடியாது
பானுலவு சோதிநூறு கோடியுகம் நூறுநூறு
பாகுபர லோகசார விகருபம்

மூலகன பாளதால லாதிகொள சாலமேல
மூலவரை கீழுமேலு முடிமீது
மூடியொரு தாரையூடு நாடியரு மாடியாடி
மூவரறி யாததேசல் நடமாட

காலகலி காலதேச மாயைகள் மூடபாச
காமகலை சோபதாப வளையரளே
காணரிது சோதிநாதர் பாமலர காணநீசொல்
காவிதிரி சூலிநீலி உமையாளே

---

59. வாலமதி-இளம்பிறை. நேசம்-அன்பு மூவர்-சிவன், பிரமன், திருமால்.

(உண்மைப்பொருள் அன்னை)

(தனத்தத்த தனத்தத்த தனத்தத்த தனத்தத்த
தனத்தத்த தனத்தத்த தனதான)

60 கருப்பைக்கி ணூரப்பட்டு திறப்பட்டு பிறப்பட்டு
கலுக்கிட்டு மிலுக்கிட்டு சிலகாலம்
கதித்திட்டு குதித்திட்டு அளப்பட்டு சளப்பட்டு
கருத்தட்டு கெடவிட்டுத் தடுமாறி

விருப்பத்து உருக்கெட்டு வுசப்பட்டு பசக்கத்து
மிடிக்கிட்டு கிடைப்பட்டு தடுமாறி
விழுக்கத்து நடுக்கிட்டு தடைக்கட்டு மிடைப்பட்டு
வெதுப்பற்று பதைப்பற்று விழும்நாளில்

திருக்கத்து தருக்கத்து மலர்க்கட்டு வெளிப்பட்டு
திடுக்கிட்டு நடுக்கிட்டு உயிர்போக
செபத்துக்கு தபத்துக்கு பிணத்துக்கு நினைத்தொக்க
செபத்துக்கு ளகத்துள்ள ழுதேபின்

நெருப்பிட்டு பெருத்திட்டு அவித்திட்டு குவித்திட்டு
நினைத்திட்டு அசத்திட்டு விடுமாயை
நிலைப்பற்ற மனத்திட்டு மலைப்பற்று உளைத்தொட்டு
நிசத்துக்கு வரச்சத்தி உமையாளே

60. கதித்தல்–நடத்தல். அளம்படுதல்–வருந்துதல். சளம்–துன்பம். உசம் – நரகம். நிசம் – உண்மை.

## (விளங்கு பேரின்ப உரு)

(தனதத்தன தானன தானன
தனதத்தன தானன தானன
தனதத்தன தானன தானன தனதான)

61. ஒருசொற்பல பேர்வகை யானது
தெரிவுக்கறி வானது தானது
உதவிக்கொரு பூமணி யானது புவிமீதில்
ஒருவர்க்கசை யாதிசை யாகுது
இருவர்க்குறை யாதிரை யாதது
உருகிப்பிரி யாதது வானது உருவேது

இருசொற்பொரு ளானது தானது
பிறமக்கர ளானது வானது
இறைவர்க்கிறை யானது தோனது மொழிவானோ
எவர்கட்கும தேகதி யாமிது
வெளிசற்றும றாதிற வாதது
இணையொப்பது வேறிலை யாமிது பகர்வாயே

சிரசிற்பரி பூரண காரண
நடனக்கிரு பாகர சேகரி
சிவனுக்கதி மோகனு மாகிய சிவகாமி
தெளியத்தெளி வானதி வாகரி
களியிற்கனி கூர்வத யாபரி
தெரியத்தெரி யாதப ராபரி சிவயோகி

தருசொற்பொரு ளாகிய சாதக
குருவுற்பன போதக மானது
தரமுற்றிலு மேபெற வோதிய அபிராமி
சணம்விட்டக லாதிரு யாதமு
மெனதுற்பன மாயிரு மாதவி
சரணக்கதி யேதர ஸ்ரீசத உமையாளே

---

61. பேர் – பெயர். ஆதிரை – முதல்வன் – சிவன். பரிபூரணம் – முழுநிறைவு. மோகனம் – மயக்கம். ஸ்ரீசதம் – நிலைத்த செல்வம்.

## (வீடது அளிக்கும் விமலி)

(தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தனதான)

62 கலக மென்றொரு விந்தை சாகர
மலைவு சங்கட மென்ற சூகரம்
கவன முண்டுரு வந்த கோபுர மலையூடே
கசடு தங்கியி டைந்து மேல்வளை
விசையும் நொசந்துமெ லிந்து கூனிட
கருது மங்கையர் கண்டு தூவென மெலிவேனோ
அலசை யென்றொரு வின்ப மானது
விலகி நின்றர விண்டு நாணது
அறிவி லின்றுனை யின்று காணவும் புரிவாயே
அமலை வந்தது வண்டு தீயெழ
விமலை சிந்தைபு குந்து தாயென
அழுது கந்துசி வந்த தாளினை யருள்வாயே
இலகு சந்திர விந்த மேரினை
திலத மென்றத ணிந்த நாரணி
மணிவ ருந்தந டந்து பாரினில் வருவாயே
இருப தந்தர யிந்த வேளையி
லொருவி தங்கொடு வந்து நாளையி
லிரவி சந்திர னந்த மேடையி லிரண்டுபேரும்
உலக மென்றது மண்ட கூடமும்
நிலையெ னும்பதி யொன்று தானதில்
உதய மென்பது கண்டு தாசனும் பெறவேதான்
உனது சம்ப்ரப மன்றி வேறொரு
தனது தம்பிரு மென்று வேறிலை
உபய குண்டலி தண்டு சூலினி உமையாளே

---

62. கலகம்–பேரொலி. சாகரம்–கடல். அலைவு–சஞ்சலம். சங்கடம்–ஒடுக்கவழி. சூகரம்–பன்றி, மான். இடைதல்–தளர்தல். நொாந்துதல் – அழிதல். திலதம் – நெற்றித்திலகம். உபயம் – இரண்டு. தண்டு – படை.

## (அக்கண மருள்புரி அம்பிகை)

(தான தந்தன தான தந்தன தான தந்தன தானனா)

63 ஆதி சுந்தரர் தூது வந்தவர் ஓது மந்திர மொன்றிலே
ஏக முங்கன யோக முங்கன பாக மும்பர மன்றிலே
ஆட லும்பரி நாட லும்பதி கூட லுங்கதி யாகையால்
ஆரி லுந்தல மீது கந்துகை கூரி லும்வகை யேரிலும்
சேவ லுங்கொடி கூவலும்படி மேவ லும்பிடி யாவலும்
அன்று முந்திர மான தும்பிர மான மும்உற வானதும்

சோதி விந்தினில் நாத முந்தொனி கீத முந்தனி ராகமும்
ஓது கின்றலை உண்மை நின்றது போத கஞ்...
சூட வுங்குரு பீட மும்பெரு வீட துஞ்சிறு வாசலுந்
தூர வுங்கலை சார வுந்துலை தூர வும்பலை யாடவாய்
பேச வும்பகை ராசி யங்குகை தேசி யுந்தகை வாசியுந்
தூல மங்கெட டாம லம்பட ஞான மும்யெட மோனமும்

வேதி யன்தொழு தாக மங்களி லாடி நின்றபி ராமியே
பாத சந்ததி போத வுந்தர நீத மொன்றது போறுமே
வீர பண்டித ராச சுந்தரி யாக வந்தருள் நாயகி
வேளை வெண்டகி காளை கண்டகி சூல கண்டித சூலியே
வேல னென்றொரு பால னுண்டது பாலு மின்றிலில் வேணுமே
மேரு வொன்றது காணு மொன்றது வேணு மென்றது தாருமே

நீதி செஞ்சடை பாதி வெண்பிறை நீர ணிந்தகா பாலியே
வீதி யந்தர மீதி ருந்தொரு வேத சுந்தரி ஆதியே
நீலி யென்றொரு சாலி விண்டொலி யால முண்டவ ரோதினி
நீநி னைந்திடு ஞான முங்கொடு தான மும்பெற வானமும்
பேற தம்பதி சீர தங்கதி பேச வும்புக ழேயருள்
நேச முந்திரு வாச முந்தரு விசு வான்பதி உமையாளே.

(கருணைக்கடல்)

(தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த தனதான)

64 அடைய வொன்று ரண்டு முடிய நின்ற தொன்று
அருளு மின்று கண்டு பணிவேனே
அறிவி லொன்று நின்று குறியி தென்று சென்று
அமுத முண்டு கொண்டு பிழையேனோ

விடைய மின்றி வந்து வடிவு கந்து றந்து
கருணை தந்தி ரங்கு கலிதீர
ககன முங்க டந்து கனத சம்பு கந்து
கயிலை யுந்தெ ரிந்த சிவகாமி

... ... ... ... ... ...
உடைய மைந்த னென்று குடியி ருந்து கொண்டு
உணர்வ றிந்து நின்று உருவாக
உபய முந்த னம்பி லபைய முன்பு குந்து
உதவி தந்தி ரங்கு உமையாளே.

---

64. கருணை – இரக்கம். விடையம் – விடயம் – காமவின்பம். ககனம் – ஆகாயம், சுவர்க்கம்.

## (மங்களத் திருவுரு)

(தனதனன தனதனன தான தானனா தான தானனா
தனதனன தனதனன தான தானனா தான தானனா
தனதனன தனதனன தான தானனா தான தானனா தனதான)

இடைதுவள நடையழகி வார தோமயல் தார தோகையர்
வடிவெழுத முடிவதிலை யேது தானதோ மாது தானதோ
இதுபுதுமை யிதுமகிமை யேல ராகமாய் வால ரூபமாய்
வருமாது
இலகுமதி நுதல்வனிதை யேக மோகமாய் நாக ரீகமாய்
அரிவையவ ளிருதனமு மார பாரமாய் தாறு மாறுமாய்
இசலிமலை யசையவெகு மேள தாளமாய் வேள நாளமாய்
தெருவூடே

கடையமிடு வழகிவிடு காதி லோலையு மூடு சேலையு
மிடுபணிக ளுடனழகு பாரு பாரென மேரு மேரென
கலகலென நளினமொடு மேவு வார்களேர் பாவ நானுசமோ
யெனவேதான்
கலவிதரு விலைமகளை யாசை யாகியே மோச மாகவே
பலகவன வலையிலிடு பாச மாகியோர் நேச மாகநாள்
கமலபதி நிமலரடி போத மாகவே பாத மேதர வருவாயே

சடையுடைய முடியழகு காண வேணுமே ஞான மோனமே
நடனமிடு பரிவிரசு பூண வேணுமே தாணு யேகுவோ
நமசிமர சிவருமறி நாலு கோணமே நாண மேயரி திரிசூலி
தரியலர்கள் முடியிடரு நீலி சூலியே வாலி பாலியே
அரியதவ மிசையில்வரு மாதி சோதியே நாதி நீதியே
தனதுபதி தனையருளு வாச மாகவே ராச நாயகி தயவாகி

விடையருளு மடியருட பீடை போகவே தோட மேகவே
நெடியவினை சடசடென ஓடி வாழவே போடு போடென
விருபகழி தெறதுகளாய் நீரு நீரென மாறு மாறென
... ... ... ... ... ... ... ... ...
வின்னமரள விபரமொடு உபயபத மாடி நீயருள் உண்மையாளே.

---

65. ஏலராகம் – மிக்க அன்பு. வாலரூபம் – இளம்வடிவு. பாரம் – சுமை. மேரு – மலை.

## (அடைக்கலமருளும் அணங்கு)

(தனத்த தத்தன தந்தன தந்தன
தனத்த தத்தன தந்தன தந்தன
தனத்த தத்தன தந்தன தந்தன தனதான)

66 சமைத்த பொற்பணி யிந்திர விந்தர
வமைத்த நற்பணி னந்தர சந்ததி
தரித்த சித்திர மின்பொல னப்பது கண்பார்வை
தகுத்த குத்தகு தந்தா தந்தகு
திகுத்தி குத்திகு தொந்தர திந்திகு
தனித்த சிற்றிடை யங்கொலி யிங்கென விளையாடல்

நிமைத்து முக்கண வென்றிடு வென்றிசெய்
விழித்து வக்கினி யன்றொரு மன்றினில்
நிருத்தி யுத்தமி நின்றென கொன்றது செயமாக
நினைத்த வப்பொரு ளொன்றென வென்றது
யனைத்து மிப்படி நின்றுற நின்றது
சிலைத்த தற்பர முண்டர யுண்டதில் நடமாடி

அமைத்த ழிப்பர மம்பர அம்பிகை
நடத்தி விப்பது சம்ப்ரப சம்ப்ரப
மசைத்து நிற்பது ரந்திர ரந்த்ரமு மனவாகி
அடித்து டுக்கடி டுண்டுடு டுண்டுடு
படித்து மத்தள மண்டர டண்டென
அதிர்த்து வெற்பசை கின்றது வொன்றது அடையரளம்

உமைத்த வத்தினி லென்பொலி லின்புர
வழுத்தி னித்தலு மன்பரு லன்பொடு
உருக்கி மத்தியி லுன்பர னப்பது மருள்வாயே
ஒழுக்க மற்றவ னன்றொரு தொண்டரில்
பழுக்க முற்றிலும் நன்றென நின்றருள்
உனக்க டைக்கல மம்பர வம்பிகை உமையாளே

---

66. அக்கினி – நெருப்பு. செயம் - வெற்றி, நிருத்தம் - கூத்து. வெற்பு - மலை. அடைக்கலம் - புகலிடம்.

## (விரும்பியதளிக்கும் விமலி)

(தனனதன தானதன தானனந் தானனந்
தனனதன தானதன தானனந் தானனந்
தனனதன தானதன தானனந் தானனந் தனதான)

67 பருகுபுன லூருசிறு கேணியுங் கூபமுங்
குமுளியது கூவிலரும் பாதையுந் தாரையும்
படிகமய மாகிநிற மானதும் பாணியும் உடையாளே
பரவைநவ கோணமுழு தாளவுஞ் சூழவும்
அனையனைய கோலமிவை யாகவுங் காணவும்
பரிமறிய வாதினதி யாடவுந் தேடவும் வருவாயே

உருகுமடி யார்கள்சிவ ஞானமுந் தானமும்
விரதமறி யாதசக வாசையும் பாசமும்
உழலும்வர காமமய லாடலும் பாடலும் உடனாக
உயிர்கள்பல சீவவுரு ஊரகம் போலவும்
வரவிரக ளாசையனு போகமுஞ் சோபமும்
உணர்வுடைய தாபபசி யாரவும் தேறவும் அருள்பாலி

சொருகுமதி ஏகவெளி போலவுஞ் சாலவும்
விகிர்தரண சோதிசுட ராரமும் பாரமுஞ்
சுருதிமுத லாகமவி லாசமுந் தோசமும் பரிபாலி
சுபசரித ராசரிக சாரமுங் கோரமும்
நளினசபை மீதிலுயர் தேவருந் தேவியும்
சொருபமுட னூடல்புரி ராகமுங் கேள்வியும் ........

இருகவிய ராலரிய வேடமுங் கீடரும்
பெருகுபர மாயிசிவ பாதமும் சீதமும்
இறைவருடன் நீவருக வேணுமுன் தோணவும் அபிராமி
இருளகல வேயிரவி யானதுந் தானமும்
எனதுகலி காரர்வெகு யோகமுங் காலமும்
இனியருளு மாயிமக மாயிகங் காளியென் உமையாளே

---

67. சிறுகேணி – சிறுகுளம். கூபம் – கிணறு. சகவாசம் – நட்பு
ஊரகம்–ஒரு திருப்பதி. தேற–கடைபோக. சுருதி–வேதம்,

## (இருவினை அகற்றும் இறைவி)

(தனதன தனந்த தந்த தனதன தனந்த தந்த
தனதன தனந்த தந்த தனதான)

68. இடைவழி யிருந்து வந்த பிரளய மனந்த முண்டு
இனவகை தெரிந்து கொண்டு பிழையாமல்
இடருபடு (மனந்த) துன்ப வளையதி லுழன்று ழுன்று
இருவினை மிகுந்து நொந்து திரிவேனோ

மடைவழி புகுந்து சொந்த நிலமைக ளுதிர்ந்து மந்த
வயலது விளைந்து தங்கள் பசியாற
மதியதி விளங்கு செம்பொன் விதிவர மழுங்கி துங்கி
மலைவர வெகுண்டு சிந்தை மருகாமல்

நடைவழி திறந்து கந்து மணிமுடி களுங்கு லுங்க
நமனுட மனங்க லங்க வருவாயே
நறுமலர் சொரிந்து கஞ்ச மதுரச சதங்க ளுந்த
நயகுண மியங்கு சிந்தை தருவாயே

கடைவழி யுடன்க லந்து நடுவனை வரம்பில் நின்று
கதிபெற நெடுந்த வங்கள் நிறைவேற
கரியுரி திமிர்ந்த ணிந்து பரிபுரச் சதங்கை தண்டை
கலிரிட நடந்து வந்த உமையாளே

---

68. பிரளயம்–அழிவுக்காலம். மடை–வாய்க்கால். நமன்–இயமன் கரியுரி–யானைத்தோலாடை. பரிபுரம்–சிலம்பு. இடர்–துன்பம் வயல்–நெல்வயல். கஞ்சம்–அமுதம். திமிர்ந்து–விறைப்பு

## (உயிரின் உயிரான உமை)

(தத்தா தத்தன தத்தா தத்தன
தத்தா தத்தன தனதான)

69 உச்சா ரப்பொருள் வச்சா ருற்பந
முத்தா ரப்படி யறியாதே
உத்தே கப்புலை கற்றே துற்பவ
வொட்டே பட்டர மெலிவேனோ

மிச்சா வைப்பொறி சிச்சீ விட்டெரி
வித்தே விட்டுயிர் மடியாதே
மெய்ப்பா தத்துக ளப்பா பெற்றிடு
மெய்க்கே நிற்பது தவறாதே

குச்சா கக்குடில் மச்சே கட்டிய
கொட்டா ரத்தினில் நிலைகாண
கொக்கா கச்செயல் மிச்சா சைப்பொருள்
கொத்தே முக்கிய குருநாதா

சச்சா ரப்புலை யிச்சா யிச்சைகள்
சத்தே மட்டது தவிறாயோ
சட்கோ ணத்திரு முக்கோ ணத்தருள்
சற்றே வைத்தருள் உமையாளே

---

69. உச்சாரம் – உச்சரிப்பு, உயர்ச்சி. உத்தாரம் – கட்டளை. மச்சு – மேல்மாடம். மிச்சை - அஞ்ஞானம். சச்சாரப்புலை – இழிவு. சட்கோணம் – அறுகோணம். உற்பநம் - உண்மை, தோற்றம். குச்சு – சிறுகுடில். கொட்டாரம் – தலைவாசல். கொத்தல் – வெட்டுதல். இச்சை - விருப்பம். முக்கோணம் – மூன்று கோணம்.

## (அளவிடமுடியா அன்னை)

(தான தான தானான தான தான தானான
தான தான தானான தனதான)

70 கால னான மாபாத கோர னான தோவேத
காமு சாரி யாகாத சடனாலே
காணொ ணாத சீர்பாதம் வேணு மோன மோனாதங்
காளி சூலி வாராகி மகமாயி

கோல மான தேகான வாலரூப மேதோண
கூறி நேச மேபூண வரவேணும்
கூட லான தோர்வீதி யாட லாதி யேனாதி
கூறொ ணாத தேசோதி அபிராமி

பால நாக மாமோன சீவ னாக வேஞான
பாத தூளி நாயேனும் பதிகாண
பாரு பாரு ராரர்ர சேக சேரு ரீரீரி
பாணி வேணி வாவாவ பரமாயி

சால னான மாரூதன் போல நானு மேயோது
தாறு மாறு மேகேளு சலியாதே
சாமி ராச ராசாதி வாமி தேவி நீநீதி
தான தான மீதான உமையாளே

---

70, காலன் - இமயன். சடம் – அறிவற்ற பொருள்.

## (பெரும்புகழுடையாள்)

(தாத்தத்தத் தாத்த தத்த தாத்தத்தத் தாத்த தத்த
தாத்தத்தத் தாத்த தத்த தனதான)

71. காட்டிச்செப் பாட்டி தொட்டு சூட்சத்தைப் பார்த்து சற்று
காப்புற்றுத் தீட்சை கெட்டுப் புகழோத
காட்சிப்பொற் காப்பு சுட்டு தோற்றத்துக் கேற்ற பட்டு
கட்டிக்குட் சாட்சிக் கார கரையேற

பூட்டிப்பித் தாட்டி கிட்டி சூட்டித்திப் பாட்டி கட்டி
போட்டுச்செக் காட்டி சட்டைப் புலையேனை
பூச்சிட்டுப் பேச்சு கத்து கீச்சற்றுத் தேக்க றற்று
போக்கத்துக் காக்க தக்க குறியாயோ

தாட்டிக்கத் தேட்டு கெட்டு காட்டுக்குச் சேட்டை குச்சு
தாக்கத்துச் சேர்த்து கட்டை தடுமாற
சாப்பிட்டுக் கூப்பி புஷ்பக் காப்பிட்டுக் கூப்பி செப்பி
சாற்றக்கத் தேற்ற சித்தி தருவாயே

தோட்டிக்கிச் சாட்டை சிட்சை காப்பிட்டுக் கோட்டி துர்க்க
தூக்கிச்சிக் கிச்சிப் பொருளேகாணி
தூத்திக்கைச் சாட்டு கிட்டு பேத்துக்குத் தீர்த்து கொத்து
சூட்சத்தைச் சாத்த சித்தி. உமையாளே.

## (அன்பர்க்கருளும் கற்பகம்)

(தனத்த தத்தன தானன தந்தன
தனத்த தத்தன தானன தந்தன
தனத்த தத்தன தானன தந்தன தனதான)

72 குனித்த விற்சிலை வேல்விழி மங்கையர்
கனத்த பொற்கிரி யாகிய கொங்கைகள்
குவித்து நிற்பது தாமரை பங்கய மதுபோலே
குறித்தெ னக்கொரு மாமதி மிஞ்சிய
மதப்ப யற்பொறி யாகிய வண்டது
குறித்து மட்டலர் மாதிரு கொங்கையின் மீதேபோய்

செனித்த கச்சணி வாசனை தங்கிய
மனத்தி லப்பிரி மாயைமி குந்தது
திமித்தி மித்திமி தாதிகு திந்திமி எனவேதான்
திகைத்து மத்தியி லாசையெ னுங்கன
மனத்தை விட்டரு பாதம்வ ணங்க
சிவத்த பொற்கழு வாயிபு ரந்தருள் மகமாயி

தனத்து முத்தணி மாமணி மிஞ்சிய
மருப்ப தத்தினி லாதிப ரஞ்சுடர்
தரித்தெ திர்த்தெதி ராடிய சுந்தரி சிவகாமி
சமத்தி யுத்தமி பார்வதி யம்பிகை
மறத்தி யற்புத ராசவ சங்கரி
சகஸ்த்ர புத்திவி லாசச வுந்தரி எனதாயி

தொனித்த கச்சர வாகம மந்திர
மெனக்கு மெய்ப்பொரு ளாகமொ ழிந்தருள்
தொகுத்தொ குத்தொகு தோவென விந்தைசெ யபிராமி
துணைப்ப தத்துக ளானதில் மைந்தனை
அணைப்ப தற்கிணி வாசிவ சுந்தரி
துதித்த வர்க்கரு ளாகிய வந்தரி உமையாளே

---

72. குனித்த–வளைந்த. மதப்பு–மயக்கு, கொழுப்பு.
செனித்தல்–பிறத்தல். துதித்தவர்–வணங்கியவர்.

## (ஒப்பிலா ஒளியாள்)

(தனதனந்த தான தனதனந்த தான
தனதனந்த தான தனதான)

73 மதிசிறந்த வானி லதலிருந்து தோனி
வடிவனந்த சோதி யதுபோலே
மகளிருந்த நேச மலர்புகுந்த வாச
மகிமைகண்டு தாசன் மகிழ்வேனோ

பதிசிறந்த மாட முழுதுமண்ட கூட
பரமிருந்த பீடம் பெறுவேனோ
பசியடர்ந்த மால மசிபடர்ந்த தூலம்
பலியணிந்த கோலம் விடுவேனோ

நதிசிறந்த வானில் பதிபுகுந்து மேவி
நடுவிருந்த தேவி யருள்தாராய்
நமனிருண்ட பாலி கமகமென்ற கோலி
நடுநடுங்க வாவென் றழையாமுன்

கதிரிருந்த வீடு உதவிதந்து தேடு
கருணைபொங்கி யாடு மபிராமி
கயிலைவிந்து நாத மயிலுகந்த போதங்
கருணையின்று தாரும் உமையாளே

---

73. மகிமை–பெருமை. மாலம்–பேய். அசி–படைக்கலம். தூலம்–பருமை. அயில்–அழகு, வேல், கலப்பை, சூலாயுதம்.

## (தேடுபொருள் கொடுக்கும் தேவி)

(தானதன தானதத்த தானதன தானதத்த
தானதன தானதத்த , தனதான)

74 நாசிநுனி வீதிசுத்தி வாசிதனை யோருவித்து
நாதவொலி கீதம்நித்தம் பெறுவேனோ
நாதசிவ யோகசித்தி பாதபரி பூரணத்தி
நாடகப ராபரத்தி யருள்தாராய்

காசிநக ராதிபத்தி ராகவச லோதரத்தி
காரணகிரு பாகரத்தி சிவயோகி
காமகலை யாகமத்தி வாமனசொ ரூபசத்தி
காலிலிடு பாடகத்தி திரிசூலி

தேசிகம னோகரத்தி வேதவிசு வாசகத்தி
சிவசிவ மாசமத்தி யெனையாள்வாய்
தேவிநவ கோணமிட்டு வீதிதிரி கோணமுத்தி
தேடுபொரு ளேகொடுக்க வரவேணும்

பாசிதிரை யூடறுத்த நேசபரி பூரணத்தி
பாலமுத மேருசிக்க அருள்வாயே
பாதிநில வேதரித்த ஆதிபர மேசரிட்ட
பாரமக மேருசித்தி உமையாளே

---

74. நாசி – மூக்கு நித்தம் – தினமும், நாள்தோறும். தேசிகன் – சிவன். பாசிதிரை - பாசவலை. ஊடறுத்தல் – நடுவறுத்தல்,

## (பலகலை மொழியும் பாவை)

(தனதன தனந்த தனதன தனந்த
தனதன தனந்த தனதான)

75 கலியுக மிகுந்து வரவர நடந்து
கவனமும் வளர்ந்து பெரிதாகி
கடுவிடம் நிறைந்து அடிமுடி கலந்த
கவனனந் திறந்து வரும்நாளில்

ஒலியது பிறந்து யிருசெவி புகுந்து
உனதருள் மிகுந்து வரவேணும்
உயிர்பல வனந்தம் வகைவகை மகிழ்ந்து
உணர்வு பசியென்ற பிணிதீர

வலியது தனங்கள் அவுசித மிருந்த
மதுரச ரசங்கள் தருபாலி
வளறொளி கடந்து வெளியொலி திறந்து
வடிவது துலங்கி வருவாயே

பழியென யிரந்து பசியது தணிந்து
பரமது நிறைந்த பரிபாலி
பழமொழி திருந்த மதுரத மிளின்று
பலகலை மொழிந்த உமையாளே

---

75. கவனம் – கலக்கம். பிணி – பசிப்பிணி.

## (அருள்மிகு அபிராமி)

(தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான)

76 வட்டமிகு குத்துமுலை தைத்துருவி மெந்தமயில்
மற்றறிவு கெட்டுணர்வுகள் தடுமாறி
மட்கியற வெட்கியுட லுக்கிநட விக்கிவிழ
வைத்ததென முத்திபுரி மகமாயி

சட்டமிடு கட்டழகி விஷ்ணுமய ரத்னசபை
சக்ரகிரி யுக்ரவித சிவகாமி
தற்சொருப மொத்தமதி லச்சபொரு ளுச்சிவெளி
சத்தமது பெற்றநிலை தருவாயே

கொட்டமிட மிட்டபரி எட்டுமசை யட்டதிசை
கொப்பினவள் கொப்பெறியு மகமாயி
கொச்சைமொழி விற்சிறுவ பச்சைமயி லச்சுடைய
கொத்தியமை எத்திசையும் வளர்பாலி

இட்டமுட னட்டகிரி வட்டமிட நிர்தமிடு
மெச்சரிகை வர்தனைசெ யபிராமி
இத்தனையு முக்கணர னுக்கிரவி வைத்தபடி
இப்புதுமை செப்புதமிழ் உமையாளே

---

76. மெத்த–மிகவும். கொட்டம்–தவறு. கொச்சைமொழி–திருந்தா பேச்சு. நிர்தம்–நடனம். மயல்–காமவிருப்பம். கொப்பு–காதணி. அட்டதிசை–எட்டுதிசை. முக்கணர்-சிவன்.

## (அடியார் புகழும் அன்னை)

(தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான)

77 நாணமற வேதவங்கள் ஊணிநிலை யேபரங்கள்
நாதகுரு வாகமங்கள் பெறவேதான்
நானுமென வேகடங்கள் ஞானபரி பூரணங்கள்
ஞானவிசு வாசகங்க ளறிவாரோ

ஊணழிவு தாருநின்று தானொளிவு தேதுசென்று
ஊமையுறு வாசியொன்றில் நிலையாமல்
ஓம்நமசி வாயபென்று கானகமெ லாமுழன்று
ஓடியற வேதழன்று சிலகாலம்

கானலினி வேணுமென்று வாணிதிரி கோணமின்றி
காதிலுப தேசமொன்று புகலேதான்
காசினியெ லாம்விளங்க வாசினைசெய் வாய்துலங்க
காரணமி தாகுதென்று புவியோரும்

பேணியிரு போதுகந்த பூசைசிவ யோகநண்பர்
பேசுதிரு வாசகங்கள் புகழோத
பேரருளு வீரசிங்க மாயிமக மாயிதங்க
பேதசிவ காமிஎங்கள் உமையாளே

---

77. நாணம் – அச்சம். பரம் – நிறைவு. ஆகமம் – தருமநூல். கடம் - அருநெறி. ஞானவிசுவாசம் – பத்தி. கானகம் - காடு. வாசனை – வாசித்தல்.

## (படிகமய மேனியாள்)

(தனதனன தானதான தனதனன தானதான
தனதனன தானதான தனதான)

78 அரவுகலை மாறிமீறி ஒருமுறைக ளாடியூடு
அனுதினமும் வாரகூறு தெரியாமல்
அலைகடல்க ளாகி நேசத் தலைபெருக தாதிமோச
மறிவுதடு மாறிநாச மடைவேனோ

இரவுபிடி யாதபாச வலையிலடி யேனுமாகி
இனியகய லாசமேரு வழிகாண
இலவுகலி காலவான மகிமையது போலவாகி
இருகுவிரி வாகியேகி விடலாமோ

வரவுமொரு நாளுமேழில் விரையவர வேணும்வாணி
மதனகிரு பாலிசூலி மகமாயி
வருசமொரு மாசமாத விருசரண பாததூளி
மனதுதனி லோதுபாத மறவேனே

பரவுமடி யார்களாக மிடமுழுது மாசிலாத
படியருள நீதியீது புவிமீதில்
பரமகயி லாசநாதர் வரவருள வேணுமாயி
படிகமய மேனியாதி உமையாளே

---

78, வாரகூறு – துதிப்பாடல் வகை. நாசம் – அழிவு. மாசு – குற்றம். மகிமை – பெருமை.

## (பச்சைக்கிளிக் குழவி)

(தத்தத்த தத்ததன தத்தத்த தத்ததன
தத்தத்த தத்ததன தனதான)

79 செக்கச்சி வட்டிதொரு பக்கப்ப ழுத்ததணி
சித்தத்தி லுற்றறிவு சிவஞானம்
செப்பிப்ப ரப்பொருளை யப்பர்க்கு ரைத்தருளி
தித்திக்க வைத்தகுரு வடிவாகி

நிக்கத்த ரித்தொருசொல் வர்திக்க தக்கபுகழ்
நிஷ்டைக்கி ருத்தியதி லெனையாள்வாய்
நெற்றிக்குள் ளிட்டபொரு ளுச்சிக்குள் வெட்டவெளி
நச்சிக்க வட்டமது நிலைகாண

தக்கத்தை விட்டுவிடு சொக்கத்தி லட்டவனை
சற்றுக்கு ளற்றுநடு வழியாக
தட்டுப்ப ரைக்குளிரு கட்டுத்தி ரைக்கதவு
சற்றுத்தி றக்கவகை யருள்வாயே

பக்கப்ப ழுத்தசெயல் சிக்கத்தி ரத்துவழி
பற்றிப்ப திக்குளிரு பதிகாண
பட்டப்ப கல்கிரண மிட்டுப்ப தித்தழகு
பச்சைக்கி ளிக்குழவி உமையாளே

---

79. நிட்டை – ஒருமைநிலை, நச்சிக்கவட்டம் – விரும்பப்படும் பொருள். தக்கம் – பற்று. அடுதல் – போரிடல். சிக்கத்திரம் – வீடுபேறு.

## (குற்றமொன்றில்லா குணவதி)

(தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தன்தனன தனதனன தந்தனந் .தந்தனந் தனதான)

80 நினைவையள விடவரிய கண்களுந் திங்களும்
பெரியதொரு புரவிவிடு விண்களுங் கங்களும்
நெடியகொடு முடியுடைய தங்கமும் கங்கையும்
வெண்ணிலாவும்

நெறியலறம் வளர்கவுரி சங்கமுஞ் சம்புவு
மறியுமழு விடையுரிய தம்பமுங் கம்பமும்
நிகரறிய மரமகுட கொன்றையுந் தும்பையும் நின்றுலாவி

வினவரிது கனகசபை யந்திரந் தந்திரஞ்
சுழலவெகு நடனமிடு சங்கரஞ் (சென்றிட)
வெகுகிழவ னுடல்வளவு தொங்கணர் தொங்குதி
மெனவேதான்

விபரமுள சிறியநனி வெண்டையந் தண்டைகள்
கலகலென நடனமிடு குண்டலம் விண்டெழ
விரகுடைய லகிரமயல் கொண்டதுங் கண்டதும்
வரும்ஞானம்

கனவிலொரு பொருள்வரவு வந்ததுஞ் சொந்தமும்
விடியவது நினையடறை கின்றதும் பொன்றதுங்
கருவிலுரு வரியவதை தந்ததுஞ் சொந்தமு மறியாதே
கடுகளவு துணிகிதரி யங்குலந் தங்கியும்
வடுவுடைய படுகுழியி லங்கழல் பொங்கியுங்
கமலமதி லுருமுடிய வந்ததுந் தொந்தமு மிந்துநாதம்

அனவரத நடனசபை விந்தையும் பந்தியும்
நிறைநிறையள வரைதிரைக ளஞ்சவும் பஞ்சமம்
அறிவுசுழி குமுழிவரு ரந்திரிங் கண்டறி வன்பினாலே
அரிதரிது தவமகிமை யின்புறுஞ் சம்ப்ரமம்
இதுபுதுமை யிதுமகிமை யென்பதும் பைம்பொன்வ
ரையமலைதிரி புரைகுமரி யண்டருந் தொண்டர்பணி
உமையாளே

---

80. தம்பம்-கவசம். இலகிரமயல்-மயக்கம். நலி-நெருக்கம்.

## (ஞான வடிவு)

(தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான)

81 உருகியற மேனிருந்து கருகியற வேமெலிந்து
உடையவச மோகனிந்து பருகாமல்
உரமசைய வேநடந்து பரவசம தாயிடைந்து
உனதருளை யேமறந்து விடுவேனோ

சொருகுதுறை வாவிதங்கி யருவிமலை மீதிரங்கி
துறையறிய வேமயங்கி திரிவேனோ
துரியநிலை யேவறிந்து அரியகொலு மீதிருந்த
சுடரைமிக வேதெரிந்து பிழையாமல்

முருகுவிரி வாய்மலர்ந்து கருவிலுரு வாகிவந்த
முறையினுட பேதகங்க ளதனாலே
முதலையறி யாமலிந்த மதலைமிக வாடிநைய்ந்து
முழுதும்விர காலிடைந்து தடுமாறி

வருகமன மோமதங்கி எனதுகுரு வாகமங்கள்
மகிமைசிவ காமிதங்கள்; வரமீய
மனமொருமை யாயிருந்து நினைவுதனி லேயுரைந்து
வரவுசிறு பாதைதந்த உமையாளே

---

81. உரம்-அறிவு. துரியநிலை-உயர்நிலை. மதலை-குழந்தை, பிள்ளை. விரகம்-காமநோய். பரவசம்-மிகுகளிப்பு. முருகு-அழகு. நைதல்-தளர்தல்.

## (இம்மை மறுமைக்கு இறை)

(தனனதந்த தந்த தனனதந்த தந்த
தனனதந்த தந்த தனதான)

82 முனையறிந்து நின்று தனைமறந்து சென்று
முடியவொன்று கண்டு பெறுவேனோ
முகமலர்ந்து வந்து அகமகிழ்ந்தி ருந்து
முதியசெல்சொல் தந்து நிறைவேற

உனைநினைந்து தொண்டு மனைபுகுந்து கண்டு
உறவிதென்று கொண்டு பிழையேனோ
உடல்புகுந்தி ருந்து நடமிகுந்த டர்ந்து
உயிர்பொருந்த விந்தை துணையாகி

எனைவிளங்க வன்று குணமறிந்து சொந்த
இகபரங்கள் தந்து சுகமாத
இனியசெம்ப தங்க ளருளுதந்த கண்க
ளிறைவனுந்த னங்க ளுறவாகி

மனைவிளங்க வென்று குடியிருந்த மங்கை
மறைதெரிந்து சம்பு நடுவாகி
வரைதுலங்கு கங்கை பவுரிவந்தி சைந்த
வரவறிந்து தங்கும் உமையானே

---

82. செல்சொல் – செல்வாக்கு. இகபரம் – இம்மை மறுமை. மறை – வேதம். வரை – மலை,

## (துன்பங்களைப் போக்கும் துணைவி)

(தான தந்தன தந்த தந்தன
தான தந்தன தந்த தந்தன
தான தந்தன தந்த தந்தன தனதான)

83 வேத ரஞ்சித மஞ்சு செஞ்சர
நாத ரந்திர மொன்று நின்றது
வாடு சந்திர விம்ப மென்றதி நடமாடும்
வீர பண்டித னன்று கொண்டுசெய்
பாத பங்கய மின்று தந்தருள்
வேத வுந்தரி மைந்த னுந்தனை மறவாமல்

மாத வங்கொடு மங்கை சுந்தரி
பாத கங்களை வென்று கொன்றறி
மாயி சங்கரி வஞ்ச கங்களை அணுகாமல்
வாய்தி றந்தொரு மந்தி ரங்களை
ராசி யங்களி லஞ்சி லொன்றது
வாச கந்துதி னம்பி யுன்பத மடியேனும்

பாத மொன்றுவ ணங்கி யின்புர
யோக தண்டுபு ரந்தி ரங்குவை
பாவி யைந்தரு வென்று வந்தருள் மகமாயி
பாரி லன்புதி குந்த வென்றுசொல்
தானு முன்புதெ ரிந்து மன்பர்கள்
பாவு செந்தமி ழென்று பண்பிசை யநுராகம்

நாத சங்கொலி யங்கு சைந்திட
ஊது இன்றவர் பங்கி ருந்தருள்
ஞான வந்தென வந்து செங்கழல் திருவாயே
ஆண்ட முண்டக ரந்திர மந்திர
வீடு கண்டதி லென்றி ருந்திட
ஆதி யெங்கள்ப ரம்பர சுந்தரி உமையாளே

---

83. பாதகங்கள்–துன்பம், இழிசெயல்கள். வஞ்சகங்கள்–தந்திரங்கள். பாவு – பா.

## (உலகைத் தாங்கும் உமை)

(தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான)

84 அருவிலுரு வாகிவந்து மருவுமல ரேபுகுந்து
அணுவளவு போலிருந்து சமனாகி
அளவளவ தாய்நிறைந்து பழவினைக ளால்முடந்து
அலகையுரு வாய்முடந்து வடிவாகி

தருவிலுரு வேசமைந்து புவிகள்தனி லேபிறந்து
கவலைபெரி தாகிநொந்து தடுமாறி
கடியதொரு மாசடைந்து கொடியவினை யாலிடைந்து
கருணைமற வாதலைந்து திரிவேனோ

குருவினுப தேசமொன்று கருவதினி மாயைவிண்டு
குமரிசிவ காமிநன்று தருவாயே
குகையிலொரு போதிருந்து திசைமுழுதெ லாமறிந்து
குவலயமெ லாம்புரந்த வபிராமி

ஒருவரறி யாதவன்பு தெளியவர வேணுமுன்பு
உபயபத மானசம்பு மகமாயீ
உதவிசெய வேணுமுன்றன் பதமடைய வேணுமென்று
உனதருளை யூணிநின்ற உமையாளே

---

84. அரு-உருவமற்றது. சமன்-நடுநிலை. முடந்து-வளைந்து.
மாசு-குற்றம். குவலயம்-பூமி.

## (முக்கண் முதல்வி)

(தந்த தத்தன தான தனானன
தந்த தத்தன தான தனானன
தந்த தத்தன தான தனானன தனதான)

85 சங்கு சக்கர பாணி சிரோமணி
கங்க ணத்திரி சூலி கராதலி
தந்தி சற்குரு நாயக வாரண மகமாயி
சம்பு முக்கணர் நேய மனோகரி
அம்பி கைத்திரி சூலி கராதலி
தம்பி சுப்பிரம நேச தயாளெனு மபிராமி

எங்கும் நிஷ்கள ரூப நிராமய
வங்க ரட்சகி வாணி திவாகரி
யிந்தி ரர்க்கிறை யான மனோன்மணி எனதாயி
எண்டி சைக்கதி காரி விராசத
தண்ட வுக்ரவ தார தயாநிதி
எங்க ளுத்தமி யாதி பராபரி மகமாயி

தங்கு தக்குத ராகி தராவென
தொங்கு சிற்பிரம தேவ கியாமள
சம்ப்ர மத்தொடு லாகு சவாசென நடமாடும்
தந்த தத்தன தான தனானன
பம்பை மத்தள வீணை களோரடிசை
தந்தி தித்திமி தாதி குதாவென சிலதாளம்

பொங்கு புக்கலை யூரிய தேனதி
லங்கு தித்தெழு பூர ணமாமதி
பொன்கி ரிப்பதி மீதி லுலாவிய சிவகாமி
புஞ்சி ரிப்பொடு லோக சராசர
முன்செ யற்படி யாமி துகாரண
புண்ட ரிகத்திரு மாலு டனேவரும் உமையாளே

---

85. நேயம் – அன்பு. நிஷ்களம் – கலப்பின்மை. அருவம்.
புண்டரீகம் – கழுகு.

## (வேதமறியும் விமலி)

(தான தான தனந்தன தந்தன
தான தான தனந்தன தந்தன
தான தான தனந்தன தந்தன தனதான)

86 ஆல கால விடங்கள ணிந்தொரு
சால மான நடங்கள் புரிந்தவ
ராதி நாளை முடங்கின மென்றது மறியாயே
ஆசை யாகி மயங்கி முயங்கிய
தேது மாறை பழந்துணி கந்தையு
மாகி யாடி யிரந்துப ரந்தவர் வரமீதில்

வால ரூப மதங்கினி யெங்கர
சூல பாணி சுமுங்கிசு மங்கலி
வாம யோகி சிவந்தச வுந்தரி மகமாயி
மாரி வீரி வயங்குவ யங்கரி
காரி சூரி களங்கிக ளங்கரி
வாணி வேணி வளைந்தம ருங்குள மகமாயி

நீல மேக நிரந்தரி யந்தரி
பால பாலி பயங்கர பங்கய
நீத ஞான பதந்தர வந்தருள் விமலாயி
நேசமான தலந்தல மென்றிதில்
வாச மாகி வளர்ந்த பழம்பொருள்
நேமி காமி யலங்கிர்த குண்டலி யபிராமி

ஞால மீதில் விளங்கியி ருந்துள
கால வாழ்வு புரிந்துவ ரந்தரு
நாலு வேத மறிந்துவ ழங்கிய
ஞான பூர ணிசங்கரி நின்புர
வான நாடு மகிழ்ந்திட வந்தருள்
ராச ராச (பணிந்திட) சுந்தரி உமையாளே

---

86 வயங்கல்-ஒளி செய்தல். மருங்கு-இடை. ஞானம்-மெய்யறிவு
ஞாலம் - நிலம்.

## ( மின்னல் கொடியிடையாள் )

(தாந்த தானன தந்தன தந்தன
தாந்த தானன தந்தன தந்தன
தாந்த தானன தந்தன தந்தன தனதான)

87 சார்ந்த மாமதி தங்கிய சுந்தர
மீய்ந்த நீரணி மந்திர தந்திர
தாம்ப யோதர மன்றினில் நின்றெதிர் விளையாடல்
தாந்த னாதன தந்தன தந்தன
தோந்த தீங்கண தொங்கென திங்கென
தாண்டி லாகுசெய் தந்தகு தந்தகு வெனவேதான்

நேர்ந்த நூலிடை யங்கென யிங்கென
யேந்து வார்முலை ரண்டென ஒன்றென
நீண்ட பாணியன் தம்புகு சம்ப்ரம வடிவாக
நீங்கொ ணாதப தங்களீச தங்கைகளி
தாங்கு பாடக தண்டைகள் வெண்டயம்
நேர்ந்த நாதசி லம்புபு லம்பொலி பலபாட

சேர்ந்த மாதவ ரிந்திரர் சுந்தரர்
தாந்த போதன ரந்தண ரம்பையர்
சேங்கு சேகரி செந்தரி குந்தரி நடமாடல்
தீந்து லாகுபு ரிந்துவி ரிந்தரு
ளோங்கி லோகமி குந்துவ ளர்ந்திடு
தீண்க ளானப லன்களு கந்திடு சிவகாமி

ஊர்ந்து தேர்மிசை யெந்தரு விந்தமு
மீய்ந்து வாழ்வுச னங்கள னந்தமும்
ஊன்க டோறுமி ருந்துவ ளர்ந்துயி ருறவாகி
ஊன்றி யோர்நிலை நின்றருள் கொண்டது
தோன்றி வான்மதி சென்றறி கின்றது
ஊஞ்ச லாகிய கஞ்சமு றைந்தருள் உமையாளே

---

87 சாந்தம் – குளிர்ச்சி. கஞ்சம் – தாமரை.

## ( நல்வாழ்வு தரும் நல்லாள் )

( தான தான தனந்த தனந்தன
தான தான தனந்த தனந்தன
தான தான தனந்த தனந்தன தனதான)

88 மாய வாழ்வை மகிழ்ந்து மிகுந்தொரு
பேய்க ளாகி யலைந்து தலந்தொரு
மாத ராசை வருந்த வருந்துவ குறவாமே
வாடை வீசு மடந்தை யர்தந்திர
ஆடை சோர வுரிந்து மருங்கிழை
வாடு தோனி நடந்து மினுங்கிய ணுகாதே

காய வீடு தகர்ந்து விழுந்திடும்
நோய்கள் தாவி யிடைத்து மெலிந்திடு
காம மான குடங்க ளுடைந்திடும் கருதாதே
காசு தேடி யிருந்த தனங்களும்
பேசு மாத ருமைந்த ருஞ்சொந்தமும்
கால னோடி வரும்பொ ழுதந்திரம் வருமோதான்

நேய மான பரம்பரை யம்பிகை
தாயு மாகி மகிழ்ந்து மனந்தனில்
நீதி ஞாயம் விளங்கி வழங்கிய மகராசி
நேமி ஞான பதந்தரு சுந்தரி
வாம பூசை முகிழ்தொ ருசம்ப்ரம
நீடு பாத விதங்கொடு வந்தணி யருள்தாராய்

ஆய மான தவங்க ளிலங்கிய
தூய மேரு புரங்க ளிரங்குவை
ஆதி சோதி யணிந்த சுமங்கலி யபிராமி
ஆறு வீடு புகுந்து நிறைந்ததில்
மேலை வீடு தெரிந்து தெளிந்திலை
ஆயி மாயி வரந்த ரவந்தருள் உமையாளே

---

88 வாடை – மணம். காலன் – இயமன். ஞாயம் – நியாயம் – நேர்மை. தனம் – முலை. மருங்கு – இடை. நேயம் – அன்பு ஆயம் - பேறு.

## (இடைவெளியற்ற இறைவி)

(தான தான தனந்தன தானன
தான தான தனந்தன தானன
தான தான தனந்தன தானன தனதான)

89 ரூப ரூப சவுந்தரி வாழ்குண
தேவி தேவி பரம்பரை யாதிப
யோக சாலி நிரந்தரி மாதவி நிமலாயி
ரூப மூள மறிந்துயி ரானது
தேடவாகு புரிந்தருள் நாயகி
லோக மோக மறிந்திடு தேவகி சிவகாமி

சோப தாப சுகந்தரி வாள்விழி
லாயி வாமி மெலிந்தர நோவது
தோச பாச மிகுத்திர மாயையில் சுழலாமல்
தூப தீப செழுஞ்சுட ராகிய
சோதி நாத சுயம்பிர சாரணி
சூல பாணி சுமங்கலி யேகதி தருவாயே

சாப மீரு வசந்திர சேகரி
ரூப லாவ ணிமந்திரி போதகி
தாலு மூல கசம்ப்ரம லாகிரி மகராசி
சாடு சாட ணிவந்தவி ரோதியை
போடு போடு நிநெந்துடல் தீயெழ
தாகு தாசி னிதுங்கிடு ஆவியை நமதாயி

கோடு கோர ணிசிந்துடல் பாருன
வேறு கூறெ னவெங்குடல் கீழக
கூகை யோரி புகுந்துண வேகொடு மகமாயி
கோர கோர மதங்கிய தாகிரி
தீய ராவி விடங்கிம னோகரி
கோடி கோடி யளந்ததி வாகரி உமையாளே

---

89. ரூபம் – வடிவு, உருவம். கூகை - பருந்து. ஓரி – நரி.

## (பிறவிப்பிணி போக்கும் பாவை)

(தந்தனன தந்த தந்தனன தந்த
தந்தனன தந்த தனதான)

90 கண்டதிசெ யங்க குண்டதுவி ளங்கு
கங்கைமலர் தங்கு முடிமீதில்
கண்புருவ முன்றில் விண்பரவி நின்று
கம்பநடு கொன்றி கடகாலால்

தொண்டுசெய வென்று வந்துறவு கொண்டு
தொந்தமென வந்த பரிகாரி
துன்பவினை ரெண்டு மெண்பிறவி யென்று
சொந்தமறி வென்று சுடர்மீள

அண்டபகி ரண்ட மென்றநவ கண்ட
மங்கியது வுண்டு நடமாட
அங்கமணி கின்ற பொங்குபுல னெங்கும்
அந்தமுத லன்பு வடிவாகி

குண்டலம ணிந்து நின்றுளம மிழ்ந்து
குஞ்சரமி ருந்து விளையாடல்
கும்பவய ரம்பி யம்பரமி யம்புங்
கொங்குமலை தங்கும் உமையாளே

---

90. தொந்தம் - தொடர்பு. அண்டபகிரண்டம் – நிலமும், வானக் கோள்களும். அங்கி – நெருப்பு. கும்பவயறு – குட வயறு – விநாயகன். வினையிரண்டு – இன்பம், துன்பம். நவ கண்டம் – ஒன்பது கோள்கள். அங்கம் – எலும்பு.

## ( திருப்புகழ் பாட அருளியவள் )

( தனனத்தன தனனா தனதன
தனனத்தன தனனா தனதன
தனனத்தன தனனா தனதன தனதான)

91 அதரத்துதி யறியா தொருசிறு
எதனைப்புவி தனிலே வெகுகன
அருளைப்பெற வெனவே இருபைசெ யபிராமி
அனுவிற்றுக ளதிலே யொருதுளி
கடுகத்தனை தருவாய் மதுரச
அமுதத்துளி யெனவே பருகிட அடியேனும்

மதுரத்துதி யதுநா லெபலத
தமிழைத்துதி யறியா தெளியனை
மவுனத்திருப் புகழோ தெனவருள் மகமாயி
மதியிற்கதி யுறவா யனுபவ
செயலைத்திரு முருகா வெனமொழி
வருகைக்குரு வோதிய முதலது மறவாமல்

விதரக்குகை தசரா ததுமுன
பதறிப்புல னலையா தொருவழி
விடுகத்துணை வரவா சிவசிவ மகராசி
வினையிற்குடி யிதுகர ணரலழ
ரபெருத்தரு பதிதா குடிபுக
விதியுற்பன மதிலோர் நிலையது பெறவேதான்

இதரத்துளி யதனா லருளிய
உதரச்சட மிதனா லலைவது
இனமட்டல வடியார் படுதுய ரெனவாழ
இதனைச்சத மெனவே திரிவது
விதனத்கய றறவே நினைவது
யெளியற்றுன தருளே துணைநிதம் உமையாளே

---

91 அதரம் – உதடு. மதுரம் - இனிமை. மவுனம் - மோனம். பதறல் - விரைதல். உதரம் – வயிறு. சடம் - உடல். சதம் – நிலையானது. விதனம் - துன்பம்.

## (மாயைப் போக்கும் மாதவி)

(தானா தான தனதானன தானன
தானா தான தனதானன தானன
தானா தான தனதானன தானன தனதான)

92 ஆசா பாச கயறாகிய மாதர்கள்
மாயா காயக் குடிலாகிய பாதகம்
ஆலா கால கடுவா ளாகிய வல்குலாலே
ஆரா தூசி சிமிழாகிய மாமுலை
தூறா பாரி கயலாகிய வேல்விழி
ஆகா ரான பசுமேயுர மாய்கைக ளதனாலே

தேசா ஆசை படிபோலுள காமுகர்
வாழ்நாள் பேணத் தெரியாதவர் ...
தீரா கோர சழமாகிய சேற்றதில் மூழ்கியேதான்
சீவர சீவச் செயலாகிய வீரிய
கோபா கோபத் தயவாகிய தால்வெகு
சீவா சீவக் குலமாகிய (தாதலின்) படியேதான்

பேசா மோசக் குழியாகிய பாழினில்
வீழா தாள படியேதவிர் மூலிகை
பேதா பேதத் தொளிராகிய மாமதி யருள்வாயே
... ... ... ... ... ... ... ... ...

---

93, 94 பாடல்கள் உள்ள ஏடு காணப்படவில்லை.

## (கங்கணச் சிவகாமி)

(தனத்தந் தந்தனத்தந் தனத்தந் தந்தனத்தந்
தனத்தந் தந்தனத்தந் தனதான)

95 ... ... ... ... ... ...
... ... ... ... ... ...

நடித்தும் பண்பழித்துங் குதித்துங் களிகளித்தும்
நகைத்துஞ் சென்றொளித்துந் திரிவாயோ
நதிக்கும் விண்டுகதிக்கும் பதிக்குந் தன்பதிகளும்
நடக்குஞ் சங்கதிக்குரு அடியேனை

தொடுத்துங் கைந்நொடித்தும் படிக்கும் பரம்பரத்தை
சுழற்றுங் கங்கணத்தி சிவகாமி
துதிக்குஞ் செந்தனுதல் பிறைக்குன்றி தரைக்குந்
தொளிக்கம்ப றொளிக்குள்வளரும் உமையாளே

95. முதலிரண்டு அடிகள் கிடைக்கவில்லை.

## (அறம் வளர்மையவள்)

(தனனந் தனத்த தந்த தனனந் தனத்த தந்த
தனனந் தனத்த தந்த தனதான)

96 வதனந் தனக்கி சைந்து நுதலும் பிறைக்கமைந்த
வடிவுந் திருந்தி வந்து புவிமீதில்
வழங்குங் குலக்கொ ழுந்து துளிருந் தளிர்ந்த லர்ந்து
மலருந் தவத்தி ருந்த மகமாயி

சுதனுந் தனைத்தெ ரிந்து நிதமும் பரத்து ணர்ந்து
சுகமும் பெருந்த வங்கள் தருவாயே
சுடருஞ் சடைக்க ணிந்து முடியுந் தனக்கு யர்ந்த
துவனந் திறக்க வந்து சுழிமீதில்

உதவஞ் சணத்தி லின்று கதவுத் திறக்க வந்து
உருகுங் கருத்த மர்ந்து தனதாகி
உரமுந் திருப்ப தங்கள் தரவுஞ் சரக்கொ ழுந்து
உருகுங் குறிப்ப றிந்த பொருளாகி

அதனப் பரிக்கி சைந்து மிகவுஞ் செகத்தி லுன்றன்
அறிவஞ் செழுத்தில் நின்ற வயிராமி
அகமும் பெருக்கி யிந்த யிகமும் பிழைக்க வென்று
அறமுந் தழைக்க வந்த உமையாளே

---

96. வதனம்-முகம், முக்கோணத்தின் மேற்கோணம். சுதன்-மகன். நிதம் - நாள்தோறும். உரம் – சிறப்பு. சரம் - பொன். அதனம் – மிகுதி.

( கருணைமிகு கயற்கண்ணாள் )

( தனத்த தத்தன தத்த தனத்தந்தா தனத்தந்த
தனத்த தத்தன தத்த தனத்தந்தா தனத்தந்த
தனத்த தத்தன தத்த தனத்தந்தா தனத்தந்த தனதான)

97 தடித்த செம்பிழை குத்து முலைப்பெண்ணார் தனைக்கண்டு
மயக்கி வித்திட பித்து நிலைக்கொண்ணா மலையுண்டு
தவித்து நிற்பதை தொட்டு விடப்பண்ணா தெனைத்
தொண்டு செயவேதா
சமைத்த பொட்டக கெட்ட லொடுக்கம்மா விடக்கிந்த
துடக்கை பத்தர சுட்டு ஒடுக்கம்மா எனக்கிந்த
சளத்தை வட்டிட சித்தி யுனக்கம்மா விலைக்கிந்த
வணைபோக

நடித்த பொற்கிரி பச்சை மதிப்பெண்ணே நினைத்துன்றன்
பதத்தை பற்றிட புத்தி கயற்கண்ணே சரச்சொந்தம்
நகைத்து முப்புரதிக்கை எரித்தம்மா சமத்துஞ்செய் திரிசூலி
நடுக்க மற்றதை தித்தி வலுத்துள்ளே துதித்திந்த
பரத்தில் நிற்பது கொற்ற உருக்கம்மா யுனைக்கண்டு
நதிக்கு ளற்புத புட்ப மலர்க்குள்ளே யெனக்கன்பு
தருவாயே

படித்த சித்திர கட்டு உமைப்பெண்ணே தவத்தின்ப
முடித்த தற்பர சொக்க ரிடத்தம்மா கொலுத்துஞ்சு
பதிக்கு மட்சர கட்டு விதிக்கவே சுழிக்கொப்பு மதியேநீ
பருத்த வெற்பக தத்த நுணுக்கம்மா யருள்கொண்டு
செலுத்து சத்திர துக்கு லருக்கம்மா யனைத்துஞ்செய்
பதித்த சக்கர சுற்று விசைக்குள்ளே நொடிக்குங்கை
மகராசி

பிடித்த வச்சிர கத்தி வெளிச்சத்தி யுதித்தெங்கு
முகத்தி லுச்சித பொட்டு விளக்கம்மா யருத்துன்றன்
பெருத்த கற்பக செச்சை மணக்கவே நடத்துஞ்சொல்
மகமாயி
பிரித்த சற்குரு சத்த முரைக்கொண்ணா தெழுத்தொன்று
கருத்தி லுற்பன சித்தி வழுத்துமோ ரெழுத்தஞ்சி
பிதற்று மிப்படி கொத்து தொழிற்கெல்லாம் நிருத்தஞ்செய்
உமையாளே.

---

97 பித்துநிலை-அறியாமை. பொட்டல்-பாழிடம். சளம்-துன்பம். பிதற்றல் - பலகால் பேசல். கொத்தை-அஞ்ஞானி. நிருத்தம்-நடனம்.

## (அறிவு மயமான அன்னை)

(தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான)

98 தடக்கை மும்மத சூடவய ருடையனை
எடுத்த மும்முலை யருளிய சிவதல
தனத்த சண்முக முளதொரு குழவியை யருள்பாலி
சமத்தி பெண்மயி லதிவித வடிவுள
விதத்தி நன்மைநெ யழகிய சவுமிய
சடைச்சி தண்மையி லடியவ ருள்முறை மகமாயி
நடக்கை நின்னுட திரமது குடிதர
நினைத்து வல்லவ னுனைமன முறவெகு
நடுக்க முன்னிய குளிறொடு கிழவனு முடமாக
நரைத்த சென்னியு மிடறமு தொழுகிய
மிகுத்த தும்மலு மிடறிய நடைகளும்
நயத்த சொல்களும் வளைவுடல் குனுகலு லிதமாக
இடக்கை தன்னுட மனையவ ரெனவுற
வணைக்க விம்மிய தனகிரி யுடையவ
விசைத்து முன்னொரு திரிபுர மெரியெழ விளையாடி
இரைத்த கின்னமு நவுரிய ளரசொடு
வகுத்த கிண்ணரி யொலியது கலிரிட
விருக்கு மன்னகர் மரமுனி கும்பென ...
அடக்க முள்ளவள் செயலது அளவிட
எவர்க்கு முண்மைகள் தெரிதர வரியது
அறிக்கை யின்னது வென்றருள் புரிவது சிவகாமி
அடுத்த தண்மை பொருளென நினைவது
மகிழ்ச்சி யுள்ளொளி பெருகிய புகளிதம்
அமைத்த சின்மய பரிபூர மலரணி உமையாளே

---

98. நடக்கை – வளைந்த பெரியகை. மும்மதம் – யானையின் கன்னமதம், கைம்மதம், கோசமதம். சென்னி – தலை. நயத்த – மலிந்த. கின்னம் – கிளி. கிண்ணரம் – நரம்பிசைக் கருவி. சின்மயம் – அறிவுமயம்.

## (பக்தியின் பயன்)

(தனனதன தனனதான தந்தனத் தந்தனா
தனனதன தனனதான தந்தனத் தந்தனா
தனனதன தனனதான தந்தனத் தந்தனா தந்ததான)

அரியகுரு நமசிவாய மென்றெழுத் தஞ்சிலே
தெளியவொரு பெருமையாகிய நின்றெழுத் தொன்றிலே
யமுதகலை நிலைகளான தன்பினுக் கன்பிலே நின்றநாதம்
அறிவுதனி லறியொணாத பிஞ்செழுத் தங்கனே
குறியறிய வெகுவிலாச முண்டகக் குன்றிலே
அதியதிரு நடனமாது சென்றொலிக் கின்றதோ ரெந்தநாளும்

தெரியவகை புரியநாளும் பஞ்சகத் தொன்றியே
சரணவொலி கனகதான மண்டினில் கண்டிவீர்
திரிபுவன முரிவியாட வன்சரக் கொம்பிலே கொஞ்சியாடல்
தினையளவு திரணதூளி கண்களிற் றங்கினால்
மனையளவு வினைகளோடி வெந்தறப் பங்கமாய்
சிதறியது வெகுவிநீறு செந்தழற் பஞ்சதாய் வஞ்சமாயை

பெரியதொரு கயிலைவீடு கண்டினித் தெண்டனா
இரவுபக லதுவுதோண அந்திரச் சந்திரால்
பெரிகயமு தொழிகிவார முண்டகக் குன்றிலே யென்றுசேர்வன்
பிரமமது குடிகளாக அம்பரப் பெண்பினாய்
பரமவுன தெமனமோடி மின்களிட் திங்களாய்
பிறவியற வழிபடாத பண்பணைக் கம்பமே தம்பமாக

விரிவுசெய நினைவுதாக மைந்தனைக் கொஞ்சியே
மதுர்ரச மொழுகுதாரை சந்திடத் தந்ததீ
தரயவிசி தமுகநளினவாச மெந்தனக் கன்புமாய் வந்துதோண
விமலைதிரி புரைமுராரி சிந்துரச் சுந்தரியே
யமலைபரி பரிவினோத மந்திரக் குண்டலீ
வெகுதவ சிந்தனை யகால சங்கொலித் தம்பிரான் உண்மயாளே

---

99. அம்பரம் – வான். தம்பம் – பற்றுக்கோடு. முண்டகம் – தாமரை.

## ( தக்கனை வென்ற தாய் )

( தத்தன தத்தன தான தனான
தத்தன தத்தன தான தனான
தத்தன தத்தன தான தனான தனதான)

100. உத்தர தட்சண தேச விசாலி
சத்தர முத்திர ராச விமானி
உற்பன விற்பன லேகு விபேகி உயர்மாதே
உப்பின லப்பது வாச மனாதி
வைப்பது செப்பிய பேச வொனாதி
ஒத்தது பெற்றறி தேக விசேட முடையாளே

மித்துர லட்சுமி தேவி கபாலி
சத்துரு பட்சணி சூலி குமாரி
மெய்ப்பொருள் மெய்க்கனி யாயி முராரி யெனதாயி
விற்கின முற்பகை சாடு சடாரி
தக்கனை வென்றிடு கோப கொடோரி
விற்றொளி லுக்கிர நீலி பிடாரி கலியாணி

கத்தனர் வெற்றிசெய் வாதி டுகோடு
திக்கொடு திக்கென மோதி டுபோரில்
கற்பணி முத்தினை மார்ப ணுமாலி மகராசி
கட்டளை யிட்டொரு லாகு சவாசு
வட்டமு மிட்டொரு தாள மனோக
கற்பனை பற்பல ராக சராளம் விதமாக

கைத்தள மெற்றொடு வீர மலாரி
தித்திதி சித்வய னேத்தி சைகேளி
கைக்கர மற்பிடி பாற்ச தனாதற் சபையாளி
வர்த்திதி யுத்தமி பார தியோகி
நித்திய பத்தினி தாளி சையோகை
மைக்குள லட்சண பாட கநாடகம் உமையாளே

(நல்வினை யருளும் நாயகி)

(தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தனதான)

101. அரக்க ருக்கதர் கடுவிட முளபல
வலுக்க ளாத்திய ரகுபதி துணையென
வமைத்த பார்வதி யொருசிலை வடிவென வுருவாகி
அடுத்த மூப்பக லிடைபுனை துணையென
மிகுத்த வேற்கர னொருசுத னெனவர
அதுக்கு வாய்முத தொருமத கடகரி மகவாக

இடுக்க வாழ்வையு மிதுசத வசமென
மகட்கு வாய்த்தது பழுதுள நழுவலு
மயிர்ப்பு மேற்கையு மெவிவகை யிலையென தருவாழ்வு

... ... ... ... ... ...

... ... ... ... ... ...

பரக்கு போக்கிவு மெனுமொரு குடிநலி
னிருக்கு மார்க்கமும் வெளிபட வெளியது
பதிக்கு மூக்கெனு மொருசிறு வழிபுக வருவாயே
படைக்கும் நாட்களி லிகபர சுகமது
நொடிக்குள் ளாக்கிய அறம்வள ரிமையவள்
பதித்த பாக்கிய மருளுமவை தவசிவ உமையாளே

101. இரகுபதி – திருமால். சிலை – அழகு. பதித்த பாக்கியம் – நல்வினை.

## (பாவ வினை போக்கும் பாவை)

(தனத்த தன தனத்த தன
தனத்த தன தனத்த தன
தனத்த தன தனத்த தன தனதான)

102 நரைத்த தலை விரித்த சடை
சிரித்த முகம் நெரித்த குரல்
விழித்த இமை பழுத்த நிற மதுவாகி
நருக்கியுடல் வளைத்து மிக
வுடுத்ததுணி பிறத்த விழ
விடித்தழகு குதித்து தனை விதமாக

நடைக்குள் நடை சுழற்றி மிதித்
தொதிக்கி யிடை நெளித்து வலி
திழுத்து தரி விசித்த மூறை யுடனேதான்
யிரைத்த மொழி தொளித்த உரை
கழுத்தி னிடை பதித்த கறை
வரப்ப ழுது நிரப்பு ளைய யெனவாகி

இளைப்பி ருமலதித்தி கொள
வரிக்கொ கரு புடைத்த வரி
யரித்த சரு பொசித்து ணர விளியாமல்
இருத்தி விழி நெருக்கி யிரு
கடைக்கி னுரை வடித்தொ ழுகி
யமுக்க டைய முழுக்கு குடு தடுமாறி

இரக்க வல பலிக்க திய
கிரப்புடைய விருப்ப மனை
களிக்கு ரடு பிடித்து மிக தெருவூடே
... ... ... ... ... ...

விளைத்த முளை தெரித்த தென
விருத்த னொரு பகுத்த னென
மயக்க மிகு தியக்க முடன் வரவேதான்
விருப்ப முட னெத்த வனை
வருத்தி யுர வணைத்து மிக
நினைத்த படி முடித்த சிவ மகமாயி

வினைப்பி றவி நிலக்க ருவை
யிருக்க வொரு மறிப்பொ றியை
விடக்கொ டிய மழுப்பெ ரிய மகதேவர்
... ... ... ...

உரைத்த தொரு தனிப்பொ ருளை
வகுத்த நவ பரத்தில் மதி
தரித்த மணி சடைக்கு ளணி சிவகாமி
உதித்த கதி நிறத்து டைய
சிறுக்கு மூவி யர்கும ரிகள்
பசலை மொழி குயிலி மகராசி

உனக்கெ னது யெனக்கு னது
துளிக்கு மிட மறிக்கை செய
வுருக்க மது பெருக்கி யருள் தருவாயே
உனக்க டிமை யினித்தெ ளிய
மலர்க்க மல பதத்தை மிக
விருத்தி மு தருந்த திரு உமையாளே

## (பெண்ணாசை விலக்க வேண்டல்)

(தனனதன தானதான தனனதன தானதான
தனனதன தானதான தனதனா)

103. புவியிலுள மாதர்மீது யெனதுமன வாசைதூது
புகுதமய லாகிமோக வலையாலே
புலைகுலையி லாடிவாடி மதனகலை பாடியோடி
புணர்வினை மூடிநோயி வரவேதான்

ரவிகிரண சூடுதரவி விரகுடைய பீடைதாவி
நசலையடை மோசநாச மிகமேவி
நமனுடைய வீடுகாண மரணவலி யேறிமீறி
ரசனைகெட வாதைபோது தரவேதான்

செவியிலுரு வோசைமாறி யவதிவர நாசிசீரி
திரமுமற மாறியூறு ரசமேகி
செயலுமற ரூபபேத வகையினுட தாகுமாறு
திதுசிவ தாதுநாடி அயவாகி

உவியவுயி ரோடிவீடி லடையுமொரு காலைநீயு
முபயமன தாளையூணி யருள்வாயே
உனதடிமை நாயினேனு மனுதினமு மாசிலாத
உபயதவ மீயுமாயி உமையாளே

103. நமன்-இமயன். இரசனை-சுவை. மதனகலை–காமகலை.

## ( உலகத் தாய் )

( தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன தனதான)

101 சம்பு சங்கரி தும்பை வெண்பிறை
கொன்றை தங்கிய தண்டு குண்டலி
சண்டி முண்டகி யண்ட ரண்டகி மகமாயி
தந்தி தந்திகு திந்தி திந்திமி
யெங்கும் நின்றொலி சென்று விண்டொலி
குங்கு பிங்கலை பொங்கு சங்கொலி மகராசி

நம்பு நன்றனை யெந்தை சிந்தையி
லன்பு கொண்டது கண்டு கண்டில
நன்று நன்றுனை யென்று தொண்டது பணிவேனோ
நஞ்சு நஞ்சுட லஞ்சு பங்கது
துஞ்சு பஞ்சென வஞ்ச ரங்கொடு
ரண்டு மொன்றென மன்றில் நின்றொரு மனமாகி

வம்பு வஞ்சனை யஞ்சி விண்புக
நெஞ்சு தங்களை யின்பு கந்திட
வந்து சந்திடு சிந்தை தந்தருள் திரிசூலி
மங்க ளந்திரி பங்க யங்கழ
லென்சி ரந்தனில் மைந்த னும்பெற
(வந்து தங்கிட) வொன்று சிந்தைசெய் அபிராமி

அம்பு யங்கரி தின்பு யங்கொடு
மிஞ்சு செஞ்சர ணந்தை கொஞ்சிட
அங்க ரந்திர மன்றி லங்கிய அமுதே நீ
அம்ப ரஞ்சுழல் சம்பு சங்கரி
யுன்ப தந்தொழ அம்பி சுந்தரி
(அன்ப துந்தர) வந்து தங்கரி உமையாளே

---

104 வம்பு – *தீச்செயல்.* வஞ்சனை – மாயம்.

# பின் இணைப்பு 1

| பாடல் எண். | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் | |
|---|---|---|---|---|
| வெ பா | 1 | தொகையபிறாமி | தோகையபிராமி | |
| | 2 | வெணடிய | வேண்டிய | பல இடங்கள் |
| 1 | 1 | கடலையள | கடலைகள் | ,, |
| 1 | 1 | ஓருதுகை | ஒரு தொகை | ,, |
| 1 | 2 | சககரை | சர்க்கரை | ,, |
| 1 | 2 | எளுகலம | எழுகலம் | ,, |
| 1 | 2 | அருகலம | அறுகலம் | ,, |
| 1 | 2 | மரவாமல | மறவாமல் | ,, |
| 1 | 3 | கயததலம் | கைத்தலம் | |
| 1 | 3 | மததளி வயரது | மத்தள வயறது | |
| 1 | 3 | பசிதீா | பசிதீர | |
| 1 | 3 | வசிாமலா | வச்சிரமலர் | |
| 1 | 3 | வழா | வளர் | பல இடங்கள் |
| 1 | 4 | நெரிமுரை | நெறிமுறை | |
| 1 | 4 | களிாமுகன | கரிமுகன் | |
| 1 | 4 | தமிளிது | தமிழிது | பல இடங்கள் |
| 2 | 1 | மரை | மறை | ,, |
| 2 | 2 | யெதும | யேதும் | |
| 2 | 2 | ரெவலாளரென | யேவலாளரென | |
| 2 | 4 | வானமுாத | வானமுத | |
| 2 | 4 | திரிகெணஇ | திரிகோண | |
| 2 | 4 | மெவுமதியெ | மேவுமதியே | |
| 2 | 4 | கூறுடமெடை | கூடமேடை | |

| பாடல் எண். | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் | |
|---|---|---|---|---|
| 2 | 4 | வாளு | வாழு | |
| 3 | 2 | ரரரின பதைகக | ர்த்ன பதக்க | |
| 3 | 1 | லிசைப்ட | லிச்சைபட் | |
| 3 | 1 | வெரபபை | வெற்பைப் | பல இடங்கள் |
| 3 | 1 | பளிதத | பழித்த | ,, |
| 3 | 1 | குளை | குழை | ,, |
| 3 | 3 | கயில | கையில் | |
| 3 | 4 | சுநதறமளகு | சுந்தரமழகு | |
| 3 | 4 | மதினுதல | மதிநுதல் | |
| 3 | 4 | இனபுரு | இன்புறு | |
| 4 | 1 | சிருபிரை | சிறுபிறை | பல இடங்கள் |
| 4 | 1 | யிதள | யிதழ் | ,, |
| 4 | 1 | தவரரில | தவற்றில் | ,, |
| 4 | 2 | திருபுர | திரிபுர | ,, |
| 4 | 2 | மதநனை | மதனனை | ,, |
| 4 | 2 | மாலி | மறலி | ,, |
| 4 | 3 | மளுமரி | மழுமறி | ,, |
| 4 | 4 | வளைககும | வழைக்கும் | ,, |
| 5 | 2 | சுளி | சுழி | ,, |
| 5 | 4 | துடாநது | தொடர்ந்து | ,, |
| 6 | 1 | பாகெதி | பரகதி | ,, |
| 6 | 2 | சிரதத | சிறந்த | |
| 6 | 2 | குமபஸததனமாதெ | கும்பத்தனமாதே | |
| 6 | 3 | கிளைநது | கிளர்ந்து | |
| 6 | 3 | மகிளசசி | மகிழ்ச்சி | |
| 6 | 4 | கதிதாறாய | கதிதாராய் | |
| 6 | 4 | யருளகொடு | யறுகொடு | |
| 6 | 4 | கயலககணணெண | கயற்கண்ணென | |
| 7 | 1 | வெலவிளி | வேல்விழி | |
| 7 | 1 | சொாவு | சோர்வு | |
| 7 | 2 | பாஙகியள | பாங்கிகள் | |

| பாடல் எண். | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் |
|---|---|---|---|
| 7 | 2 | பஙகைய | பங்கய பல இடங்கள் |
| 7 | 3 | கெநதமகெசபா | கந்தமகேசுபரீ |
| 7 | 3 | குமபமதாகிய | கும்பமதங்கிய |
| 7 | 3 | குளநதை | குழந்தை |
| 8 | 2 | நொாநதர | நொாந்தற |
| 8 | 4 | உதைய | உதய பல இடங்கள் |
| 9 | 1 | றாசநாயகி | ராசநாயகி ,, |
| 9 | 1 | அபிறாமி | அபிராமி ,, |
| 9 | 2 | பாாபதி | பார்வதி ,, |
| 9 | 2 | மகறாசி | மகராசி ,, |
| 9 | 3 | திருசூலி | திரிசூலி ,, |
| 9 | 3 | சறாசாம | சராசரம் ,, |
| 9 | 4 | புகளொது | புகழோது |
| 9 | 4 | யெடாத | எடாத |
| 9 | 4 | வாமனாய | வாமநாயகி |
| 9 | 4 | மொாகி | மேரகி |
| 10 | 1 | பொரிவிதது | பெயரறிவித்து |
| 10 | 2 | பாவை | பரவை |
| 10 | 3 | நெனகது | னெனக்கு |
| 11 | 2 | சமையமிது | சமயமிது பல இடங்கள் |
| 11 | 3 | பளமொளி | பழமொழி ,, |
| 11 | 3 | யரிவாரிவினி | அறிவரறிவன் |
| 11 | 4 | மிரையவா | மிறையவர் பல இடங்கள் |
| 11 | 4 | இருவரெது | இருவரது |
| 12 | 1 | சருவெசறாயி | சருவேசராயி |
| 12 | 2 | வாமகொார | வாமகோார |
| 12 | 1 | பறவு | பரவு |
| 13 | 1 | கெவுரி | கவுரி பல இடங்கள் |
| 13 | 2 | நரிய | னரிய |
| 13 | 2 | வழாபாலி | வளர்பாலி பல இடங்கள் |
| 13 | 3 | வாவி | வரவு |

| பாடல் எண். | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் | |
|---|---|---|---|---|
| 13 | 3 | முரைமுரை | முறைமுறை | |
| 13 | 4 | நிருவிய | நிறுவிய | |
| 13 | 4 | நினவினை | நினைவினை | பல இடங்கள் |
| 13 | 4 | வினைய | வினைகள் | ,, |
| 13 | 4 | இமைய | இமய | ,, |
| 14 | 3 | ணாத | னாதவர் | |
| 15 | 1 | அனுவெ | அணுவே | |
| 15 | 1 | அவறரபதியெ | அமராவதியே | |
| 15 | 2 | யுளமெயளமே | உளமேயளமே | |
| 15 | 3 | யாநாரிடமெ | யரனாரிடமே | |
| 15 | 3 | விளைவென் | விளைவேநி | |
| 15 | 3 | உனது | அடகே | |
| 16 | 2 | கிளைவறபபனை | இளைவற்பனை | |
| 16 | 3 | புகளை | புகழை | பல இடங்கள் |
| 16 | 4 | தெருவிலபபாவு | தருவிற்பரவு | |
| 17 | 2 | தெநருளி | தேனருளி | |
| 17 | 4 | தாளமுாததது ளருளும | தாளருளும் | |
| 18 | 2 | பாறவதி | பார்வதி | பல இடங்கள் |
| 18 | 3 | கநதநொடயஙகா | கந்தனொடைங்கர | |
| 18 | 3 | நாஞுசுதாகர | நான்கு தாகர | |
| 18 | 3 | முயறநத | மூய்ந்த | |
| 18 | 4 | நாஙகு சாதி | நான்கு சாதி | |
| 18 | 4 | திநதின | தீந்தின் | |
| 19 | 2 | நெஷமடை | நிஷ்டை | |
| 19 | 2 | சாககுரு | சற்குரு | பல இடங்கள் |
| 19 | 3 | வளநது | வளர்ந்து | ,, |
| 19 | 4 | யநதன | யன்றன் | ,, |
| 19 | 4 | காபபச விரபபன | கற்பக விற்பனை | |
| 19 | 4 | தாபபயாசடசுத | தற்பரசட்சுத | |
| 20 | 1 | நமொநமொ | நமோநம | பல இடங்கள் |

| பாடல் எண் | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் | |
|---|---|---|---|---|
| 20 | 1 | நாபாலி | நரபாலி | |
| 21 | 1 | வாவா அரிவு | வரவர அறிவு | பல இடங்கள் |
| 21 | 4 | கிளவநொடமபி | இழவனொடம்பி | |
| 22 | 3 | நீய | நியும் | |
| 22 | 3 | தீதரு | தீதறு | |
| 22 | 4 | மநொகரி | மனோகரி | |
| 23 | 1 | கஙக | கனக | |
| 24 | 1 | சொரு | சேர்ந்து | |
| 24 | 1 | வழநது | வளர்ந்து | |
| 26 | 1 | விபெக | விவேக | பல இடங்கள் |
| 27 | 1 | சறகுணமாயி | சற்குணமாயி | ,, |
| 27 | 1 | நிறகுணதாயி | நிர்க்குணதாயி | ,, |
| 28 | 1 | நிஷடட | நிஷ்ட | ,, |
| 29 | 3 | மனுதினிமனதில | மனுதினமனிதினில் | |
| 29 | 3 | கரைமிடரு | கறைமிடறு | |
| 29 | 4 | அயாநதுககொரு | அய்ந்துக்கொரு | |
| 30 | 1 | ரறறன | ரத்ன | ,, |
| 30 | 1 | சிததிர | சித்ர | ,, |
| 30 | 2 | கிஷடடணனயன் | கிஷ்ணனயன் | |
| 30 | 2 | கெறப | கற்ப | பல இடங்கள் |
| 30 | 2 | கொசசித | கர்ச்சித | ,, |
| 30 | 2 | கெவுமாரி | க்வுமாரி | ,, |
| 30 | 3 | விஷடடுனுமய | விஷ்ணுமய | |
| 30 | 4 | குடடினிதன | குட்னிதன | |
| 31 | 1 | தஞசு | தங்கு | |
| 32 | 4 | காறறிகை | கார்த்திகை | |
| 33 | 2 | யால | யாறு | |
| 33 | 4 | யெவ | ஏல் | |
| 34 | 1 | கணமென | காணமென | |
| 34 | 1 | தவிர | தாவிர | |
| 34 | 2 | கயிலையூகுணலவெ | காயிலையூடுணவே | |
| 34 | 4 | கயிலாச | கயிலாசரை | |

| பாடல் எண் | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் | |
|---|---|---|---|---|
| 35 | 1 | சதது | சற்று | |
| 35 | 1 | தறகநிடராளி | தர்ககனிடராளி | |
| 35 | 3 | வாததினை | வர்த்தனை | |
| 36 | 1 | டெளுதாமரை | டெழுதாமரை | |
| 36 | 1 | மீதினிலாடிவாமிசை | மீதினிலாடரவாமிசை | |
| 36 | 3 | சிவோகம் | சிவாகம | |
| 36 | 4 | பாறபதிறாசஸ | பார்வதி ராசச | |
| 37 | 3 | செயாமல | செயவாமல் | |
| 37 | 4 | பாதநதருளு | பாதந் தரவருள் | |
| 38 | 1 | வழளகிகைதிரியா மல | வழங்கின்புந்திரியாமல் | |
| 39 | 1 | வெஙகடரெஙக | வெங்கடரங்க | |
| 39 | 1 | முசநத | உயர்ந்த | |
| 39 | 2 | பங்கினிலுரைபவற | பங்கிலுறைபவர் | |
| 39 | 3 | பரமி | பரந்து | |
| 39 | 3 | தவளநத | த்வந்த | |
| 40 | 4 | நிரைநத | நிரந்தரி | |
| 41 | 1 | பொலதது | பொலாதது | |
| 41 | 1 | பிராநருள | பிரானருள் | |
| 41 | 3 | நடறாயற | நடராயன் | |
| 42 | 3 | நெததி | நெற்றி | பல இடங்கள் |
| 42 | 3 | யொறற | யொத்த | ,, |
| 42 | 4 | வெததி | வெற்றி | ,, |
| 42 | 4 | காபப | கற்ப | ,, |
| 43 | 1 | வெதினை | வேதனை | ,, |
| 43 | 1 | தெது | தேது | ,, |
| 44 | 4 | தெரிசனை | தரிசனை | ,, |
| 45 | 2 | வாம சொருபி | வாமனசொருபி | |
| 46 | 4 | தலபதி | தலம்பதி | |
| 46 | 4 | வளத | வளை | |
| 47 | 2 | சொபிசொப | சோபாசோபு | |

| பாடல் எண் | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் |
|---|---|---|---|
| 49 | 1 | உலகுபபெரு | உலகப்பெரு |
| 49 | 5 | குறியிலககுறி | குறியிற்குறி |
| 50 | 1 | மாயை | மாமாயை |
| 50 | 4 | காரண | காணாத |
| 51 | 2 | பாதது | பார்த்து |
| 52 | 1 | யொனி | யோகிகள் |
| 52 | 1 | செனை | சேனைகள் |
| 52 | 1 | நாடி | நாடிகள் |
| 52 | 2 | மொதி | மோதிய |
| 52 | 2 | திடைவளியிலெகசரி | டைவழியில் கத்தி |
| 52 | 3 | சூது | சூதுமெ |
| 52 | 3 | மாதற | மாதர்கள் |
| 52 | 4 | வெளை | வேளையில் |
| 52 | 4 | பிரியமுடலடச் | பிரியமுடனட்சி |
| 54 | 1 | பொறததழருககதிபதி | பொற்தம்பர்க்கதிபதி |
| 54 | 1 | பொறற | பொற்றன |
| 54 | 2 | மெரிபபகைததது | பெரிப்ப நகைத்தது |
| 55 | 2 | சுறககுணம | சொற்சுற்குணம் |
| 65 | 1 | வனுதை | வனிதை |
| 65 | 1 | அருவை | அரிவை |
| 65 | 1 | தாரு மாரு | தாறுமாறு |
| 66 | 4 | தொறைறில | தொண்டரில் |
| 67 | 3 | நனறாய | நன்றெனை |
| 67 | 3 | விகிரண | விகிர்தரன |
| 67 | 4 | இறைவருட | இறைவருடன் |
| 69 | 3 | கடில | குடில் |
| 70 | 1 | காலநான | காலனான |
| 72 | 2 | விடடரு பொதம | விட்டருபாதம் |
| 73 | 2 | பலிகயணிநத | பலியணிந்த |
| 76 | 3 | கொயபரி | கொப்பெறிய |

| பாடல் எண் | வரி | சுவடியிலுள்ள வடிவம் | திருத்தம் பெற்ற வடிவம் |
|---|---|---|---|
| 77 | 4 | நனபற | நண்பர் |
| 78 | 1 | வாறகூரு | வாரகூறு |
| 81 | 1 | மெனி | மேனிருந்து |
| 82 | 3 | ளருளுதவுகணக | ளருளுதந்தகண்க |
| 86 | 2 | யெகா | யெங்கர |
| 86 | 2 | சுமுங்கிலி | சுமங்கலி |
| 87 | 1 | சாநத | சார்ந்த |
| 87 | 2 | நெநத | நேர்ந்த |
| 87 | 3 | செநத | சேர்ந்த |
| 88 | 3 | முகிநதொரு | முகிழ்ந்தொரு |
| 89 | 2 | செஞ்சுட | செழுஞ்சுட |
| 91 | 2 | தெளிதனை | தெளியனை |
| 92 | 2 | வானாளை | வாணாள் |
| 97 | 1 | செயயவெதா | செயவேதா |
| 97 | 3 | யனைததுசெய | யவைத்துஞ்செய் |
| 97 | 3 | நொடிவகுஙகை | தொடிக்குங்கை |
| 98 | 2 | குடினெதாள | குடிதர |
| 98 | 4 | பொருளெ | பொருளென |
| 99 | 3 | சொருவன | சேர்வன் |
| 99 | 4 | முறாரி | முராரி |
| 100 | 3 | கததநறவெததி | கந்தனர் வெற்றி |
| 100 | 3 | மாறபனி | மார்பனி |
| 101 | 1 | சுதநென | சுதனென |
| 101 | 3 | பறகு | பரக்கு |
| 102 | 4 | மலறகமல | மலர்க்கமல |
| 103 | 4 | உனதடுமை | உனதடிமை |

## பாடல்களில் மிகையாக உள்ள சொற்களும் இடங்களும் :

| பாடல் எண். | வரி: | சொற்கள். |
|---|---|---|
| 8 | 2 | 'தசயப்பி னக்கொ ளுன்த்திரன், |
| 24 | 2 | 'ஐகளககான துன்ப வலைக்கேயுழன்று' |
| 27 | 1 | 'மயில் மீதே' |
| 70 | 1 | 'சுந்தரி' |
| 98 | 3 | 'எவர்க்கு முணமைதன் செயவது ஆளவிட' |

இந்நூலின் முதல் ஏட்டில் நேரிசை வெண்பாவாலான காப்புச் செய்யுள் ஒன்று காணப்படுகிறது. இச் செய்யுளில் முதலிரண்டு அடிகள் மட்டும் வெண்பாவின் இலக்கணம் பெற்று மற்ற இரண்டடிகளும் சீர், தளை பொருந்தி வராமலும் மாறுபட்டும் காணப்படுகின்றன. இது ஏடு எழுதுவோரால் நேர்ந்த பிழையாகவும் இருக்கக்கூடும் என்ற கருத்தில் வெண்பாவின் இலக்கணம் பொருந்தி வரும்படி இறுதியிரண்டு அடிகளையும் கீழ்க்கண்ட முறையில் திருத்தி அமைத்துள்ளேன்.

## ஓலையிலுள்ள வடிவம்

சொன்னேன் சுருதிமதித் தோகயபி ராமியெனு
மின்னா ளுமைபாதம் வேண்டியே — முன்னாள்
நளின இன்ப மணிக ளென்று ரவிதுலங்க மதிபுனைந்த
களிறு வந்து வசனமுன் சொல் காப்பு.

## திருத்தம் பெற்ற வடிவம்

சொன்னேன் சுருதிமதித் தோகையபி ராமியெனு
மின்னா ளுமைபாதம் வேண்டியே — முன்னாள்
நளின மணிகள் ரவிவெண் மதிசேர்
களிறுவந்து முன்சொல்லும் காப்பு.

# பின் இணைப்பு 2

இந்நூலிலுள்ள பாடல்களுக்கு ஏற்ப அமைக்கப்பட்ட
சந்தக் குறிப்புகள்

( எண் — பாடல் எண் )

( — ) கோடு ஒவ்வொன்றும் அதற்கு முன்புள்ள
ஒரு சந்தத்தைக் குறிக்கும்.

## வல்லோசை மிக்கு வருவன

தனன தனதன தனன தனதன - - தனதான 11, 13, 23.
தனதன தனதன தனதன தனதன - - தனதான 44, 58.
தானதன தான தான - - தனதான 2, 12, 33.
தனனா தனனா - - தனதான 15.
தானா தானா - - தனதான 47.
தானன தானன - - தனதான 36.
தனதனன தானதான - - தனதான 78, 103.
தான தான தானான - - தனதான 70.
தான தன தானதான - - தனதான 59.
தானதன தான - - தனதான 43, 45.
தனதன தானன தான தானன - - தனதான 26.
தானான தானன தான தானன - - தனதான 14.
தானா தான தனதானன தானன - - தனதான 92.
தனன தன தானதன தானனந் தானனந் - - தனதான 67.
தனதனன தனதன தான தானனா தான தானனா - - தனதான 65
தனதத் தனதத் - - தனதான 16.
தனத்தத்த தனத்தத்த - - தனதான 60.
தனதனன தத்த தானன - - தனதான 52.

## மெல்லோசை மிக்கு வருவன

தனதனன தானதந்த – தனதான 5.
தந்தனன தந்த – தனதான 28.
தானந்த தானன – தனதான 41.
தானந்தன தான – தனதான 46.
தனதன தனந்த – தனதான 75.
தானதன தானதந்த – – தனதான 77.
தனனதன தானதந்த – – தனதான 84
தந்தனன தந்த – – தனதான 90.
தனத்தந் தந்தனத்தந் – – தனதான 95.
தனன தந்த தந்த – – தனதான 64, 82.
தனனதன தான தந்த – – தனதான 81.
தனதன தனந்த தந்த – – தனதான 68.
தன தனந்த தான – – தனதான 73.
தனதன தனன தனந்த தானன – – தனதான 21.
தனந்த தந்தன தந்தன தந்தன – – – – – தனதான 25.
தனதன தந்த தனந்த தானன – – தனதான 39.
தனந்த தானன தந்தன தந்தன – – தனதான 40.
தனதன தந்தத் தந்தத் தனதன – – – – – தனதான 53.
தனன தந்தன தந்த தானன – – தனதான 62.
தனா தனந்தன தான தானன – – தனதான 9.
தான தந்தன தான தனாதன – – தனதான 20.
தானத் தானத்த தானன தந்தன – தனதான 42.
தானந் தனந்த தனதந்த தந்த – – தனதான 57.
தாந்த தானன தந்தன தந்தன – – தனதான 87.
தான தந்தன தந்த தந்தன – – தனதான 83.
தான தான தனந்தன தந்தன – – தனதான 86.
தான தான தனந்த தனந்தன – – தனதான 88.
தான தான தனந்தன தானன – – தனதான 89.
தந்தன தந்தன தாந்த தானன – – தனதான 18.
தந்தன தானன தந்தன தந்தன – – தனதான 7.
தந்தத் தனதன தனதன தனதன – – தனதான 29.
தந்த தந்தன தந்த தந்தன – – தனதான 104.

தனதனன தனதனன தந்தனந் தந்தனந் - - தனதான 80.
தனனதன தனனதான தந்தனத் தந்தனா - - தனதான 99.
தானதந்தன தானதந்தன தானதந்தன தானனா 63.

## வல்லோசை மெல்லோசை இரண்டும் கலந்து வருவன

தனனந் தனத்த தந்த - - தனதான 96.
தனத்த தனதன தனன தனந்த - தனதான 6
தனத்தன தந்தத் தந்த தானன - - தனதான 31.
தனத்த தத்தன தத்த தனந்த - - - - - தனதான 19.
தனத்த தத்தன தந்தன தந்தன - - தன்தான 66.
தனத்த தந்தன தனதன தனதன - - 98.
தனத்தா தனந்த தனத்தா தனந்த - - தனதான 24.
தனந்த தந்தன தாத்தன தாத்தன - - தனதான 32.
தந்த தத்தன தான தனானன - - தனதான 85.
தனத்த தத்தன தத்த தனத்தந்தா தனத்தந்த - - தனதான 97.

# பின் இணைப்பு 3

## இந்நூலில் கூறப்படும் இறைவியின் பெயர்கள்

# இறைவன் பெயர்கள்

(எண்கள் : பாடல் எண்கள்)

# பாடல் முதற்குறிப்பகராதி

(எண்கள் : பாடல் எண்கள்)

# சொல்லகராதி

(எண்கள். பாடல் எண்கள்)

# துணை நூற் பட்டியல்


1. அருணகிரிநாதர் வரலாறு, (கட்டுரை) தமிழிசைப் பாடல்கள் வெள்ளை வாரணன், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1982
2. அருள்சுரக்கும் சக்தி ஆலயங்கள், திரு. முத்துப் பிள்ளை, பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை-1976.
3. அபிராமி அந்தாதி உரையுடன்), கி. வா. ஜகந்நாதன், அமுத நிலையம், சென்னை-14. 1968
4. அபிராமி அந்தாதி, (மூலமும் உரையும்) கழக வெளியீடு
5. இந்து சமய வரலாறு, ந. சி. கந்தையா, புரோகிராசிவ் அச்சகம், சென்னை-1.
6. இந்துமத இணைப்பு விளக்கம், கே. ஆறுமுக நாவலர் தொண்டன் காரியாலயம் வெளியீடு. 1964.
7. இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டு மலர், சென்னை-1968.
8. இலக்கியக் கொள்கை (மொழி பெயர்ப்பு), குளோறிய சுந்தரமதி.
9. எல்லோரும் வாழவேண்டும், அ. மு. பரம சிவானந்தம்.
10. ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு மலர், மதுரை-1981.
11. கம்பராமாயணம் அயோத்தியா காண்டம், வை. மு. கோ. பதிப்பு.
12. கலிங்கத்துப்பரணி, கழக வெளியீடு
13. கலைக்களஞ்சியம், தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை-2. 1968.

14. கழகத்தமிழ் அகராதி, சென்னை-1. 1969.

15. கயற்கண்ணி மாலை, உ.வே சாமிநாதையர், உ. வே. சா. நூல் நிலையம். 1970.

16. குமரகுருபர சுவாமிகள், பிரபந்தத்திரட்டு, காசி மடம் வெளியீடு. 1961.

17. சக்திதத்துவம், சுவாமி சித்பவானந்தர் தபோவன வெளியீடு.

18. சக்தி வழிபாடு, ரா. சீனிவாசன், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ் நாகர்கோயில்.

19. சங்க இலக்கியங்கள்,

20. சங்க இலக்கிய ஒப்பீடு, இராம. பெரிய கருப்பன். மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1.

21. சாக்தம், செந்தில் துறவி, சாந்தா பதிப்பகம், சென்னை-18.

22. சிந்துவெளி தரும் ஒளி, டாக்டர் க. த. திருநாவுக்கரசு வள்ளுவர் பதிப்பகம்.

23. சிவம், ந. சி. கந்தையா பிள்ளை

24. சூடாமணி நிகண்டு,

25. செந்தமிழ் அகராதி, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. 1957

29. செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு-18, 35, 48.

27. சேந்தன் திவாகரம், கழக வெளியீடு

28. சைவ சமய வரலாறு, ந. சி. கந்தையா பிள்ளை.

29. சைவத்திருக்கோயிற் கிரியை நெறி, கா. கைலாசநாத குருக்கள், இந்து கலா அபிவிருத்திச் சங்கம், சரசுவதி புத்தக சாலை, 19/1, செட்டியார் தெரு, கொழும்பு.

30. சௌந்தரிய லகரி, சங்கர பகவத் பூஜ்ய பாதாள் அருளியது கிரி பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5.

31. தமிழகக் கோயிற் கலைகள், தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு 1973,

32. தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி-2. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113. 1977

33. தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, பி. எல். சாமி நியூ செஞ்சுரி புக் அவுஸ் சென்னை-2. 1976.

34. தமிழ்ப் பேரகராதி. அரங்கசாமி நாயக்கர் வெளியீடு, சென்னை-1935.

35. தமிழிலக்கிய வரலாறு (15ம் நூ) மு. அருணாசலம், காந்தி வித்தியாலயம், மாயூரம்-1969

36. தாயுமானவர் பாடல்கள், தபோவன வெளியீடு.

37. திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும், மு. சண்முகம் பிள்ளை, சென்னை பல்கலைக் கழகம். 1971

38. திருக்கோவையார், கழக வெளியீடு-1970

39: திருப்பகழ் (அருணகிரிநாதர்), கழக வெளியீடு

40. திருப்புகழ் பொழிப்புரை, பொன், சுப்பிரமணிய பிள்ளை, திருக்கார்த்திகைத் திருநாள் வெளியீடு. திருவிடைமருதூர். 1968.

41. திருப்புகழ் மூலமும் மெய்ஞ்ஞான விரித்தியுரையும், இரத்தின நாயகர் & சன்ஸ் வெளியீடு. சென்னை-1.

42. திருப்புகழ் விரிவுரை, கிருபானந்த வாரியார் சுவாமிகள்.

43. திருமிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் கும்பாபிஷேக மலர் 1974.

44. திருவள்ளுவரின் திருக்குறள், பரிமேலழகர் உரை, சக்தி காரியாலயம். சென்னை-1957.

45. திருவிளையாடற் புராணம் (மதுரைக்காண்டம்) அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் வெளியீடு

46. தேவி மகாத்மியம், ராமகிருஷ்ண மடம், சென்னை-4.

47. தொல்காப்பியம், கழக வெளியீடு

48. நந்திக் கலம்பகம், பாரி நிலையம், சென்னை-1 1963

49. நாலடியார், கழக வெளியீடு,

50. பக்தி இலக்கியம், ப. அருணாசலம் பாரி நிலையம்,

51. பழந்தமிழ் சி. இலக்குவனார், வள்ளுவர் பதிப்பகம் புதுக்கோட்டை. 1971.

52. பன்னிரு பாட்டியல், கழக வெளியீடு

53. பிங்கல நிகண்டு,

54. புறப்பொருள் வெண்பா மாலை, உ. வே. சா. விளக்க வுரையுடன்

55. மணிமேகலை, கழக வெளியீடு. சென்னை-1

56. மதுரைக்கலம்பகம், கழக வெளியீடு

57. மதுரைத் தமிழ்ப்பேரகராதி:

58. மதுரை திருமிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகா கும்பாபிஷேக மலர், 1963

59. மாநகர் மதுரை, ச. சாம்பசிவனார். மதுரை

60. மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ், குமரகுருபரர், கழக வெளியீடு. சென்னை-1. 1935

61. முருகவேள் பன்னிரு திருமுறை (திருப்புகழ்). வ. சு. செங்கல் வராய பிள்ளை. மீனாட்சி கல்யாணசுந்தரம் பதிப்பு. சென்னை-6.

62. யாப்பதிகாரம், புலவர், குழந்தை, பாரி நிலையம். சென்னை-1968

63. யாப்பு, பாட்டியல் தொகை. டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்

64. வடசொற்றமிழ் அகர வரிசை. கழக வெளியீடு 1965

65. ஸ்ரீதேவி பாகவதம், அரு. இராமநாதன். சென்னை-21

66. Sakti Cult in Ancient India, Dr. Pushpendra Kumar Sharma M A ,Ph.D.F.R.A.S. (London) Bharatiya Publishing House Varanasi-1974.